# ஓ பக்கங்கள்
2010-11













நம்மைச் சுற்றி

நம்மைப் பற்றி

விமர்சனக் கட்டுரைகள்



பக்கங்கள்

2010-11

பகுதி-1

ஞாநி

ஞானபாநு

39, அழகிரிசாமி சாலை,
கலைஞர் கருணாநிதி நகர்
சென்னை - 600 078
தொலைபேசி : 9444024947
e-mail : gnanisankaran@gmail.com

நூல் : கட்டுரைகள்
பொருள் : சமூகம், அரசியல், வாழ்க்கை
உரிமை : ஆசிரியர்
பக்கங்கள் : 224
முதல் பதிப்பு : டிசம்பர் 2011
டிசைன் டீம் : சத்யன் லே அவுட் சென்னை 5
பின் அட்டைப் புகைப்படம் : எஸ்.ஆர்
விலை : ரூ.100/-
அச்சு : சேகர் ஆஃப்செட் சென்னை 5
விநியோகம் : நியூ ஹொரைஸன் மீடியா
33/15, எல்டாம்ஸ் சாலை
சென்னை 600018
தொலைபேசி: 044 42009601/03/04
வெளியீடு : ஞானபாநு பதிப்பகம்
39 அழகிரிசாமி சாலை
கலைஞர் கருணாநிதி நகர்
சென்னை 600078
தொலைபேசி: 9444024947

Book : Collection of Essays
Subject : Current Affarirs, Politics, Society and life
Copyright : Author
Pages : 224
First Edition : December 2011
Design Team : Satyan Layout, Chennai-5. 044-42663451
Back Wrapper Photograph : S.R.
Price : Rs.100/-
Printed by : Sekar Offset, Chenai 5
Distributed by : New Horizon Media
33/15 Eldams Road
Chennai 600 018
Phone: 044 42009601/03/04
Published by : Gnanabanu pathippagam
39 Alagirisami road
Kaligner Karunanidhi nagar
Chennai 60078
Phone: 9444024947



தமிழ் இதழியல் வரலாற்றில் ஆனந்த விகடன், குமுதம், கல்கி என்று மூன்று இதழ்களில் இடம் மாறித் தொடர்ந்து 2005லிருந்து ஏழு ஆண்டுகளாக வெளியாகிவரும் ஒரே பத்தியான 'ஓ' பக்கங்கள் பகுதியை எழுதிவருவது எனக்குப் பெருமையா, பின்னடைவா என்று தெரியவில்லை. ஒரே பத்திரிகையில் தொடர்ந்து எழுதமுடியாத இதழியல், அரசியல் சூழல் இருப்பது எழுத்தாளர்களுக்குமட்டுமல்ல, சமூகத்துக்கே பின்னடைவுதான். ஒரு பத்திரிகையில் நிறுத்தினாலும் இன்னொரு பத்திரிகையில் தொடரமுடிவது என்பது எனக்கு தனிப்பட்ட முறையில் மகிழ்ச்சிதான்.

பல பத்திரிகைகளைப் படிக்கும் பழக்கம் உள்ள வாசகர்கள் மிகவும் குறைவு. எனவே விகடனிலோ குமுதத்திலோ என்னைப் படித்துக் கொண்டிருந்த வாசகர், அதில் நிறுத்தப்பட்டபின்னர் என்னை எங்கேனும் பொது இடத்தில் சந்தித்தால், 'ஏன் சார் இப்பல்லாம் 'ஓ' பக்கங்கள் எழுதறதில்லே?'' என்று கேட்பது எனக்கு இப்போது பழகிப்போய்விட்டது. விகடன் வாங்குபவர் கல்கி வாங்குவதில்லை. கல்கி வாங்குபவர் குமுதம் வாங்குவதில்லை. குமுதம் வாங்குபவர் விகடனோ கல்கியோ பார்ப்பதில்லை. இந்த மூன்றையும் படிக்காமல் இணையத்தில் மட்டும் படிப்பவர்களும் உண்டு.

நேரடியாகப் புத்தகங்களின் மூலம் மட்டும் அதிக வாசகர்களை சென்றடைய முடியாது. லட்சக்கணக்கில் விற்கும் பத்திரிகைகளில் வெளியாகும்போது பல ஆயிரம் வாசகர்கள் படிக்கிறார்கள். புத்தகங்களின் ஒரு பதிப்பு விற்பனை என்பது இன்னும் தமிழில் ஆயிரம் பிரதிகள்தான். பல பதிப்புகள் வெளிவந்து பல்லாயிரம் பேரை எட்டும் நிலை என்பது பிரபலமான எழுத்தாளர்களுக்குக் கூட இன்னும் ஒரு கனவுதான். எழுபதுகளின் இறுதியில் ஒரு நாவலை பெட்டிக் கடைகள் மூலம் ஒரு லட்சம் பிரதிகள் விற்கச் செய்த ஜெயகாந்தனின் சாதனையும் வீச்சும் இரண்டாயிரங்களில் மாறிவிட்ட மீடியா சூழலில் சாத்தியமே இல்லை. எனவே கிடைக்கும் முற்றத்தில் ஆடவேண்டிய நாட்டியக்காரியாக எழுத்தாளன் இன்று இருக்கிறான். கோணல் முற்றங்கள் பற்றி அவன் குறைப்பட உரிமையில்லை. கோணலை மீறிய கலை அனுபவத்தை எதிர்நோக்கும் பார்வையாளனின் விருப்பம் மட்டுமே அவன் கவனத்துக்குரியது.

''கல்கியிலும் 'ஓ' பக்கங்கள் நிறுத்தப்பட்டால் அடுத்து எங்கே எழுதுவீர்கள்? எனவே யாரும் நிறுத்த முடியாத இடமான இணையத்தில் எழுதுங்கள்'' என்றார் ஒரு வாசகர். இணையத்துக்காக மட்டும் எழுதுவதில் எனக்கு இன்னும் தயக்கங்கள் உள்ளன. இணையத்தில் வாசிப்பவர்கள் பெருவாரியாக தமிழகத்தில் வாழ்பவர்கள் அல்ல.அவர்களும் வாசிப்பது மகிழ்ச்சிதான். ஆனால் தமிழில் அச்சில் வெளிவரும் எந்தப் பத்திரிகையானாலும், அது பெருவாரியாக தமிழ்நாட்டில் குடியிருக்கும் இங்கேயே வாழும் தமிழ் வாசகர்களிடையேதான் விற்பனையாகிறது. அவர்களே என் முதன்மையான இலக்குவாசகர்கள். அவர்கள்தான் இங்கே இருக்கும் அரசியல், பண்பாட்டு, சமூக தளங்களில் மாற்றங்களை ஏற்படுத்தமுடியும் என்று நான் நம்புகிறேன். அதற்கான சிந்தனையைத் தூண்டுவதுதான் என் எழுத்தின் நோக்கம். அதற்கு இப்போது உதவுகிற கல்கிக்கும் வாசகர்களுக்கும் என் நன்றி.

அன்புடன்
**ஞாநி**
சென்னை 78
2011 மார்கழியில் பிறந்த நாளன்று

# உள்ளே...

# நமக்கு நாமே திட்டம் ?

கல்கி இதழில் நான் எழுதும் முதல் தொடர் பகுதி இதுவேயாகும். என்னுடைய இரண்டு சிறுகதைகள் எழுபதுகளில் கல்கியில் வெளிவந்திருக்கின்றன. அதில் ஒரு கதை 'டெலிவிஷன்'. நேரடி ஒளிபரப்பில் பங்கேற்கும் ஒரு வேலையற்ற பட்டதாரி இளைஞன், யாரும் எதிர்பாராதபோது லஞ்சம் ஊழல் பற்றி பகிரங்கமாகப் பேசி எல்லாரையும் அதிர்ச்சிக்குள்ளாக்குவதைப் பற்றிய கதை. இது வெளியானதும் அப்போது தூர்தர்ஷனில் நேரடி ஒளிபரப்புகளை தற்காலிகமாக நிறுத்திவிட்டார்கள். வெவ்வேறு தேர்தல் சமயங்களில் சிறப்பு நிருபராகக் கல்கி சார்பில் சென்று தொகுதி நிலவரங்கள் பற்றி சில கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். 1978ல் நாங்கள் பரீக்ஷா நாடகக் குழு தொடங்கியபோது. முதல் நாடகம் பற்றி எழுதிய ஒரே வார இதழ் 'கல்கி'தான்.

லஞ்சம் ஊழல் இல்லாத நேர்மையான அரசு நிர்வாகம் வேண்டும், சக மனிதர்களிடம் அன்பும் சமத்துவமும் பேணும் வாழ்க்கை நெறி குழந்தையிலிருந்தே ஊட்டுவிக்கப்படவேண்டும், ஆபாசமும் வக்கிரமும் வன்முறையும் ஆதிக்கம் செலுத்தாத கலை இலக்கியச் சூழல் வேண்டும் என்ற பார்வைகள்தான் நானும் 'கல்கி' இதழும் சந்திக்கும் புள்ளிகள். என்னை 'ஓ' போடவைக்கும் ஆச்சரியமான, அதிர்ச்சியான, அவலமான, அக்கறைக்குரிய விஷயங்களைப் பற்றி இங்கே வாசகர்களுடன் பகிர்வதே இந்தப் பகுதியின் நோக்கம். பல விஷயங்களைப் பற்றி நாம் கருத்து உடன்படலாம்; மாறுபடலாம். ஆனால் எல்லாவற்றைப் பற்றியும் விவாதிப்பதற்கும் சிந்திப்பதற்குமான ஒரு கருத்துச் சுதந்திரச் சூழல் தேவை என்பதே நம்மை இணைக்கும் ஒற்றைப் பார்வை.

பொதுவாக நடிகர்களுக்குக் கூச்சம் இருக்கக்கூடாது என்பது நடிப்பின் தேவைகளில் ஒன்று. எந்தப் பாத்திரத்தையும் ஏற்று நடிக்க அப்போதுதான் முடியும். முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி வசனகர்த்தாவாக நாடகத்திலும் சினிமாவிலும் பெயர் வாங்கியவர். நடிகராக அல்ல. ஆரம்ப நாட்களில் ஒரு சில நாடகங்களில் நடித்திருக்கிறார். அப்போதுதான் அவருக்குக் கூச்சம் விட்டுப் போயிருக்கவேண்டும். இன்று தமிழ்நாட்டில் எதைப்பற்றியும் எந்தக் கூச்சமும் இல்லாத அரசியல்வாதிகளில் முதன்மையானவர் அவர் ஒருவர்தான்.

அரசு திட்டங்களுக்கும் கட்டடங்களுக்கும் தலைவர்களின் பெயர் சூட்டும் வழக்கம் அங்கொன்றும் இங்கொன்றுமாக அபூர்வமாக இருந்ததை, எழுபதுகளில் தான் ஆட்சிக்கு வந்தபிறகு மிகப் பெரிய அளவில் விரிவுபடுத்தியவர் கலைஞர் கருணாநிதி .

இதற்கு முன்பெல்லாம் அரசு திட்டங்களுக்கு பெரியார்,அண்ணா பெயரையோ அஞ்சுகம் அம்மையார் பெயரையோ முத்துவேலர், முத்துலட்சுமி பெயர்களையோ சூட்டி கொண்டிருந்தவர் இப்போதெல்லாம் தன் பெயரையே சூட்டிக் கொண்டிருக்கிறார். கலைஞர் காப்பீட்டு திட்டம், கலைஞர் வீட்டு வசதி திட்டம், கலைஞர் மாளிகை என்று பெயர்கள் சூட்டப்படுகின்றன.

அரசாங்கத்தின் ராணி மேரி மகளிர் கல்லூரியில் புதிய கட்டடத்துக்கு தன் பெயரைச் சூட்டிவிட்டு தானே அதைத் திறந்தும் வைத்திருக்கிறார். ஒப்புக்காக அதை திறக்கப் பேராசிரியர் அன்பழகனாரைக் கூட அழைக்கவில்லை. இன்னும் பாக்கியிருப்பது தனக்கான சிலை, தன் உருவப்படம், தனக்கான அருங்காட்சியகம். இவற்றையும் அவரே திறந்துவைப்பதுதான்.

கலைஞர் பெயர் சூட்டப்பட்ட வீட்டு வசதி திட்டம் மத்திய அரசின் நிதி உதவியுடன் நடக்கிறது என்று கூட்டணியை 'வலி'க்கச் செய்யும் ஒரு பேச்சை ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் பேசியதும், அதற்கு கருணாநிதி ஒரு விரிவான பதில் அறிக்கை வெளியிட்டார். கலைஞர் வீட்டு வசதி திட்டம் முழுக்க மாநில நிதியில் நடக்கிறது. மத்திய அரசின் இந்திரா காந்தி திட்டத்துடன் அதை இளங்கோவன் குழப்பிக் கொண்டு விட்டார் என்பதுதான் அறிக்கையின் சாராம்சம். ஆனால் மாநில அரசு நிதியில் நடப்பதால், அதற்கு தன் பெயரை ஏன் சூட்டவேண்டும் என்பது பற்றி பதிலே கிடையாது.

இதில் இன்னொரு பிரச்சினை என்ன என்றால் கலைஞர் என்பதைத் தன் பெயர் என்று கலைஞர் கருணாநிதியே நம்பத் தொடங்கிவிட்டார் என்பதுதான். அதனால்தான் ஜெயலலிதா

தன்னைக் கருணாநிதி என்று குறிப்பிட்டுப் பேசுவதைக் கண்டித்து ஒரு பொதுக் கூட்டத்தில் பொரிந்து தள்ளியிருக்கிறார். என் வயது என்ன, உன் வயது என்ன என்றெல்லாம் ஏகவசனம் வேறு. கூடவே நான் வயதில் பெரியவன் என்பதால் உன்னைக் குழந்தையிலிருந்தே எனக்குத் தெரியும் என்பதால் ஏகவசனத்தில் கூப்பிடும் உரிமை எனக்கு உண்டு என்று சமாதானம் வேறு.

ஒருவரை அவர் பெயர் சொல்லி அழைப்பது தவறு என்ற விசித்திரமான பண்பாடு தமிழக அரசியலில் மட்டும்தான் இருக்கிறது. இதில் இடதுசாரிக் கட்சிகளைத் தவிர மீதி எல்லா கட்சிகளும் தங்கள் தலைவர்களுக்கு அடைமொழி சூட்டும் கலாசாரத்தில் விழுந்திருக்கின்றன.

தமிழ்நாட்டுக்கு வெளியே பத்திரிகையாளர்கள் பிரதமரை மிஸ்டர் மன்மோகன்சிங் என்றோ மிஸ்டர் ப்ரைம் மினிஸ்டர் என்றோ முகத்துக்கு நேரே கூப்பிடுகிறார்கள். இங்கே அப்படிப் பேசினால் உதை விழும். அலுவலகத்துக்கு போன் செய்து நிருபரைப் பற்றிப் புகார் செய்வார்கள்.

ஜெயலலிதா தன்னைக் கருணாநிதி என்று அழைப்பது பண்பாட்டுக் குறைவு என்று அறிக்கை விடுத்திருக்கும் இதே கருணாநிதிதான், தொடர்ந்து தன் ஆட்சியை மைனாரிட்டி தி.மு.க அரசு என்று ஜெயலலிதா பேசினால், அவரை திருமதி ஜெயலலிதா என்று அழைப்பேன் என்று பண்பாடு பொங்கித் ததும்பும் ஓர் எச்சரிக்கையை வெளியிட்டார். ஜெயலலிதா திருமதியா இல்லையா என்பதற்கும் தி.மு.க மைனாரிட்டி அரசா இல்லையா என்பதற்கும் என்ன தொடர்பு இருக்க முடியும் ?

உலகத்தில் எந்த நாட்டிலும் இங்குள்ளது போல அரசியல்வாதிகளின் பெயர் சூட்டும் கலாசாரம் இல்லை. மிகப் பெரும் தலைவர்களின் பெயர்களை விமான நிலையத்துக்கோ நூலகத்துக்கோ சூட்டும்போது கூட அவர் இறந்த பிறகே சூட்டுகிறார்கள். சிலைகள் வைப்பதும் அப்படித்தான்.

ஜாதிச் சண்டைகள் வருகின்றன என்பதற்காக அரசு போக்குவரத்துக் கழகங்கள், மாவட்டங்கள் பெயர்களில் இருந்த தலைவர்கள் பெயர்களையெல்லாம் நீக்கி உத்தரவிட்டவர் கலைஞர் கருணாநிதி. தன் நெஞ்சறிவது பொய்யற்க என்ற கூச்சம் இன்னும் கொஞ்சமேனும் அவருக்கு மீதம் இருக்குமானால், உடனடியாக அரசு திட்டங்கள், கட்டடங்கள் பெயர்களிலிருந்து தன் பெயரை நீக்க அவர் உத்தரவிட முன்வரவேண்டும். இல்லாவிட்டாலும் பின்னாளில் ஆட்சி கைமாறும்போது, இந்தப் பெயர்களெல்லாம் அடுத்த ஆட்சியாளரால் நீக்கப்படும் என்ற உண்மையாவது

அவருக்கு உறைக்க வேண்டும்.

இன்னும் நூறு வருடம் கழித்து வரும் தமிழ்க் குழந்தைகள் இப்படித் தன் பெயரை தானே சூட்டி மகிழ்ந்த தலைவர்கள் பற்றி என்ன நினைப்பார்கள் என்று தயவுசெய்து கற்பனை செய்து பாருங்கள். கூச்சமாக இருக்கும்.

## இந்த வாரப் பூச்செண்டு

18 வயதில் பத்தாவது வகுப்புப் படிப்பு மட்டும் முடித்துவிட்டு அரசுப்பணியில் சேர்ந்து 37 வருடப் பணிக்குப் பிறகு ஐ.ஏ.எஸ் அதிகாரியாக உயர்வு பெற்றிருக்கும் முனுசாமிக்கு இ.வா.பூ.

## இந்த வாரத் திட்டு

காமன்வெல்த் விளையாட்டுப் போட்டி ஏற்பாடுகளில் பெரும் ஊழல்கள் நடப்பது அம்பலமாகி தனக்கு நெருக்கமான அதிகாரிகள் சிக்கியபிறகும், தார்மிகப் பொறுப்பேற்று பதவியிலிருந்து விலகாமல் அடம் பிடிக்கும் மத்திய அமைச்சர் சுரேஷ் கல்மாதிக்கு இ.வா.தி.

## இந்த வார ஏமாற்றம்

மத்திய அமைச்சர் அழகிரி நாடாளுமன்றத்தில் தமிழில் பேச அனுமதி கிடைக்கும்வரை பேசாமல் இருந்த விரதத்தை முறித்து ஆங்கிலத்தில் எழுதிவைத்துப் படித்தது இ.வா.வருத்தம். எம்.பி.கள் தமிழில் பேசலாம். அது மொழிபெயர்க்கப்படும்.ஆனால் அமைச்சர் பேசக் கூடாது என்ற விசித்திரமான விதி அழகிரியால் தவிடுபொடியாகும் என்று எதிர்பார்த்து ஏமாந்தேன்.

## இந்த வார மகிழ்ச்சி

ஒவ்வொரு வருடமும் ஈரோடு புத்தகத் திருவிழாவில் பள்ளி மாணவர்களுக்கு உண்டியல்கள் தருகிறார்கள். அதில் அடுத்த வருடம் வரை சேமித்து வைத்த தொகையுடன் உண்டியலை அடுத்தப் புத்தகத் திருவிழாவுக்குக் கொண்டு வந்தால் சலுகைகள் தருகிறார்கள். அப்படி இந்த வருடம் சுமார் 6 ஆயிரம் உண்டியல்கள் திரும்பி வந்திருக்கின்றன என்று அமைப்பாளர் எழுத்தாளர் ஸ்டாலின் குணசேகரன் தெரிவித்ததுதான் இ.வா.ம.

## இந்த வாரக் கேள்வி

பிரணாப் முகர்ஜிக்கு செல்போனில் தேவையற்ற அழைப்பு வந்ததும் அவற்றை நிறுத்த உத்தரவிடும் அமைச்சர் ராசாவுக்கு, இதுவரை இது பற்றி வாடிக்கையாளர்கள் பலர் பல முறை புகார் செய்ததும் புலம்பியதும் தெரியவே தெரியாதா ?

*கல்கி 14.8.2010*

# பொய்களைத் திணிக்காதீர்கள்

ஐ.ஏ.எஸ் அதிகாரி உமாசங்கர் மீது தி.மு.க அரசு எடுத்திருக்கும் நடவடிக்கை பற்றிய ஜெயலலிதாவின் கண்டனத்துக்கு பதில் சொன்ன தமிழக அரசு உமாசங்கரே எழுப்பியுள்ள பிரச்சினைகளுக்கு பதில் சொல்லவில்லை. தன் மீதான அரசு நடவடிக்கைகளுக்கு தடை கோரி அவர் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்திருக்கிறார். எனவே அந்த விவரங்களுக்குள் நாம் போக வேண்டியதில்லை.

அதே சமயம் உமாசங்கர் தேசிய தாழ்த்தப்பட்டோர் பழங்குடியினர் ஆணையத்திடம் தமிழக முதலமைச்சர், அவரது குடும்பத்தினர் ஆகியோரிடமிருந்து தனக்குப் பாதுகாப்பு கேட்டு புகார் கொடுத்திருக்கிறார். அந்தப் புகாரில் அவர் தெரிவித்திருக்கும் விஷயங்கள் பொய்யாக இருந்தால் அரசு அவர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும். உண்மையாக இருந்தாலும் சம்பந்தப்பட்டவர்கள் மீது (தன் மீது தானே!) நடவடிக்கை எடுத்தாக வேண்டும்.

உமாசங்கர் சொல்லியிருக்கும் விஷயங்களின் அடிப்படையில் கீழ்க் கண்ட கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டிய கடமை முதலமைச்சருக்கு இருக்கிறது.

**கேள்வி 1:** அ.தி.மு.க ஆட்சியின்போது நடந்த சுடுகாட்டுக் கூரை ஊழலில் உமாசங்கர் தாக்கல் செய்த அறிக்கையின் அடிப்படையில் உயர் நீதிமன்றம் சி.பி.ஐ விசாரணைக்கு உத்தரவிட்டது. ஏன் இதுவரை அந்த ஊழலில் சிக்கியவர்கள் மீது தி.மு.க அரசு தொடர் நடவடிக்கை எடுக்கவில்லை ?

**கேள்வி 2:** 1996ல் தி.மு.க ஆட்சியில் உமாசங்கர் ஜாய்ண்ட் விஜிலன்ஸ் கமிஷனராக நியமிக்கப்பட்டார். அப்போது அவர் பல ஊழல்கள் பற்றி உயர் அதிகாரிகள் மீது குற்றம் சாட்டி அறிக்கைகள் கொடுத்திருக்கிறார். 1.) சவுத் இந்தியா ஷிப்பிங் கார்ப்பரேஷன் பங்குகள் விற்பனையில் 200 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்ட விவகாரம். 2.) கிரானைட் சுரங்க குத்தகைக்கு கொடுத்ததில் 1000 கோடி ரூபாய் இழப்பு. 3.) தமிழ்நாட்டு வீட்டு வசதி வாரிய மனைகளையும் வீடுகளையும் கற்பனையான பெயர்களில் ஒதுக்கீடு செய்த விவகாரம். 4.) கோவை மருத்துவக் கல்லூரியின் 20 ஏக்கர் நிலத்தை மகளிர் குழந்தை நலம் என்ற போலி சாக்கில் தனியார் க்ளப்புகளுக்குக் கொடுத்த விவகாரம். 5.) மேகமலை வனப்பகுதியில் 7106 ஏக்கர் நிலத்தை ஒரு குடும்பத்துக்கு சட்ட விரோதமாக பட்டா போட்டுக் கொடுத்தது. இந்த முறைகேடுகளில் தொடர்புடையவர்கள் என்று முன்னாள் தலைமைச்செயலாளர் உடபட பல ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் மீது உமாசங்கர் அறிக்கை கொடுத்திருக்கிறார். ஒன்றின் மீதும் நடவடிக்கை எடுக்கப்படாதது ஏன் ?

**கேள்வி 3:** மறுபடியும் 2006ல் தி.மு.க ஆட்சியில் உமாசங்கர் தமிழக அரசின் எல்காட் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநராக நியமிக்கப்பட்டிருக்கிறார். அப்போது அவரை தன் ஆழ்வார்பேட்டை அலுவலகத்துக்கு வந்து சந்திக்கும்படி முதலமைச்சரின் துணைவி ராஜாத்தி அம்மாள் தெரிவித்ததாகவும், இரு முறை சந்தித்ததாகவும் உமாசங்கர் தெரிவிக்கிறார். அப்போது மீனவர்களுக்கான 45 ஆயிரம் வயர்லெஸ் செட்டுகள் வழங்கும் ஒப்பந்தத்தை தான் சொல்பவர்களுக்குத் தருமாறு ராஜாத்தி அம்மாள் வற்புறுத்தியதாகவும் தான் அதற்கு உடன்பட மறுத்துவிட்டதாகவும் உமாசங்கர் கூறியிருக்கிறார். அரசு அதிகாரிகள் யார் யாரை சந்திக்கலாம், எங்கே சந்திக்கலாம் என்று விதிகள் உண்டா? சந்திப்புகளுக்கு பதிவுகள் உண்டா? இந்த சந்திப்புகள் பற்றி அரசு கார் லாக் ஷீட்டுகளில் பதிவுகள் உண்டா? உளவுத் துறை, காவல் துறையிடம் தினசரி முதலமைச்சரை, அவரது நெருங்கிய உறவினர்களை அரசு அதிகாரிகளோ பிறரோ சந்திப்பது பற்றிய பதிவுகள் உண்டா? உமாசங்கர் ராஜாத்தி அம்மாள் சந்திப்பு பற்றி அரசின் நிலை என்ன ?

**கேள்வி 4:** தமிழக அரசுக்கு சொந்தமான் எல்நெட்டின் தலைவராக உமாசங்கர் இருந்தபோது எல்நெட்டுக்கு சொந்தமான 700 கோடி ரூபாய் சொத்து மதிப்புள்ள ஈடிஎல் நிறுவனம் திடீரென்று வேறு தனியார் கைக்கு சட்டவிரோதமாக மாறியதை வெளிப்படுத்த உமாசங்கர் நடவடிக்கை எடுத்தபோது அவர் பதவியிலிருந்து

மாற்றப்பட்டதாக சொல்லுகிறார். ஈ.டி.எல் நிறுவனம், எல்காட்கை விட்டுப் போனது எப்படி, ஏன், யாரால் என்பதை அரசு தெரிவிக்குமா?

**கேள்வி 5:** அடுத்தபடியாக 2008ல் அரசு கேபிள் டி.வி கார்ப்பரேஷனைத் தொடங்கியபோது உமாசங்கரை அதன் நிர்வாக இயக்குநராக முதலமைச்சர் நியமித்தார். முன்னர் ஈஎல்டி முறைகேட்டில் தொடர்புடைய ஐ.ஏ.எஸ் அதிகாரி இங்கே தனக்கு மேலதிகாரியாக இருப்பதால், அவர் கீழ் தான் பணியாற்ற முடியாது என்று முதல்வரிடமே உமாசங்கர் சொன்னதாகக் கூறுகிறார். இந்த கோரிக்கையை ஏற்று, அந்த அதிகாரியை வேறு பொறுப்புக்கு மாற்றிவிட்டு உமாசங்கரை கேபிள் கார்ப்பரேஷன் பொறுப்பை முதல்வர் ஏற்கச் செய்ததாகவும் குறிப்பிடுகிறார். இது பற்றி அரசின் நிலை என்ன ?

**கேள்வி 6:** கேபிள் டி.வி. கார்ப்பரேஷன் பொறுப்பில் தான் இருந்தபோது, அரசுக்கு சொந்தமான கேபிள்களை வெட்டி நாசமாக்கி கிரிமினல் செயல்களில் ஈடுபட்டதற்காக தனியார் கேபிள் டி.வி அதிபர்களான மாறன் சகோதரர்கள், அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி ஆகியோர் மீது தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் நடவடிக்கை எடுத்துக் கைது செய்யவேண்டுமென்று அரசுக்கு அறிக்கைகள் பல முறை அனுப்பியதாக உமாசங்கர் சொல்லியிருக்கிறார். அந்த அறிக்கைகள் மீது அரசு எடுத்த நடவடிக்கைகள் என்ன ?

இந்தக் குற்றச் சாட்டுகள் எல்லாம் யாரோ ஒரு அரசியல்வாதியால் எழுப்பப்படவில்லை. முப்பது வருடங்களாக அரசுப் பணியில் இருந்துவரும் ஓர் ஐ.ஏ.எஸ் அதிகாரியால் எழுத்துப்பூர்வமாக, தேசிய தாழ்த்தப்பட்டோர் ஆணையம் முன்பு வைக்கப்பட்டிருக்கின்றன. இது மிகவும் கவலைக்குரிய , நம் ஆழ்ந்த அக்கறைக்குரிய விஷயம். முதலமைச்சர் கலைஞர் கருணாநிதியின் அரசு மேலே எழுப்பப்பட்டிருக்கும் ஒவ்வொரு கேள்விக்கும் விரிவான நேர்மையான பதில்களை மக்களுக்கு அளிப்பது அவசியம்.

மூடப்பட்ட அரசு கேபிள் டி.வி நிறுவனத்தை மறுபடியும் தொடங்குங்கள் என்று கம்யூனிஸ்ட் தலைவர் தா.பாண்டியன் அண்மையில் கோரினார்.அதற்கு பதில் அறிக்கை அளித்த முதலமைசர் , மூடினால்தானே மறுபடியும் திறப்பதற்கு என்று கேட்டார். அரசு கேபிள் டி.வி நிறுவனம், அது அரசு நிறுவனம் என்பதால் அடக்கமாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறது என்று சொன்னார். இதே அடக்கம் ஏன் அரசின் இதர நடவடிக்கைகளில் மட்டும் இல்லை என்பதை அவர்தான் விளக்கவேண்டும். தமிழில் அடக்கம் என்பதற்கு சமாதி என்றும் ஒரு அர்த்தம் உண்டு.

முத்தமிழ் அறிஞர் என்பதால் சிலேடையாக சொல்லியிருக்கலாமோ என்னவோ!

அரசு கேபிள் டிவியிடம் மொத்தம் 50 ஆயிரம் இணைப்புகள் இருப்பதாகவும் சென்ற வாரம் முதலமைச்சர் தெரிவித்தார். இது முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைப்பதை விட மோசமானது. 'தினமதி' தினசரியின் பத்திரிகையாளர் வி.அன்பழகன் தகவலறியும் உரிமைச் சட்டத்தின் கீழ் இதே முதலமைச்சர் கீழ் இயங்கும் தமிழக அரசிடமிருந்து பெற்றிருக்கும் தகவல்கள் இதோ:

தஞ்சாவூர், கோவை, நெல்லை, வேலூர் ஆகிய நான்கு இடங்களில் அரசு கேபிள் டி.வி தொடங்கப்பட்டது. தஞ்சைக்கு ரூ 7.30 கோடி.கோவைக்கு: 6.78 கோடி. நெல்லைக்கு: ரூ 6.74 கோடி. வேலூருக்கு: ரூ 5.56 கோடி முதலீடுகள். இங்கெல்லாம் மாதாந்தர அலுவலக வாடகை: தஞ்சை ரூ 57,730. கோவை: ரூ 38,500. நெல்லை: ரூ 87,358. நெல்லை: ரூ 42,450. நவம்பர் 10, 2009ல் இருந்த் நிலைப்படி, தஞ்சையில் எம்.எஸ்.ஓ எனப்படும் ஒரு சர்வீஸ் ஆபரேட்டர் கூட அரசு கேபிள் டிவியுடன் கிடையாது. தனி கேபிள் ஆபரேட்டர்கள் 32 பேர். மொத்த இணைப்புகள் : 7703. கோவையில் ஒரே ஒரு எம்.எஸ்.ஓ. ஆறு ஆபரேட்டர்கள். மொத்த இணைப்புகள் : 2300. நெல்லையில் எம்.எஸ்.ஓ இல்லை. மூன்று ஆபரேட்டர்கள். 351 இணைப்புகள். வேலூரில் எதுவும் இல்லை. ஆக மொத்தம் இணைப்புகள் வெறும் 10 ஆயிரத்து 354தான். எந்தக் காலத்திலும் 50 ஆயிரம் இணைப்புகள் அரசு கேபிள் டிவி வசம் இருந்ததே இல்லை. முதலமைச்சர் தெரிவித்த 50 ஆயிரம் என்பது முழுப் பொய் என்று அவருடைய அரசின் இன்னொரு துறையே நிரூபிக்கிறது.

இப்போதைய நிலை என்ன என்று அன்பழகன் துருவியதில் ஏப்ரலுக்குப் பின்னர் தஞ்சையில் எல்லாம் மூடப்பட்டுவிட்டன. சாதனங்களை சென்னை அலுவலகத்துக்கு அனுப்பியாயிற்று. நெல்லையிலும் எதுவுமில்லை. கோவையில் 3 ஆபரேட்டர்கள் மொத்தம் வெறும் 600 இணைப்புகள். சென்ற வாரம் அரசு கேபிள் டி.வி நிறுவனத்திடம் இருக்கும் பணத்தை அரசுக்குத் திருப்பி அனுப்பும்படி உத்தரவு போயிற்றாம். சுமார் நூறு கோடி ரூபாய் வரை இதுவரையில் செலவழித்திருக்கும் நிறுவனம் 19 கோடி ரூபாயைத் திருப்பிக் கொடுத்திருக்கிறது.

முதல்வர் அவர்களே, உண்மைகளைச் சொல்ல விரும்பாவிட்டால், மௌனமாக இருங்கள். நாங்கள் புரிந்து கொள்கிறோம். தயவுசெய்து அரை உண்மைகளையும் முழுப் பொய்களையும் எங்கள் மீது திணிக்காதீர்கள்.

## இந்த வார விருதுகள்

தமிழ் பண்பாட்டுக்கான கலைஞர் விருது முரசொலி இதழுக்கும் அதன் நிறுவனர் கலைஞர் கருணாநிதிக்கும் வழங்கப்படுகிறது. சதிகாரி, சண்டாளி, சூழ்ச்சிக்காரி, மொட்டைச்சி, முண்டை முதலிய சொற்களை அறிக்கையிலும் கட்டுரையிலும் பயன்படுத்தி இளம் தலைமுறைக்கு வழக்கொழிந்துவரும் பண்பாட்டுக் கூறுகளை கற்பிக்கும் மாபெரும் பணிக்காக இந்த விருதுகள் வழங்கப்படுகின்றன.

தினசரி சுமார் 30 கோடி ரூபாய்க்கு மது குடிக்கும் தமிழர்கள் ஒரு நாள் குடிக்காமல் இருந்து துயரக்கடலில் மூழ்கி இறந்து விடக் கூடாது என்ற தாயுள்ளத்துடன் டாஸ்மாக் ஊழியர் வேலை நிறுத்தத்தை காவல் துறை உதவியுடன் முறியடித்ததற்காக ‘குடி காத்த கோமான்’ விருது முதல்வர் கலைஞருக்கு வழங்கப்படுகிறது.

## இந்த வார சந்தேகம்

தொடர்ந்து தமிழகம் முழுவதும் மணிக்கணக்கில் மின்வெட்டு அன்றாட வாழ்க்கையை பாதித்துக் கொண்டிருக்கும் வேளையில் உயர் நீதி மன்றம், நேப்பியர் பாலம், அண்ணா மேம்பாலம் முதலியவற்றுக்கு லட்சக் கணக்கான ரூபாய் செலவில் மின் அலங்காரம் செய்யும் ஆட்சியை நீரோவின் வாரிசுகள் என்று அழைத்தால் குற்றமா ? இந்த சமயத்தில் இதையெல்லாம் செய்யவேண்டாம் என்று அமைச்சரிடத்தில் சொல்லும் துணிவு ஒரு ஐ.ஏ.எஸ் அதிகாரிக்குக் கூட இல்லையா?

## இந்த வாரப் பூச்செண்டு:

விபத்து இழப்பீட்டுக்குக் கணக்கிடும்போது ,வீட்டு நிர்வாகம், இதர இல்லப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் பெண்களின் வருமான மதிப்பை கணவர் வருவாயில் மூன்றில் ஒரு பங்கு என்று நிர்ணயித்திருக்கும் அபத்தமான மோட்டார் வாகன சட்டப்பிரிவை திருத்தவேண்டுமென்று உத்தரவிட்டிருக்கும் உச்ச நீதிமன்ற நீதிபதிகள் கங்குலி, சிங்வி ஆகியோருக்கு இ.வா.பூ.

**கல்கி 21.8.2010**

# பிருதிவிராஜ் கபூரும் கருணாநிதியும் ஒன்றா?

கலைஞர் குடும்பத்தின் சினிமா துறை ஆதிக்கம் பற்றி தினமணியில் மதியின் கேலிச்சித்திரம், கலைஞர் கருணாநிதிக்கு எரிச்சலாகிவிட்டது. பிருதிவிராஜ் கபூரின் குடும்பத்தில் மகன்கள், பேரன்கள், கொள்ளுப்.பேரன்கள் நடிக்கவில்லையா ? சிவாஜி கணேசனின் மகனும் பேரனும் நடிக்க வில்லையா? ரஜினியின் மருமகனும் மகள்களும் சினிமாவில் ஈடுபடவில்லையா ? கலைஞர் வீட்டில் மாத்திரம் உதயநிதி, கலாநிதி, தயாநிதி,அருள்நிதி, அறிவுநிதி என்று வந்தால் அது ஆகாது. குறுக்கே நூல் போட்டவர்களுக்கு அது பிடிக்காது என்று பொரிந்திருக்கிறார்.

நண்பர் மதி, கலைஞர் சொல்லும் குறுக்கே போடும் நூலான பூணூலைப் போட்டிருப்பவர் அல்ல. விமர்சனங்களுக்கு நேரடியாக பதில் சொல்ல முடியாத போதெல்லாம் பூணூலில் சரணடைவது கருணாநிதியின் வழக்கம். கலைஞர் குடும்பத்தில் இனியும் பிறக்கக்கூடிய அன்புநிதி, பண்புநிதி, குணாநிதி, தமிழ்நிதி, தேன்மொழி, கவிமொழி, லெனின், ஜீவா என்று யாரானாலும் சினிமாவில் ஈடுபடட்டும். நமக்கு எந்த ஆட்சேபணையுமில்லை. இந்த நிதிகளுக்கெல்லாம் எங்கிருந்து நிதி வருகிறது என்பதுதான் தமிழ் மக்களின் கவலை.

கல்லூரிப் படிப்பை முடித்ததுமே பல கோடி ரூபாய் பட்ஜெட்டில் படம் தயாரிக்கும் வல்லமை கலைஞர் குடும்பத்தில்தான் இருக்கிறதே தவிர, பிருதிவிராஜ் கபூர் குடும்பத்துக்கு இருந்ததாகத் தெரியவில்லை. போட்டி கம்பெனிகளின் கேபிள்களை வெட்டிப் போட்டு அராஜகம் செய்ததற்காக குண்டர் சட்டத்தின் கீழ் கைது

செய்யப்படவேண்டுமென்று கபூர் குடும்ப வாரிசுகள் யாருக்கும் எதிராக எந்த அரசு அதிகாரியும் பரிந்துரை எழுதும் அவலம் நிகழவில்லை.

ஒரு படத்தின் ரிலீஸ் தேதி, எந்தெந்த தியேட்டரில் எத்தனை நாள் என்பதையெல்லாம் கட்டுப்படுத்தி முழு திரையுலகத்தையும் ஆட்டிப் படைக்கும் அதிகாரத்தில் எந்த கபூரும் இருந்ததில்லை. திரையுலக சங்கத் தேர்தல்களில் ஜெயித்த அணியை மிரட்டி, தோற்றதாகக் கையெழுத்து போடச் சொல்லி தன் ஜால்ராக்களை பதவியில் உட்காரவைக்கும் வேலையை ஒரு கபூரும் செய்ததில்லை.

கலைஞர் கருணாநிதி இப்போதெல்லாம் வசனம் எழுதும் ஒரு படம் கூட மக்கள் ஆதரவைப் பெற்று அமோகமாக ஓடுவதில்லை. ஆனால் இந்திய சினிமா வரலாற்றிலேயே ஒரு படத்துக்கு வசனத்துக்காக 50 லட்ச ரூபாய் சம்பளம் அவருக்கு மட்டும் தரப்படும் மர்மம், எந்த கபூருக்கும் புரியவே புரியாது. ராஜ் கபூரின் வசனகர்த்தா கே.ஏ.அப்பாஸ் முதல் இன்று வசூலைக் குவிக்கும் படங்களின் வசனகர்த்தா பாஸ்கர் சக்தி வரை யாருக்கும் இப்படி சம்பளம் கிடைத்ததில்லை.

பரம்பரை மிராசுதாரரான ஜி.கே வாசனின் அறிவிக்கப்பட்ட சொத்து மதிப்பு மூன்று கோடி 78 லட்சம். எந்த சினிமாவுக்கும் கதை வசனம் எழுதி ஒரு நாளும் சம்பாதிக்காத கனிமொழியின் சொத்து எட்டு கோடி 56 லட்சம்; அழகிரியின் சொத்து மதிப்பு 19 கோடி என்று தேர்தல் ஆணையத்திடம் அறிவித்திருப்பதன் மர்மங்கள் கபூர்களுக்குத் தெரியாது. கபூர்கள் முழு நேரம் நாடக மேடையில் நடிகர்களாக உழைத்து சினிமாவுக்கு வந்து சொந்தக் காசில் ஜெயித்தவர்கள். அரசியலுக்காக சினிமாவையும், சினிமாவை ஆதிக்கம் செய்ய அரசியல் அதிகாரத்தையும் கலைஞரும் அவர் வாரிசுகளும் பயன்படுத்துவதால்தான் விமர்சனங்கள் எழுகின்றன. இனியும் எழும்.

இனி இந்த குறுக்கே நூல் போடும் விவகாரத்துக்கு வரலாம். கலைஞர் கருணாநிதியின் கணக்குப்படி தமிழகத்தில் பூணூல் போடும் பார்ப்பன சாதியினரின் எண்ணிக்கை மூன்று சதவிகிதம்தான். ஆனால் மொத்த வாக்காளர்களில் கலைஞர் கருணாநிதியை ஆதரித்து ஓட்டு போடுபவர்கள் எப்போதும் சுமார் 25 சதவிகிதம்தான். மொத்தப் பூணூலார் மூன்று சத விகிதம் பேரும் எதிர்த்ததாக வைத்தாலும், கருணாநிதியை விரும்பாத இதரர் 72 சதவிகிதம். மக்கள் இன்னமும் ஜாதிகளுக்கு அப்பாற்பட்டுதான் ஓட்டு போடுகிறார்கள். ஜாதி அடிப்படையில் மட்டுமே ஓட்டு போட்டார்கள் என்றால் கருணாநிதியின் ஜாதியும்

பூணூலார் ஜாதியும் ஏறத்தாழ ஒரே சதவிகிதம்தான். அவருக்கு 25 சதவிகித ஓட்டு கூட வந்திருக்க முடியாது.

குறுக்கே நூல் போட்டவர்களை நம்பித்தான் கருணாநிதியின் மீடியா வியாபாரங்களே நடந்து வந்திருக்கின்றன. குங்குமம் பத்திரிகையைத் தொடங்கியபோது அவர் ஆசிரியராக அழைத்து வந்தது, பூணூல் போட்ட சாவியைத்தான். நிர்வாகத்தை கவனிக்க நியமித்தது, பூணூல் போட்ட டி.கே.தியாகராஜனைத்தான். பத்திரிகையின் முதல் இதழின் அட்டைப்படத்தில் கண்ணாடியில் முகம் பார்த்து பொட்டு இட்டுக் கொள்ளும் பெண்ணுக்கு பக்கத்தில் சுவரில் தொங்கவிடப்பட்டது காஞ்சி சங்கராச்சாரியார் சந்திரசேகரேந்திரர் படத்தைத்தான். மறைந்த முரசொலி மாறனின் நெருங்கிய நண்பரும் இன்றளவும் தி.மு.க அரசின் ஆதரவுடன் கிரிக்கெட் வாரியப் பதவியில் இருப்பவருமான இந்தியா சிமெண்ட்ஸ் சீனிவாசன், கலைஞரின் ஒரு பேரனுக்கு பெண் கொடுத்த வீட்டார், வக்கீல்கள், ஆடிட்டர்கள் பலரும் குறுக்கே நூல் போட்ட பார்ட்டிகள்தான். பேரன்கள் கம்பெனியின் பெயரான சுமங்கலி என்ற வார்த்தைப் பிரயோகமே 'அவாளு'க்குரியதுதான்.

மீண்டும் சொல்கிறேன். கலைஞர் நேரடியாக விமர்சனங்களுக்கு பதில் சொல்ல வேண்டும். முடியாவிட்டால், ஜாதியம் பேசுவது முனை மழுங்கி துருப்பிடித்த ஆயுதம். அது உதவாது. இன்றைய புதிய வர்ணாஸ்ரமத்தில் ஆதிக்க ஜாதி, கண்ணுக்குத் தெரியாத அதிகாரப் பூணூலை அணிந்திருக்கும் புதிய பார்ப்பனரான கருணாநிதி வகையறாக்களே.

## எதிர்ப்பஞ்சல் அனுப்புங்கள் !

தங்கள் சம்பளத்தை தாங்களே உயர்த்திக் கொள்ளும் உரிமை இந்தியாவில் தனியார் முதலாளிகளுக்கு அடுத்தபடியாக எம்.பிகளுக்கு மட்டுமே இருக்கிறது. மாதம் 16 ஆயிரம் ரூபாய் சம்பளத்தை துறைச் செயலாளர் சமபளத்துக்கு நிகராக 80 ஆயிரம் ஆக்கும்படி பாராளுமன்றக் குழு பரிந்துரைத்தது. மேலே ஒரு ரூபாய் சேர்க்கவேண்டுமென்கிறார் தீவன ஊழல் புகழ் லாலு பிரசாத் யாதவ். துறைச் செயலாளர்கள் சுமார் 25 வருட காலம் அரசுப் பணி செய்துவிட்டு அந்த சம்பளத்தை வந்தடைபவர்கள். எம்.பியைப் போல திடீர் லாட்டரிப் பரிசாக வந்தவர்கள் அல்ல. பதவியில் இருந்துகொண்டே வேறு தொழிலோ வணிகமோ செய்யும் உரிமையும் எம்.பிகளைப் போல அவர்களுக்குக் கிடையாது.

மேலை நாடுகளில் மக்கள் பிரதிநிதிகளுக்கு தரும் சம்பளத்தை விட இந்தியாவில் குறைவு என்பது எம்.பி.களின் இன்னொரு

வாதம். இந்தியாவில் தனியார் அலுவலகத்தில் பணியாற்றும் ஒரு கடை நிலை ஊழியரின் சம்பளம் கூட மேலை நாட்டு கடை நிலை ஊழியருடையதை விடக் குறைவுதான். தினக்கூலியும் இங்கே குறைவுதான். இதையெல்லாம் சமமாக்குவதற்கு உழைத்தபின்னர் எம்.பிகள் தங்களுக்கு உயர்வு கேட்டால் நியாயம். ஏற்கனவே எம்.பிகளின் தொகுதி மேம்பாட்டு நிதியில் பெரும் ஊழல் நடப்பதாக தணிக்கை அறிக்கைகள் சொல்கின்றன. தற்போது ஒரு எம்.பிக்கு சம்பளம் 16 ஆயிரம் தவிர வீடு, டெலிபோன், விமானம், ரயில் டிக்கட், மின்சாரம், தண்ணீர், உதவியாளர் செலவு என்று வருடத்துக்கு சுமார் ஒன்பது கோடி ரூபாய்கள் செலவிடப்படுகின்றன. சம்பளத்தையும் அலவன்சையும் நான்கு மடங்கு கூட்டினால், இது பத்து கோடியை தாண்டிவிடும்.

அவர்களே அறிவித்திருக்கும் சொத்துக் கணக்குகளின்படி இப்போதுள்ள 544 எம்.பிகளில் 315 பேர் கோடீஸ்வரர்கள். புதிதாக ராஜ்ய சபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட 54 எம்.பிகளில் 43 பேரின் சராசரி சொத்து மதிப்பு தலா 25 கோடி ரூபாய்கள் ! சாதாரண இந்தியர்களின் நிலை என்ன ? ஆசிய வளர்ச்சி வங்கியின் இந்த வார அறிக்கைப்படி இந்தியாவின் நடுத்தர வகுப்பினரில் 82 சத விகிதம் பேர், அதாவது 22 கோடி பேரின் சராசரி மாத வருமானம் தனி நபருக்கு அதிகபட்சம் 2000 ரூபாய்தான். இவர்களையே நடுத்தர வகுப்பு என்று சொன்னால் ஏழைகளின் நிலை எப்படி என்று கற்பனை செய்யவே பயமாயிருக்கிறது. மாதம் 10 ஆயிரம் ரூபாய்க்கு அதிகமாக சம்பாதிப்போர் மொத்த மக்கள் தொகையில் 0.0009 சதவிகிதம்தான். அதாவது வெறும் 10 லட்சம் பேர் !

எனவே எம்.பிகள் சம்பளத்தை மேற்கொண்டு ஒரு ரூபாய்கூட உயர்த்த எந்த நியாயமும் இல்லை. சம்பள உயர்வுக்காக அனைத்துக் கட்சி எம்.பிகளும் சேர்ந்துகொண்டு சபைகளை நடக்க விடாமல் செய்தபோது, நம் மக்களுக்கு ரத்தம் கொதித்திருக்க வேண்டும். ஒவ்வொரு ஊரிலும் சாலை மறியல் நடந்திருக்க வேண்டும். நாம் சுரணையற்றவர்களாகிக் கொண்டே போவதுதான் ஊழல் அரசியல்வாதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் வசதியாக இருக்கிறது.

நமக்கு சுரணை இருக்கிறது என்று நிரூபிக்க இதோ ஒரு வாய்ப்பு. மிக மலிவான விலையில் 50 பைசாவுக்குக் கிடைக்கும் ஆயுதம் அஞ்சலட்டை. எம்.பிகளின் சம்பள உயர்வை எதிர்க்கிறோம்; உயர்வை ஆதரிக்கும் எம்.பிகளை அடுத்த தேர்தலில் நிச்சயம் ஆதரிக்க மாட்டோம் என்ற பொருள்படும் கீழ்வரும் ஆங்கில வாசகங்களை அஞ்சலட்டையில் எழுதிக் கையெழுத்திட்டு மக்களவை சபாநாயகருக்கு அனுப்புவோம். கல்கி வாச்கர்களில்

ஒரு 10 ஆயிரம் பேர் ஆளுக்கு பத்து பேர் வீதம் அஞ்சலட்டைகளை அனுப்ப (செலவு ஐந்து ரூபாய்தான்) ஏற்பாடு செய்தால் ஒரு லட்சம் கடிதங்கள், மீரா குமார் மேசையில் குவியும். மக்கள் தங்கள் அராஜகத்தை எதிர்க்கிறார்கள் என்பதை எம்.பிகளுக்குத் தெரியப்படுத்துவோம்.

we, the people of India, condemn MPs hiking their salaries by 400 percent. Any sitting MP supporting hike will not get our vote again. சபாநாயகர் முகவரி : The Speaker, Lok Sabha, 17, Parliament House, New Delhi - 110001 மின் அஞ்சல் : speakerloksabha@sansad.nic.in, lokmail@sansad.nic.in

## இந்த வாரப் பூச்செண்டு:

கலாசார ஒழுக்கக் காவல் வேலை பார்ப்பது போலீஸ் வேலை அல்ல என்று கூறியதற்காக சென்னை காவல் ஆணையர் ராஜேந்திரனுக்கு இ.வா.பூ

## இந்த வாரக் கேள்வி:

விஜய்காந்த் நடிப்பதற்கு வாங்கும் சம்பளத்தில் பெரும்பகுதி கறுப்புப் பணம் என்று முதலமைச்சர் கருணாநிதி அறிவித்திருக்கிறார். இது தெரிந்திருந்தும் ஏன் இதுவரை மத்தியில் கூட்டணி ஆட்சியில் இருக்கும் அவர் நடவடிக்கை எடுக்கவில்லை ? அவரது குடும்ப வாரிசுகள் நடத்தும் சினிமா கம்பெனிகளிலும், அவர் கதை வசனம் எழுதும் சினிமா கம்பெனிகளிலும் அவருக்குப் பாராட்டு விழா நடத்தும் சினிமாக்காரர்களிடமும் கறுப்புப் பணமே கிடையாது என்று அவரால் பிரமாண வாக்குமூலம் தர முடியுமா?

## இந்த வாரத் திட்டு

தான் ஏன் ஐ.ஏ.எஸ் படிக்கவில்லை என்று கூறிய அமைச்சர் பொன்முடி 'ஒருவேளை நான் ஐ.ஏ.எஸ் படித்திருந்தால், கார் கதவைத்தான் திறந்து விட்டுக் கொண்டிருக்க வேண்டும்' என்று சொல்லியிருப்பதற்காக அவருக்கும், இதைக் கேட்டுக் கொண்டு மேடையில் மௌனமாக உட்கார்ந்திருந்ததற்காக மூன்று ஐ.ஏ.எஸ்.அதிகாரிகளுக்கும் இ.வா தி.

தகவல் அறியும் மக்கள் உரிமைக்கான ஆணையத்தின் தலைவர் பதவிக்கு தேர்வு செய்யும் மூவர் குழு (முதலமைச்சர், எதிர்க்கட்சித் தலைவர், ஓர் அமைச்சர்) கூட்டத்தில் கலந்துகொள்ளாததற்காக எதிர்க்கட்சித் தலைவர் ஜெயலலிதாவுக்கு இ.வா.தி.

**கல்கி 21.8.2010**

# ஆட்டோ டிரைவர் ரசிகர் இல்லையா?

இந்த வாரம் எழும்பூர் மியூசியம் அரங்கத்தில் ஒரு நிகழ்ச்சிக்கு சென்றிருந்தேன். இந்த அரங்கம் சென்னையிலேயே எனக்கு மிகவும் பிடித்தமான அரங்கம். அரை வட்ட வடிவில் கேலரி அமைப்பில் பார்வையாளர்கள் அமர்ந்திருக்க, அவர்கள் நடுவில் வந்து நடிக்கும் உணர்வை ஏற்படுத்துவது போன்ற மேடையமைப்பு இருக்கும். பல வரலாற்று சிறப்புகள் மிக்க அரங்கம். ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் இதைக் கட்டுவதற்காக சிறப்பு லாட்டரி குலுக்கல் நடத்தி பணம் திரட்டிக் கட்டப்பட்டது. சிந்தாதிரிப்பேட்டை சென்னையின் கலாசார மையங்களில் ஒன்றாக இருந்த ஐம்பதுகளில், இந்த அரங்கத்தில்தான் பல சபாக்கள் நாடகங்களை நடத்தி வந்தன.தமிழ்நாட்டின் மூத்த, மறைந்த கலைஞர்கள் பலர் இதில் நடித்திருக்கிறார்கள். 1978ல் எங்கள் பரீக்ஷா நாடகக் குழுவின் முதல் நாடகம் இங்கேதான் நடந்தது. அதன்பிறகு சுமார் பத்தாண்டுகளுக்கும் மேல் எங்கள் குழு இந்த அரங்கில்தான் நாடகங்களை நிகழ்த்துவது வழக்கம். 1984ல் ஒரு நாள், இந்த அரங்கில் எங்கள் நாடகத்தின் தொடக்கத்தில்தான் ஒரு மாலை மாற்றல், ஓர் அறிவிப்பு, வந்தவர்கள் அனைவருக்கும் ஒரு கப் காபி என்ற மூன்றே அம்சங்களுடன் என் திருமணம் நடந்தது. தொண்ணூறுகளில் இந்த அரங்கத்தின் வாடகை மிக அதிகமாக்கப்படதும், எங்களால் இங்கே நாடகம் நிகழ்த்த முடியாமல் போய்விட்டது. எங்கள் குழுவின் மூத்த உறுப்பினர்கள் எல்லாருக்கும் இந்த அரங்கம் எங்கள் வீடு போல சகஜமாக மனதுக்கு நெருக்கமாக எப்போதும் இருந்தது. ஒவ்வொரு முறை இந்த அரங்கிற்குச் செல்ல நேர்ந்தாலும், எனக்குப் பழைய நினைவுகளின்

இனிமையுடன் மகிழ்ச்சி அதிகரிக்கும்.

இந்த முறை சென்றபோது முதல்முறையாக எனக்கு பெரும் வருத்தத்தை அளித்தது மியூசியம் அரங்கம். காரணம் அங்கே நடைமுறையில் இருக்கும் விசித்திரமான ஒரு விதிதான்.

அங்கே அன்று நடந்த மேற்கத்திய சேர்ந்திசை நிகழ்ச்சிக்கு நானும் என் ஒரு தோழியும் சென்றிருந்தோம். எங்களிடம் இன்னொரு டிக்கட் இருந்தது. ஆட்டோ டிரைவரான எங்கள் குடும்ப நண்பர் ஜான்சன் எங்கிருக்கிறார் என்று போனில் கேட்டதில் அவர் அருகில் இருப்பதாகச் சொன்னார். அவரைக் கூப்பிட்டதும், அவரும் வருவதாகச் சொன்னார்.சிறிது நேரத்தில் ஜான்சனிடமிருந்து போன் வந்தது. அவரை மியூசியம் வளாகத்துக்குள்ளே இருக்கும் கட்டணப் பார்க்கிங் ஏரியாவில் ஆட்டோவை விட அனுமதியில்லையென்று கேட் கீப்பர்கள் தடுக்கிறார்கள் என்றார். உடனே நான் அரங்கிலிருந்து வெளிச் சுவர் கேட்டுக்கு சென்றேன். பயணிகளை அழைத்து வரும் ஆட்டோவாயிருந்தால், உள்ளே பயணியை விட்டுவிட்டு திரும்பி வெளியே செல்லவேண்டுமென்ற விதியை சரியானதுதான் என்று நானும் ஒப்புக் கொண்டேன். இதே விதி டூரிஸ்ட் வண்டிக்கும் டிராவல்ஸ் வண்டிக்கும், கால் டாக்சிக்கும் உண்டா என்றால் கிடையாதாம்.

ஜான்சன் பயணிகளை அழைத்து வரும் ஆட்டோகாரராக வரவில்லை. மியூசியம் அரங்கில் நிகழ்ச்சிக்கு வந்திருக்கிறார். அவரைப் போலவே நிகழ்ச்சிக்கு வந்திருக்கும் மற்றவர்கள் அவர்கள் வந்த கார்களையும் மோட்டார் சைக்கிள்களையும் வளாகத்தின் உள்ளே இருக்கும் கட்டண பார்க்கிங் ஏரியாவில் நிறுத்தியிருக்கிறார்கள். ஜான்சனிடம் காரோ மோட்டார் சைக்கிளோ இல்லை. அவரிடம் இருப்பது ஆட்டோதான்.; புத்தம் புது சொந்த ஆட்டோ ! அதை மட்டும் அனுமதிக்க முடியாது என்று கேட் கீப்பர்கள் கடுமையாக சொன்னார்கள்.

இது நியாயமில்லை என்று அவர்களிடம் சொன்னேன். நாடகத்திற்கோ கச்சேரிக்கோ, பார்வையாளராக ரசிகராக வரும் ஒருவர் ஆட்டோகாரராக இருந்தால் அவர் தன் வண்டியில்தான் வருவார். அதை பார்க்கிங்கில் அனுமதிக்கத்தான் வேண்டும். பயணிகளை அழைத்து வந்து விட்டுச் செல்லும் ஆட்டோகாரர்களை வெளியேறச் சொல்வது போல, டிராவல் காரையும், கால் டாக்சியையும் கூடத்தான் சொல்ல வேண்டும் என்று வாதிட்டேன். அங்கிருந்த ஐந்து கேட் கீப்பர்களும் ஒப்புக் கொள்ளவே இல்லை. இதுதான் ரூல். நாங்கள் ஒன்றும் செய்ய முடியாது என்றார்கள். உங்கள் மேலதிகாரியின் போன் நம்பரைக் கொடுங்கள். நான்

அவருடன் பேசுகிறேன் என்று கேட்டேன். உனக்கு எதுக்குடா அதையெல்லாம் தரணும் என்றார் ஒருவர்.

என் ரத்தம் கொதித்தது. மியூசியம் வளாக வாசல் கேட்டுக்குக் குறுக்கே சாலையில் படுத்தேன். மேலதிகாரியை இப்போது வரச் சொல்லுங்கள் என்று படுத்தபடியே சொன்னேன். அந்த கேட் கீப்பர்கள் வந்து என்னைக் கையைப் பிடித்து எழுப்பி உட்காரவைத்து, தகராறு செய்யாமல் போ, யாரையும் அழைக்க முடியாது, போன் நம்பரையும் தர முடியாது என்று முரட்டுத்தனமாக சொன்னார்கள். நண்பர் ஜான்சன் நான் சாலையில் குறுக்கே படுத்ததில் பதறிப் போய், தான் நிகழ்ச்சிக்கே வரவில்லை என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுவிட்டார். கேட்கீப்பர்களில் இருவரின் பெயர்களை அவர்கள் சீருடையில் இருந்த பெயர் அட்டையிலிருந்து குறித்துக் கொண்டேன். மீதி இருவரில் ஒருவர் டியூட்டி மாறுகிற நேரமோ என்னவோ, சிவில் உடையில் இருந்தார். இன்னொருவர் தன் பெயர் அட்டையைக் கையால் மறைத்துக் கொண்டார்.

அன்றைய தினம் முதல்முறையாக என்னால் இசையை ரசிக்க முடியாமல் போயிற்று. இசையில் மனம் ஈடுபடவே இல்லை. ஆட்டோ டிரைவர் என்பதற்காக ஒரு பார்வையாளர் பாரபட்சமாக நடத்தப்படும் அநீதியே உறுத்திக் கொண்டிருந்தது. இப்போது மியூசியத்தின் இயக்குநருக்கு இது பற்றிக் கடிதம் எழுதியிருக்கிறேன். இதே வளாகத்தில்தான் கன்னிமாரா நூலகமும் இருக்கிறது. ஒரு ஆட்டோ டிரைவர் நூலகத்துக்கு வந்து படிக்க விரும்பினால், வளாக பார்க்கிங் ஏரியாவில் தன் ஆட்டோவை நிறுத்த முடியாது. மியூசியம் அரங்கத்திற்கு நிகழ்ச்சிப் பார்வையாளனாக தன் ஆட்டோவில் வரமுடியாது. ஆனால், புத்தகங்கள், இசை, நாடகம், கலைகள் போன்றவற்றில் ஆர்வமும் விருப்பமும் உள்ள பல ஆட்டோ டிரைவர்களை எனக்குத் தெரியும். காரிலும் பைக்கிலும் வருபவருக்கு ஒரு விதி, ஆட்டோவில் வருபவருக்கு இன்னொரு விதி என்பது என்ன சமூக நீதி ?

பல ஆட்டோ டிரைவர்கள் தங்கள் தொழிலில் தவறுகள் செய்கிறார்கள் என்றால் அதற்காகப் பொது இடங்களில் அவர்களுக்கான சம உரிமையை மறுக்க முடியுமா? மோசடி செய்கிற வக்கீல்கள், டாக்டர்கள், ஆடிட்டர்கள், பத்திரிகையாளர்கள், அரசியல்வாதிகள் கூடத்தான் இந்த சமூகத்தில் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் காரில் மியூசியம் வளாகத்துக்குள் போய் பார்க்கிங் செய்யலாமென்றால் ஒரு ஆட்டோ டிரைவர் மட்டும் ஆட்டோவுடன் வரக்கூடாதா?

செக்யூரிட்டி கார்டுகளாக/கேட் கீப்பர்களாக இருப்பவர்கள் பெரும்பாலும் சுயபுத்தியற்ற இயந்திரங்கள். விதிகளை

விதித்தவனை விடக் கடுமையாக பிரயோகித்து சாதாரண மக்கள் மீது அதிகாரம் செலுத்துவதில் அற்ப சந்தோஷம் காணக்கூடிய வக்கிர மனநிலை இவர்களில் பலருக்கு இருக்கிறது. விதி விலக்குகள் உண்டு. விதியை அவர்கள் தளர்த்த முடியாது என்கிறபோது அவர்களுடைய மேலதிகாரியுடன் தொடர்பு கொள்ள பொது மக்களைத் தடுக்க அவர்களுக்கு எந்த உரிமையும் இல்லை. மியூசியம் போன்ற பொது இடங்களில் கேட் கீப்பர் இடத்துக்கு அருகேயே, புகார் செய்ய விரும்புவோர் தொடர்பு கொள்ளவேண்டிய மேலதிகாரியின் போன் எண்கள் அடங்கிய அறிவிப்புப் பலகைகள் வைக்கப்படவேண்டும்.

மியூசியம் இயக்குநரிடமிருந்து என்ன பதில் வரும் என்று உங்களோடு நானும் எதிர்பார்க்கிறேன். அவருக்கு அனுப்பிய கடிதத்தின் பிரதியை முதலமைச்சருக்கும் அனுப்பியிருக்கிறேன். பத்தாயிரம் ஆட்டோ பர்மிட்டுகளை வழங்கி விழா நடத்திய முதலமைச்சர், ஆட்டோ டிரைவர்கள் அரசு வளாகங்களில் சமமான குடிமக்களாக நடத்தப்படுவதற்கான ஒற்றை வாக்கிய உத்தரவையும் மியூசியம் இயக்குநருக்கு அனுப்புவார் என்று எதிர்பார்க்கிறேன்.

### இந்த வாரப் பூச்செண்டு

ஆந்திர மாநில வாரங்கல்லில் காக்கேத்திய பல்கலைக்கழகத்தின் சட்டப்படிப்பு தேர்வு எழுதும்போது பிட் அடித்த ஐந்து மாவட்ட சிவில் நீதிபதிகளைத் தயக்கமில்லாமல் பிடித்துக் கொடுத்து இடை நீக்கம் செய்யவைத்த தேர்வுக் கண்காணிப்பாளருக்கு இ.வா.பூ.

### இந்த வார சிந்தனைக்கு

எந்த குற்றமானாலும் மரண தண்டனை தீர்வாகாது என்பதே என் கருத்து. தர்மபுரியில் பஸ்ஸை எரித்து மாணவிகள் சாவதற்குக் காரணமாயிருந்த அ.தி.முகவினருக்கும் அது பொருந்தும். அதிகபட்ச தண்டனையாக ஆயுள் தண்டனை மட்டுமே தரப்பட்டிருக்க வேண்டும்.

### இந்த வாரக் கேள்வி

எம்.பி.கள் சம்பள உயர்வு மசோதா, அமெரிக்காவுக்கு சாதகமான அணு விபத்து இழப்பீடு உச்சவரம்பு மசோதா ஆகியவற்றை நிறைவேற்றுவதில் காட்டிய ஆர்வத்தையும், அதற்காக பாரதிய ஜனதா, லாலு யாதவ், முலாயம் யாதவ்களுடன் சமரசம் செய்த சுறுசுறுப்பையும் பிரதமர் மன்மோகன்சிங் மகளிர் இட ஒதுக்கீடு மசோதாவில் மட்டும் காட்டாதது ஏன் ?

### இந்த வார வேண்டுகோள்

இன்னும் சில வாரங்களில் தமிழ் நாட்டின் சூப்பர் ஸ்டாரும்

சூப்பர் தயாரிப்பாளரும் வழங்கும் எந்திரன் படம் வெளியாக இருக்கிறது. சட்டப்படி 50 ரூபாய் டிக்கட்டை 500 ரூபாய்க்கு விற்பது குற்றம். ஆனால் நடைமுறையில் மெகா பட்ஜெட் படங்களுக்கு அப்படித்தான் நடக்கிறது. தினசரி சுமார் ஆயிரம் காட்சிகள் வீதம் முதல் மூன்று நாட்களில் மட்டும் மூவாயிரம் காட்சிகளில் மொத்தம் முப்பது லட்சம் பார்வையாளர்களிடமிருந்து இப்படி அதிகப்படியாக வசூலிக்கக்கூடிய தொகை சுமார் 120 கோடி ரூபாய்கள் ! இந்த மாபெரும் குற்றம் நடக்காமல் தடுக்க, பொது வாழ்வில் நேர்மை பற்றி அவ்வப்போது பஞ்ச் டயலாக் பேசும் நடிகர் ரஜினிகாந்த் முதல்வரிடம் பேசி காவல் துறையை முடுக்கி விட்டு சட்டப்படியான டிக்கட் கட்டணம் மட்டுமே வசூலிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கோடிக் கணக்கான சினிமா ரசிகர்களின் சார்பில் வேண்டுகோள் வைக்கிறேன்.(யார்கிட்ட என்ன வேண்டுகோள் வைக்கறதுன்னு ஒனக்கு அறிவே கெடையாது என்று என் கணினி எலி முணுமுணுக்கிறது...)

***கல்கி 30.8.2010***

# திருமண வீட்டில் ரசிகருக்கென்ன வேலை ?

நடிகர் ரஜினிகாந்த் வீட்டுத் திருமணம் அவருடைய ரசிகர்களிடையே சர்ச்சைக்குள்ளாகியிருக்கிறது.

இந்த சர்ச்சையை சற்று ஆழமாக நாம் அலசிப் பார்க்க வேண்டியிருக்கிறது.

நடந்தது என்ன ? ரஜினிகாந்த் அவருடைய இளையமகளுக்குத் திருமணம் நடத்தி வைக்கிறார். அதற்கு வருமாறு, முதல்வர் முதல் திருமா வரை, பல அரசியல் பிரபலங்களையும் தான் வேலை செய்துவரும் சினிமாதுறையினரில் பலரையும், நேரில் சென்றெல்லாம் அழைத்திருக்கிறார். பெரும் பொருட் செலவில் ஆடம்பரமாக நடைபெற்ற பல பணக்கார வீட்டுத் திருமணங்களில் இதுவும் ஒன்றாக இருந்திருக்கிறது. அவ்வளவுதான்.

ஆனால், ரஜினி ரசிகர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களான , அவருடைய ரசிகர் மன்றங்களிலிருந்து ஒரு பகுதியினர், ரஜினி தங்களைத் திருமணத்துக்கு அழைக்கவில்லையென்றும், மண்டபத்துக்கு வந்தவர்களை உள்ளே விடவில்லை என்றும் வருத்தங்களையும் கண்டனங்களையும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை சமாதானப்படுத்த, ரஜினி தனி அறிக்கையே வெளியிட்டிருக்கிறார். எல்லா ரசிகர்களையும் அவரவர் குடும்பங்களுடன் அழைத்து, விருந்து கொடுத்து மணமக்களை அவர்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதுதான், தன் விருப்பம் என்றும் அதற்கு முயற்சிப்பதாகவும் அவர் சொல்லியிருக்கிறார் !

எல்லாமே அபத்தமாக இருக்கிறது. இவர் வீட்டு

திருமணத்துக்கு ரசிகர்களை எல்லாம் அழைக்க வேண்டும் என்று கோருவதும் அபத்தம். தனியே உங்களுக்கெல்லாம் விருந்து வைப்பேன் என்று அறிவிப்பதும் அபத்தம். ரஜினியின் அடுத்த படமான 150 கோடி ரூபாய் பட்ஜெட்டில் தயாரித்ததாகச் சொல்லப்படும் எந்திரன், கமர்ஷியல் வெற்றிப் படமாக ஓட வேண்டுமென்றால், குறைந்தது 5 கோடி பேர் ஆளுக்கு சராசரியாக 60 ரூபாய் கொடுத்துப் பார்த்தால்தான் 300 கோடி ருபாய்கள் கலெக்ஷன் வரும்.

படத்தைப் பார்த்தாக வேண்டிய 5 கோடி பேரில் ஒரு கோடி பேர், ஒரு முறைதான் ஒரு படத்தைப் பார்க்கும், சாதாரணப் பார்வையாளர்கள். அப்படியானால், இன்னும் ஒரு கோடி தீவிர 'கலை வெறி', ரஜினிபக்தி உடைய ரசிகர்கள் ஆளுக்கு 4 முறை பார்க்க வேண்டும். எப்படிப் பார்த்தாலும், ரஜினியின் ரசிகர்கள் எண்ணிக்கை ஒரு கோடியாவது இருந்தாக வேண்டும். அதில் பாதி பேர்தான் அதி தீவிர ரசிகர்கள் என்று வைத்துக் கொண்டாலும், 50 லட்சம் பேர் கணக்கு வருகிறது. இவர்கள் ஒவ்வொருவர் குடும்பத்திலும், சராசரி 4 பேர் என்று வைத்துக் கொண்டால், மொத்தம் இரண்டு கோடி பேருக்கு ரஜினிகாந்த் விருந்து நடத்தி மணமக்களை அறிமுகம் செய்யப் போகிறாரா ?

நிச்சயம் இல்லை. முடியாது. அதிகபட்சம் செய்யக் கூடியதெல்லாம் 31 மாவட்டங்களிலும் இருக்கும் மாவட்ட ரஜினி ரசிகர் மன்ற நிர்வாகிகளைக் கணக்கிட்டு ஆயிரம் முதல் 2000 பேரை மட்டும் அழைத்து அவர் ஒரு விருந்து கொடுக்க முடியலாம். இதைக் கூட இப்போது செய்யவேண்டிய அவசியம் என்ன இருக்கிறது ? எந்திரன் ரிலீஸ் ஆகும் சமயத்தில் திருமணம் நடக்காமல், பட ரிலீசே இல்லாத ஒரு காலகட்டத்தில் நடந்திருந்தால், நிச்சயம் கண்டுகொள்ளவே போவதில்லை.

ரசிகர் மன்றத்தின் மூலம்தான் ஒரு ஹீரோ நடிகர், பணம் கொடுத்து எல்லா அரங்குகளிலும் பட்டாஸ் வெடித்து பேனர் கட்டி பாலாபிஷேகம் செய்து தோரணம் கட்டி தன் 'வலிமையை'க் காட்ட முடியும். இதைத்தான் வலிமை என்று அரசியலிலும் சரி, சினிமாவிலும் சரி, பொது மக்கள் பெரிதும் நம்புகிறார்கள். முதல் வாரத்தில் பிளாக்கில் டிக்கட்டுகளை அதிகக் கட்டணத்துக்கு விற்பதற்கு ஸ்பெஷல் ஷோ என்ற பெயரில் ஷோ நடத்த ரசிகர் மன்ற நெட்வொர்க் தேவை.

பல வருடங்கள் தன் பிறந்த நாளன்று ரசிகர்களை சந்திக்காமல் இமயமலைக்கோ, இன்னும் நமக்குத் தெரியாத ஏதாவது மர்மமான ஆன்மீக சக்தி ததும்பும் இடங்களுக்கோ போய்விடும் ரஜினி, இப்போது சலசலப்பை ஏற்படுத்தும் ரசிகர்களை சாந்திப்படுத்த,

அறிக்கை விடுவதன் ரகசியம் எந்திரன் ரிலீஸ்தான் என்பதில் ஒரு சந்தேகமும் இல்லை. பட ரிலீஸ்களையொட்டி வாய்ஸ் கொடுப்பதுதான் அவர் வழக்கம்.

முதலில் சில அடிப்படைப் பிரச்சினைகளைப் பார்ப்போம். ஒருவர் வீட்டுத் திருமணம் என்பது அவருடைய குடும்பத்தின் அந்தரங்கமான விஷயங்களில் ஒன்று. பெரியார் தன் பகுத்தறிவுப் பிரசாரத்தில் பலமுறை வலியுறுத்தியிருக்கிறார் : திருமணம் என்பதே அதைச் செய்துகொள்ளும் இருவர் மட்டுமே சம்பந்தப்பட்டது. அதை அவர்கள் மற்றவர்களுக்குத் தெரியபடுத்தினால் போதும். முடிந்தபிறகு கூட சொல்லலாம்.

அதிகபட்சம் அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்துக்கும் நெருக்கமான உறவினர்கள், நண்பர்களோடு மகிழ்ச்சியைப் பகிரக் கொண்டாடலாம். வேறெவரையும் அதற்கு அழைப்பதற்கு எந்த நியாயமும் கிடையாது. ரஜினி போன்றவர்கள் எல்லா அரசியல் பிரமுகர்களையும் அழைப்பது என்பதே தேவையற்ற செயல்தான். ஆனால் பெரும் பணமும் புகழும் இருப்பவர்கள், தங்கள் பாதுகாப்புக்காக அரசியல் அதிகாரத்தில் உள்ளவர்களை செயற்கையாக நண்பர்களாக்கிக் கொள்கிறார்கள்.

ஒவ்வொரு படமும் கமர்ஷியலாக ஓடி வசூலைக் குவித்து வெற்றி பெற, ஹீரோ நடிகர்களுக்கு ரசிகர்கள் தேவைப்படுகிறார்கள். அப்படிக் குவித்த சொத்தைப் பாதுகாத்துக் கொள்ள அரசியல் செல்வாக்கும் அதிகார சக்திகளின் உதவியும் தேவைப்படுகிறது. எதெதற்கு யாருடைய உதவி தேவையோ அதற்கு மட்டும்தான் அழைப்பார்கள். எனவே படம் பார்க்கத் திரண்டு வா என்று அதிகாரப் புள்ளிகளையும் , ஆசி வழங்கத் திருமணத்துக்குத் திரண்டு வா, என்று ரசிகர்களையும் அழைக்க முடியவே முடியாது. மாற்றி அழைப்பதுதான் அவர்களுக்குச் சரி.

எல்லாருக்கும் இது புரியும். ஆனால் ஏன் சலசலப்பு வருகிறது ? ரசிகனின் மனதில், தான் ஒரு பொதுச் சொத்து, ரசிகனுக்குக் கடமைப்பட்டவன், சமூகத்துக்கு விஸ்வாசமானவன் என்றெல்லாம் ஒரு கருத்தை திட்டமிட்டு வளர்த்து வைத்திருப்பதுதான் காரணம். ஒரு சொட்டு வியர்வைக்கு ஒரு பவுன் கொடுத்த தமிழகம், என்னை ஆளாக்கிய, வாழவைக்கும் தெய்வங்கள் ரசிகர்கள் என்பது போன்ற ஏராளமான பாட்டு, டயலாக் வரிகள் எல்லாம் வெறும் கமர்ஷியல் வெற்றிக்காக, அதை உறுதி செய்யும் ஒரு இமேஜை வளர்ப்பதற்காக, புத்திசாலி கவிஞர்களாலும், வசனகர்த்தாக்களாலும் உருவாக்கப்பட்டவை மட்டும்தான்.

பசங்க, களவாணி என்று ரெண்டு படம் ஓடியதுமே நடிகர்

விமலுக்கு ரசிகர் மன்றப் போஸ்டர்கள் வரத் தொடங்கிவிடுகின்றன. கூத்துப் பட்டறையில் இதெல்லாம் கூடக் கற்றுக் கொடுக்கிறார்களா என்று தெரியவில்லை. ஹீரோ ஒர்ஷிப் என்பது பாகவதர் காலத்தில் இருந்திருந்தாலும் கூட, அது உரு கொடுக்கப்பட்டு ரசிகர் மன்றமாக்கப்பட்டு சினிமா தயாரிப்பாளரின் கல்லாவை நிரப்ப உதவும் கருவியாகவும், நடிகனை செல்வாக்குள்ள பொது பிரமுகனாக மாற்றும் சக்தியாகவும் ஆக்கப்பட்டது எம்.ஜி.ஆர், சிவாஜி காலத்திலேயே இருந்த இந்த அணுகுமுறை ரஜினிகமல் காலத்தில் மேலும் ஒழுங்குபடுத்தபட்டு இப்போது அஜீத், விஜய், தனுஷ், சிம்பு, சூர்யா, கார்த்தி காலத்தில் ஒரு நேர்த்தியான பிசினெஸ் மாடலாகிவிட்டது. இமேஜ் ஒரு முக்கியமான வியாபார அம்சம். ட்விட்டரில் கமெண்ட் அடித்தால் சசி தரூருக்கு மட்டுமல்ல, சினிமா பி.ஆர்.ஓவுக்கும் வேலை போய்விடுகிறது. படத்துக்கு ஓப்பனிங் சுமார்தானாமே என்று அண்மையில் ஒரு பி.ஆர்.ஓ கமெண்ட் அடித்ததால் வேலை இழந்தார். இதையெல்லாம் பொறுத்துக் கொள்ள சினிமாவில் எல்லாரும் மகான்கள் அல்ல.

அரசியல் கட்சிகளின் உள்ளூர் செயலாளர்கள் பொதுக் கூட்டத்துக்கு க்வார்ட்டர் ப்ளஸ் பிரியாணி சம்பளத்தில் ஆட்களை திரட்டுவதைப் போலவே ரசிகர் மன்ற அமைப்பாளர்களும் தங்கள் ரசிகர்களை இன்று டிக்கட், பண விநியோகம் மூலம்தான் திரட்டுகிறார்கள். விடலை மனங்கள் இந்த ஏஜண்ட்டுகளிடம் சிக்கி வசப்படுவதற்கு தயார் நிலையில் இருக்கின்றன. அப்படி மனங்களைத் தயார் செய்வதுதான் சினிமா. பி.ஆர்.ஓக்கள், மீடியாக்கள் வேலையாகக் கருதப்படுகிறது.

தமிழகத்தில் உள்ள இந்த நிலைக்கு நிகரான சீரழிவு வேறு எந்த மாநிலத்திலும் இந்தியாவில் இல்லை. இதற்கு முக்கியமான காரணம் இந்த மாநிலத்தில் இருப்பதைப் போல வேறெங்கும் சினிமாவும் அரசியலும் இந்த அளவு பின்னிப் பிணைந்திருக்கவில்லை. சினிமாகாரன் பாலிடிக்ஸ் செய்வதும், அரசியல்வாதி ஷோ காட்டுவதும் இங்கேதான். டாஸ்மாக் போதைக்கு நிகரான போதையாக, சினிமா போதை இங்கே வளர்க்கப்பட்டிருக்கிறது. இதில் பத்திரிகைகளின் மீடியாவின் பங்கு கணிசமானது. ஒரு கல்லூரி மாணவிக்கு ஓர் இளம் நடிகனுடன், மோட்டார் சைக்கிளில் பின்னால் உட்கார்ந்துகொண்டு, நகரத்தை சுற்றவேண்டுமென்று ஆசை வந்தால், அதை நிறைவேற்றி வைக்கும் ‘மாமா’ வேலையை ஒரு பத்திரிகை செய்கிறது. ரஜினி மகள் திருமணத்தை, நேரடி ஒளிபரப்பு செய்கிறது ஒரு தொலைக்காட்சி.

கயிறு கட்டிக் கொண்டு பாதாள சாக்கடையில் இறங்கி, கழிவுகளில் முங்கிக் குளித்து நகரத்தின் அழுக்கையெல்லாம் சுத்தம் செய்வது எப்படி என்று, தானும் இறங்கி செய்து பார்க்கும் ஆசை ஒருபோதும் நம் இளைஞர்களுக்கு வராது. துப்புரவுத் தொழிலாளியின் ஒரு நாள் வேலையை ஒரு போதும் எந்த டிவியும் நேரடி ஒளிபரப்பு செய்யாது. ரஜினி ரசிகர்களுக்கு வைக்கப் போகும் விருந்தில் கலந்துகொள்ள டிக்கட் கிடைக்குமா, எப்படி அங்கே உள்ளே நுழையலாம் என்று யோசிப்பதற்கு மட்டுமே தயார் செய்து வைக்கப்பட்டிருக்கும் மனங்கள் நம்முடையவை. நாம்தான் அரசியலில் மாற்றம் வருவதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம்.

## இந்த வாரப் பூச்செண்டு

விளையாடும்போது தலையில் அடிபட்டதால் இறந்த, ஆறு வயதுச் சிறுமி கீர்த்தி அபிநயவல்லியின் உடல் உறுப்புகளை உடனடியாக தானம் செய்துள்ள, பெற்றோர், பெரம்பலூர் குன்னம் திருமாந்துறையைச் சேர்ந்த அருள்நம்பி பிரேமா ஆகியோருக்கு.இ.வா.பூ.

## இந்த வாரத் திட்டு

ஆசிரியர் தினமாகக் கொண்டாடப்படும் டாக்டர் எஸ்.ராதா கிருஷ்ணனின் பிறந்த நாள், இந்த முறை ஞாயிறன்று வந்ததால், விழாவை சனிக்கிழமையன்றே கொண்டாடிய மாநில மத்திய அரசுகளுக்கும், பிரதமர் மன்மோகன்சிங்குக்கும் இ.வா.தி. சுதந்திர தினம் ஆகஸ்ட் 15 ஞாயிறன்று வந்தால், ஆகஸ்ட் 14 அன்றே கொடி ஏற்றிக் கொண்டாடிவிடுவார்களா?

## இந்த வாரக் கேள்வி

பல வருடங்களாக சர்வதேச அளவில் போட்டிகளில் பரிசுகளை வென்றும், பாராட்டுகளைப் பெற்றும் வரும் இந்தியாவின் மணற் சிற்பக் கலைஞர் சுதர்சன் பட்நாயக், இதுவரை சரியான வேலை இல்லாமல் சிரமப்பட்டு வருகிறாராம். வயது 41 ஆகிவிட்டது. முயற்சி செய்தும் அரசு வேலை கிடைக்கவில்லை. கிரிக்கெட் விளையாட்டு என்றால் வீடும் தொகையும் வாரி வழங்கும் அரசாங்கங்களும் தனியார் நிறுவனங்களும், வித்யாசமான அபூர்வமான கலைத்துறையில் சாதித்திருப்பவரைக் கண்டுகொள்ளாமல் இருப்பது ஏன் ? இளைஞர்களுக்கு மணற்சிற்பக் கலையைக் கற்றுத்தரும் வேலையை பட்நாயக்கிற்கு அளித்து, நிரந்தர மாத வருவாயக்கு அரசு ஏற்பாடு செய்யலாமே ?

***கல்கி 6.9.2010***

# மன்மோகன் தாத்தா, நீங்க நல்லவரா, கெட்டவரா?

இதில் எது சரி ?

"வறுமையை ஒழிப்பதற்கான வளர்ச்சித் திட்டங்கள் முக்கியமானவைதான். ஆனால் சுற்றுச்சூழலை பலி கொடுத்து அதைச் செய்ய முடியாது"

"சுற்றுச் சூழல் முக்கியமானதுதான். ஆனால் வளர்ச்சித் திட்டங்களை அதற்காக பலி கொடுக்க முடியாது."

சாதாரண காமன்சென்ஸ் உள்ள யாரானாலும் முதல் வாக்கியம்தான் சரி என்பார்கள். ஏனென்றால், சுற்றுச் சூழல் நாசமாகிக் கொண்டே போனால், எந்த வளர்ச்சித் திட்டமும் வேலை செய்யாது, ஏழ்மை, வளமை என்பதற்கெல்லாம் எந்த அர்த்தமும் இல்லாமற் போய்விடும். இயற்கை அழிய அழிய மனிதன் வாழ்வது சிரமமாகிவிடும், என்பது எந்த சின்ன மூளைக்கும் கூடப் புரிந்த விஷயம்தான்.

ஆனால் பொருளாதார அறிஞர் என்று புகழப்படுகிற நம் பிரதமர் மன்மோகன்சிங்குக்கோ இரண்டாவது வாக்கியம்தான் சரியாகப் படுகிறது. சுற்றுச் சூழல் அமைச்சர் ஜெய்ராம் ரமேஷ், சூழல் பாதுகாப்பிற்காக சில வளர்ச்சித் திட்டங்களை எதிர்ப்பதைப் பற்றி பத்திரிகையாளர்களிடம், இந்த அரிய முத்தை உதிர்த்திருக்கிறார் பிரதமர்.

மன்மோகனுக்கு நேர்மையானவர், ஊழல் செய்யாதவர், ஒழுக்கமானவர் என்றெல்லாம் பலமான பிம்பங்கள் இருக்கின்றன. ராஜ்யசபை வழியே தேர்வாகி, பிரதமர் ஆவதற்காக, அவருக்கு சம்பந்தமே இல்லாத,

அசாம் மாநிலத்தில் குடியிருப்பதாக தேர்தல் ஆணையத்திடம் அவர் பிரமாண வாக்குமூலம் கொடுத்திருப்பது, எந்த நேர்மை இலக்கணத்தில் வருமென்று எனக்குப் புரியவில்லை.

ஆனால் ஒன்று மட்டும் எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. வெளிநாட்டு கம்பெனிகள், உலக வங்கி, அமெரிக்கா முதலியவற்றின் நலனுக்கு எதிராக இங்கே யார் என்ன சொன்னாலும், செய்தாலும், அதை எதிர்ப்பதும், தடுப்பதும்தான் அவருடைய முக்கியமான வேலையாக இருக்கிறது.

அணுமின் நிலையங்களை இந்தியாவில் தாங்கள் நிறுவினால் , அவற்றில் விபத்து ஏற்பட்டு மக்களுக்கு ஆபத்து நேர்ந்தால் அதற்கு நஷ்ட ஈடாகத் தர வேண்டிய தொகைக்கு உச்ச வரம்பு வைக்க வேண்டும் என்பது வெளி நாட்டு கம்பெனிகளின் கோரிக்கை. மேலை நாடுகளில் அப்படி எந்த உச்சவரம்பும் கிடையாது. அமெரிக்கக் கடலையும் கடற்கரைகளையும், எண்ணெய்க் கசிவால் மாசாக்கியதற்காக பிரிட்டிஷ் பெட்ரோலியம் கம்பெனி எவ்வளவு நஷ்ட ஈடு தரவேண்டும் என்பதை, அமெரிக்க அரசுதான் தீர்மானிக்கிறது.

ஆனால் இந்தியாவில் மட்டும் விபத்து ஏற்பட்டால், ஓரளவுதான் அணு உலைக் கம்பெனி நஷ்ட ஈடு தருமாம். மீதிப் பணத்தை இந்திய அரசு தரவேண்டுமாம். ஆலையின் லாபத்தில் இந்திய அரசுக்கு ஒரு பைசா பங்கு கிடையாது. ஆனால் விபத்து ஏற்பட்டால், அரசு பணம் தரவேண்டும்.

இந்தியாவை இளிச்சவாயனாக்கும் இந்த ஒப்பந்தத்துக்கு முழுக்க உடந்தையாக இருந்தவர் மன்மோகன். இரவு பகலாகப் பேசி, எதிர்க்கட்சியுடன் சமரசம் செய்து அவசரம் அவசரமாக இதற்கான சட்டத்தை அவையில் நிறைவேற்றிய மன்மோகனால், மகளிர் இட ஒதுக்கீடு மசோதாவில் ஏன் எதிர்க்கட்சிகளை சமரசப்படுத்த முடியவில்லை ? முயற்சிக்கவும் இல்லை என்று நாம் யோசிக்க வேண்டும்.

அமெரிக்காவுடன் அணுசக்தி ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதற்காக, ராஜினாமா என்ற மிரட்டலையே அவர் சோனியாவிடமும் காங்கிரஸ் கட்சியிடமும் பிரயோகித்தது நினைவிருக்கலாம்.

விபத்து, நஷ்ட ஈடு என்றதும் தவறாமல் நினைவுக்கு வருவது போபால். இன்று வரை நம்மால், அந்த விபத்துக்குப் பொறுப்பான (பழைய) யூனியன் கார்பைட் ( இப்போதைய) டோ கெமிக்கல்ஸிடமிருந்து சரியான நஷ்ட ஈடும் பெற முடியவில்லை.

ஜாமீனில் ஓடிப்போன கம்பெனி தலைவர் ஆண்டர்சனை கொண்டு வந்து கூண்டிலும் நிறுத்தமுடியவில்லை.

“ஆண்டர்சன், டோ கெமிகல்ஸ் பற்றியெல்லாம் பேசாதீர்கள். அது அமெரிக்கா இந்தியாவில் முதலீடு செய்வதை பாதிக்கும்“ என்று அமெரிக்காவின் உயர் பாதுகாப்புத் துறை அதிகாரி ப்ரொமன் மைக்கேல், இந்திய அமைச்சருக்குக் கடிதமே எழுதுகிறார். உலக வங்கி தற்போது நமக்கு விதித்துள்ள நிபந்தனைகளைக் கடுமையாக்காமல் அப்படியே தொடர்வதற்கு, நீங்கள் சிபாரிசு செய்யவேண்டும் என்று, அமைச்சர் அலுவாலியா அவருக்கு எழுதிய கடிதத்துக்குத்தான் இந்த பதில்!

போபால் விவகாரத்துக்குத் தொடர்பற்ற இன்னொரு விஷயத்தில், டோ கெமிகல்சை விசாரிக்கவேண்டுமென்று இந்தியாவில் சி.பி.ஐக்குச் சொல்லப்பட்டது. எதற்குத் தெரியுமா? இந்திய அரசு அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்ததற்காக. இதையும் சி.பி.ஐ. ஒன்றும் கண்டு பிடிக்கவில்லை. அமெரிக்காவில் பூச்சி கொல்லியான கோலொபைரிபாஸ், குழந்தைகளைக் கடுமையாக பாதிக்கும் என்பதால் தடை செய்யப்பட்டது. இதை டோ கெமிகல்ஸ் இந்தியாவில் விற்றுக் கொண்டிருக்கிறது.

தடை செய்யப்பட்ட பூச்சிக் கொல்லியை இந்தியாவில் விற்றதற்காக அமெரிக்கா, டோ கெமிகல்ஸ் மீது நடவடிக்கை எடுக்கவில்லை. அதில் அவர்களுக்கு அக்கறை இல்லை. இதை விற்க அனுமதி பெறுவதற்காக, இந்திய அரசின் செடிகள் பாதுகாப்பு ஆலோசகத் துறையின் அதிகாரிகளுக்கு டோ கெமிகல்ஸ் லஞ்சம் கொடுத்தது அமெரிக்கச் சட்டங்களின்படி குற்றம். இதை விசாரித்த செக்யூரிட்டி எக்ஸ்சேஞ்சிடம், தன் குற்றத்தை டோ ஒப்புக் கொண்டு விதிக்கப்பட்ட பல கோடி ரூபாய் அபராதத் தொகையையும் செலுத்தியிருக்கிறது.

இதைப் பற்றி ராஜ்ய சபையில் மார்க்சிஸ்ட் எம்.பி பிருந்தா காரத் 2007ல் கேள்வி கேட்டதும், சி.பி.ஐயை விசாரித்து அறிக்கை தரச் சொல்வதாக அமைச்சர் ஷரத் பவார் அறிவித்தார். மூன்றாண்டுகள் ஆகியும் எந்த அறிக்கையும் வரவில்லை. இதைப் பற்றியெல்லாம் மன்மோகன் வாயையே திறப்பதில்லை. ஸ்பெக்ட்ரம் ஊழல் பற்றி இதுவரை மன்மோகன் சொன்னவை அண்ணாயிசத்தை விடக் குழப்பமானவை.

அண்மையில், உச்ச நீதி மன்றம் அரசின் கொள்கைகளில் தலையிடக் கூடாது என்று கடுமையாகச் சொன்னார் மன்மோகன். சுமார் பத்து லட்சம் ஏழைகளுக்கு ஐந்தாண்டு காலம் உணவளிக்கப் போதுமான லட்சக்கணக்கான டன் தானியங்கள் அரசு

கிடங்குகளில் கெட்டு வீணாகிக் கொண்டிருக்கின்றன. இதை சமூக ஆர்வலர்கள் உச்ச நீதி மன்றத்திடம் முறையிட்டபோது, ஏழைகளுக்கு இலவசமாக தானியங்களை அளிக்கும்படி நீதிபதிகள் உத்தரவிட்டனர். இது உத்தரவல்ல, பரிந்துரைதான் என்றார் விவசாய அமைச்சர் ஷர்த் பவார். உச்ச நீதி மன்றமோ இது உத்தரவுதான் என்றது. உடனே உள்ளே நுழைந்தார் மன்மோகன். இலவசமாகக் கொடுப்பதும் கொடுக்காததும் அரசுக் கொள்கை சம்பந்தப்பட்டது. இதில் நீதி மன்றம் தலையிடக் கூடாது என்றார். இதுவரை எந்தப் பிரச்சினையிலும் உச்ச நீதி மன்றத்துக்கு எதிராக கருத்து சொல்லாதவர் அவர்.

அரசுக் கிடங்குகளில் உணவு தானியங்கள் சரியாகப் பாதுகாக்கப்படாமல் கெட விட்டது ஏன் ? அதுவும் அரசின் கொள்கை சம்பந்தப்பட்டதா ? தன் கடமையைச் செய்யத் தவறிய அரசுக்கு, கொள்கை பற்றிப் பேச யோக்கியதை உண்டா? அலுவாலியாவுக்குக் கடிதம் எழுதும் அமெரிக்க அதிகாரியிடம், எங்கள் அரசின் கொள்கை விஷயங்களிலோ எங்கள் நாட்டு பாராளுமன்ற நடவடிக்கைகளிலோ தலையிட உங்களுக்கு உரிமை இல்லை என்று ஒரு கடிதம் எழுத மன்மோகனால் ஒருபோதும் முடியாது.

## நீரோவும் 'ஹீரோ'வும்

திருச்சியில் ஒரு அரசுக் கட்டடத்தைத் திறந்து வைக்க முதல்வர் கலைஞர் வந்தபோது அங்கிருந்தேன். ரோம் நகரம் பற்றி எரிந்தபோது பிடில் வாசித்த நீரோ மன்னன் எப்படி இருந்திருப்பான் என்று இப்போது புரிந்துகொள்ள முடிந்தது. ஆயிரக்கணக்கான டியூப்லைட்டுகள். நூற்றுக்கணக்கான பிளெக்ஸ் போர்டுகள். தமிழகத்தில் சென்னை தவிர அத்தனை ஊர்களிலும் கடும் மின்வெட்டில் விவசாயம், தொழில், அன்றாட வாழ்க்கை எல்லாம் பாதிக்கப்பட்டிருக்கையில், இப்படிக் கொண்டாட்டம் நடத்த நீரோ மனசுதான் வேண்டும். உச்சமான அராஜகம், அன்று போக்குவரத்து ஸ்தம்பிக்கும் என்பதால், எல்லா பள்ளிகளும் விடுமுறை விட்டார்கள். அடுத்த நாள் பள்ளி நடத்தினால், அதற்கடுத்த மூன்று நாட்கள் ரம்ஜான், விநாயகர் விழா, ஞாயிறு விடுமுறைகள். எனவே தொடர்ந்து இரு வேலை நாட்களைப் பள்ளிகள் இழந்தன. ஒரு கட்டடம் திறப்பதற்காக, உலகத்தில் எந்த நாகரிகமான நாட்டிலும் இப்படிப்பட்ட கேவலங்கள் நடப்பதும் இல்லை நடந்தால் சகிக்கப்படுவதும் இல்லை.

அடுத்த நாள் மதுரை புத்தக விழாவுக்குச் சென்றேன். நகர்

முழுக்க அழகிரியின் முகத்துடன் விதவிதமான ஃபிளெக்ஸ்கள். இரவு கனவில் கூட அழகிரி ஃபிளெக்ஸில் வந்து சிரித்தார். எந்த நிகழ்ச்சி விளம்பரப் பலகையையும் 48 மணி நேரத்துக்கு மேல் வைக்கக் கூடாது என்ற அரசு உத்தரவுக்கு அப்பாற்பட்டவர் அழகிரி. புத்தக விழா நடந்த தமுக்கம் மைதானத்தில் அதே சமயத்தில் ஒரு காது குத்தும் நிகழ்ச்சிக்கும் அனுமதி! சிறப்பு விருந்தினர் அழகிரியாயிற்றே! புத்தகப் பதிப்பாளர்கள் ஆளுக்கு 2 ஆயிரம் ரூபாய் செலுத்தி விழா நுழைவில் வைத்திருந்த அத்தனை ஃபிளெக்சுகளும் அகற்றப்பட்டு, காது குத்த வரும் அழகிரியை வரவேற்கும் ஃபிளெக்சுகள் மாட்டப்பட்டன. எதிர்த்து ஒரு முனுமுணுப்பும் இல்லை. அழகிரி ஒரு மரண வீட்டுக்கு அஞ்சலி செலுத்தச் சென்றார். அவர்தான் முதல் மாலை வைக்க வேண்டுமென்று, முன்பே வந்த மற்ற எல்லாரும் காத்திருந்தார்கள். மதுரை தமிழகத்திலோ, இந்தியாவிலோ இல்லை என்று தோன்றுகிறது. தனி நாடு ! பிரபாகரனால் முடியாததை அழகிரி சாதித்துவிட்டார். இப்போதைக்கு மதுரையில் முதுகெலும்பு அவருக்கு மட்டுமே இருப்பதாக ஓர் அநாமதேய மருத்துவ சர்வே தெரிவிக்கிறது.

## இந்த வாரப் பூச்செண்டு

இந்த மாதம் மேற்கு வங்கத்தில் வெடித்த மதக் கலவரத்தின்போது, உத்தர்கல்யாணி கிராமத்தைச் சேர்ந்த பரூக், ஹஸ்னேன், ஷோம்பு,அல்டாப், பிஜாய் ஆகியோர் வீடு வீடாகப் போய், “காலம் காலமாக இங்கு சேர்ந்து வாழும் எல்லா ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் வெளியிலிருந்து யாரும் வந்து பிரிக்கவோ தாக்கவோ நாம் அனுமதிக்கக்கூடாது” என்று திரட்டினார்கள். முறை போட்டுக் கொண்டு குழு குழுவாகக் காவல் இருந்தார்கள். அந்த இளைஞர்களுக்கும் அந்த கிராமவாசிகளுக்கும் இ.வா.பூ.

***கல்கி 14.9.2010***

# சர்ச்சில் இன்னொரு ஹிட்லர் ?

லட்சக் கணக்கான மக்களின் சாவுக்குக் காரணமாக இருந்த ஹிட்லருக்கும், பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சிலுக்கும் பெரிய வித்யாசம் இல்லை. வங்காளத்தில் 1943ல் ஏற்பட்ட பெரும் பட்டினிச் சாவுகளில் சுமார் 30 லட்சம் மக்கள் பட்டினியால் சாவதற்குக் காரணமாக இருந்தவர் சர்ச்சில்தான் என்று இந்திய விஞ்ஞானியும் எழுத்தாளருமான மதுஸ்ரீ முகர்ஜி குற்றம் சாட்டியிருக்கிறார்.

இயற்பியல் படித்து விட்டு உயர் படிப்புக்கு அமெரிக்கா சென்ற மதுஸ்ரீ சயண்ட்டிஃபிக் அமெரிக்கன் இதழின் முன்னாள் ஆசிரியர். தற்போது ஜெர்மனியில் வசிக்கும் மதுஸ்ரீ இதற்கு முன்பு அந்தமான் தீவுகளில் வாழும் ஆதிவாசிகள் பற்றிய நூலை எழுதியிருக்கிறார்.

வங்காளப் பஞ்சம் பற்றி தெரிந்துகொள்ளும் ஆர்வத்துடன் தன் ஆய்வைத் தொடங்கிய மதுஸ்ரீ பிரிட்டிஷ் நூலகத்தில் இருக்கும் பல்வேறு ஆவணங்களை ஆராய்ந்ததில் முப்பது லட்சம் மக்களின் சாவுக்கு சர்ச்சில் பொறுப்பேற்றுதான் ஆகவேண்டும் என்ற முடிவுக்கு வந்தார். எனவே தன் நூலுக்கு சர்ச்சிலின் ரகசிய யுத்தம் ( சர்ச்சில்ஸ் சீக்ரெட் வார்) என்றே பெயரிட்டிருக்கிறார்.

சர்ச்சிலுக்கு இந்தியாவில் தமிழ்நாட்டில் உறையூரில் தயாரித்த சுருட்டுகள் மிகவும் பிடித்தவை. ஆனால், இந்தியர்களை அறவே பிடிக்காது. ஹிட்லருக்கு எப்படி யூதர்கள் மீது வெறுப்பு இருந்ததோ, அதே போல சர்ச்சிலுக்கும் இந்தியர்கள் மீது கடுமையான இனத் துவேஷம் இருந்தது. லண்டனில் பாரிஸ்டர் பட்டம்

பெற்றவரான காந்தியை, அரை நிர்வாண பக்கிரி என்று வர்ணித்தது சர்ச்சில்தான். இந்தியர்களால் தங்களைத்தாங்களே ஆளமுடியாது. சுதந்திரம் கொடுத்தால் சிதறி சின்னாபின்னமாகிப் போய்விடுவார்கள் என்று சொன்னார் சர்ச்சில். இன்று அவருடைய பிரிட்டனில் சுதந்திர இந்தியாவில் கல்வி பெற்று தகுதியடைந்த இந்திய டாக்டர்களுக்குத்தான் மிகப் பெரிய கிராக்கி.

இரண்டாம் உலக யுத்தத்தின்போது பிரிட்டிஷ் மக்களின் ஹீரோவாக சர்ச்சில் இருந்தார். ஆனால் யுத்தம் முடிந்ததும் நடந்த தேர்தலில் அவர் கட்சி ஆட்சியை இழந்தது.சர்ச்சிலுக்கு இந்தியா மீதும் இந்தியர்கள் மீதும் இருந்த வெறுப்புக்கு அளவே இல்லை.1940களில் முஸ்லீம் லீக் உருவாகி காங்கிரசுக்குப் போட்டியாக அரசியல் செய்தபோது, சர்ச்சிலின் கருத்து என்ன தெரியுமா? 'ரொம்ப நல்லது. சிக்கிரமே ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அடித்துக் கொண்டு சாகட்டும் ரத்தக் களறி ஏற்படட்டும்."

அப்படிப்பட்டவர் 1943ல் வங்காளத்தில் பெரும் பட்டினிச்சாவுகள் ஏற்பட்டபோது, மூர்க்கத்தனமாக உதவி செய்ய மறுத்தார் என்பதை மதுஸ்ரீ தன் ஆய்வில் வெளிப்படுத்தியிருக்கிறார். இந்தப் பட்டினிச் சாவுகள் மிகவும் கொடுமையானவை. உண்மையில் உணவு போதாததால் மட்டுமோ, அடுத்த விளைச்சல் சரியாக நடக்காததினால் மட்டுமோ மக்கள் சாகவில்லை. உணவு போதாமல் போனதற்குக் காரணம் பிரிட்டிஷ் ராணுவம்.சர்ச்சிலின் அரசு வங்காளத்தில் இருந்த எல்லா கோதுமையையும் தன் ராணுவத்துக்கு வாங்கி முடக்கத் தொடங்கியது. இதனால் வெளி மார்க்கெட்டில் அரிசி உட்பட எல்லா தானியங்களின் விலைகளும் ஏறின. பர்மாவிலிருந்து அரிசி வருவது வழக்கம். அதை வரவிடாமல் சர்ச்சிலின் அரசு செய்துவிட்டது. ஜப்பானியர்கள் பர்மா வழியே நுழைந்தால், அவர்கள் வசம் ஒரு படகு, மாட்டு வண்டி, யானை, கார் எதுவும் கிடைக்கக் கூடாதென்று முன்கூட்டியே வங்க பர்மா எல்லைகளில் இருந்த எல்லாவிதமான வாகன வசதிகளையும் அங்கிருந்த அரிசியையும் கூட பிரிட்டிஷ் ராணுவம் கைப்பற்றிவிட்டது. இந்த படகுகளிலும் வண்டிகளிலும்தான் பர்மாவிலிருந்து அரிசி வரவேண்டும். அதற்கு வழியில்லாமல் போய்விட்டது.

தனியார் சரக்குக் கப்பலகள் முதல் ராணுவக் கப்பலகள் வரை இந்தியப் பெருங்கடலைல் இருந்த எல்லா கப்பலகளையும் ராணுவம் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்டது. ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமையை வரவழைத்து வங்காளத்துக்குத் தரும்படி வைசிராய் லின்லித்கோ சர்ச்சிலைக்

கேட்டார். சர்ச்சில் மறுத்துவிட்டார். இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் நிர்வாகிகள் அமெரி, வேவல் ஆகியோரும் சர்ச்சிலுக்கு இங்கிருக்கும் மோசமான நிலையைத் தெரிவித்து உடனே உணவு அனுப்ப ஏற்பாடு செய்யும்படி கேட்டார்கள்.

"பஞ்சத்தால் மக்கள் செத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றால், எப்படி காந்தி மட்டும் இன்னமும் சாகாமல் இருக்கிறார் ?" என்று சர்ச்சில் பதில் தந்தி அனுப்பினார். காந்தி, பாவம், வெள்ளையனே வெளியேறு போராட்டம் தொடங்கியது முதல் 1944 வரை சிறையில் இருந்தார்.

ஆஸ்திரேலியாவும் கனடாவும் உணவு அனுப்பத் தயாராக இருந்தபோதும் சர்ச்சில் அதற்குக் கப்பல்கள் தர மறுத்துவிட்டார். எல்லா கப்பல்களும் யுத்தத்துக்கக தேவைப்படுவதாக அவர் சொன்னார். உண்மையில் அமேரிக்கக் கப்பல்கள் முதல் எல்லாமே அப்போது சர்ச்சில் அரசின் கீழ்தான் இருந்தன. உணவுக் கப்பல்களையெல்லாம் பிரிட்டனுக்கு ராணுவத்துக்கு தானியங்கள் எடுத்துச் செல்லவும் , யுத்தம் முடிந்த பிறகு கிரீசிலும் ஐரோப்பாவிலும் தேவைப்படக் கூடிய உணவுகளை ஸ்டாக் செய்வதற்கும் சர்ச்சில் அனுப்பிக் கொண்டிருந்தார். இந்தியாவுக்கு அனுப்பப் போதுமான கப்பல்கள் இருந்தன என்பதை அப்போதைய கப்பல் நடமாட்ட ரிகார்டுகளிலிருந்து மதுஸ்ரீ அமபலப்படுத்தியிருக்கிறார்.

உணவு தானியக் கப்பல்கள் வங்கத்துக்கு வருவதாகத் தெரிந்தாலே, உள்ளூரில் பதுக்கி வைத்திருப்பவர்கள் பொருளை வெளியே விட்டு விலைகள் விழ ஆரம்பிக்கும் என்று இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் நிர்வாகிகள் சர்ச்சில் அமைச்சரவைக்குச் சொன்னதை சர்ச்சில் கண்டுகொள்ளவே இல்லை. ஜப்பான் வசம் பர்மா இருந்தபோதும் வங்கத்துக்கு அரிசி அனுப்ப ஏற்பாடு செய்ய தான் தயார் என்று நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அறிவித்தார். அந்த செய்தியையே வெளியிடக் கூடாது என்று சர்ச்சில் அரசு சென்சார் செய்துவிட்டது.

விளைவாக வங்காளத்தின் கிராமங்களிலெல்லாம் மக்கள் உணவு இல்லாமல் பட்டினியில் தினசரி 5000, 6000 பேனர் என்று தெருக்களில் செத்து விழுந்துகொண்டிருந்தார்கள். அரிசி வடித்த கஞ்சித் தண்ணீரைப் பிச்சையாகக் கேட்டு கொல்கத்தா நகர வீதிகளில் நுழைந்த கிராம மக்கள் பெரிய பெரிய ஓட்டல்களின் வாசலில் செத்து விழுந்தார்கள். பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் இந்தியாவெங்கும், தமிழ்நாடு உடபட, பெரியதும் சிறியதுமாக சுமார் 40 பஞ்சங்கள் ஏற்பட்டிருக்கின்றன. எல்லாமே பிரிட்டிஷ் சுரண்டலினால் ஏற்பட்டவைதான். மழை பொய்த்ததால் ஏற்பட்ட

இழப்பைக் கூட ஈடு செய்ய அரசிடம் தானியங்கள் இருந்தன. ஆனால் பதுக்கல்காரார்கள் விலையை ஏற்ற அனுமதித்தது. பெரும் பணம் இருந்தவர்கள் மட்டும் தப்பினார்கள். ஏழைகள் ஈசல் போல செத்து விழுந்தார்கள்.

வங்கத்தில் மக்கள் செத்து விழுந்தபோது கூட இந்தியாவிலிருந்து கோதுமையையும் அரிசியையும் பிரிட்டன் ஏற்றுமதி செய்துகொண்டிருந்தது. ஆறு லட்சம் டன் தானியங்கள் தேவை என்று வைசிராய் கேட்டார். சர்ச்சில் அரசு கடைசியில் கொடுத்தது வெறும் 30 ஆயிரம் டன்தான். ஆனால் 71 ஆயிரம் டன் அரிசியை இலங்கையில் ரப்பர் தோட்டங்களுக்கு அனுப்பிற்று.

ஏழாண்டு கால ஆராய்ச்சிக்குப் பிறகு மதுஸ்ரீ இந்த நூலை எழுதியிருக்கிறார். முக்கியமான விஷயம், சர்ச்சில் அரசுக்கு எதிராக அவருக்குக் கிடைத்த ஆவணங்கள் எல்லாமே பிரிட்டிஷ் ஆவணக் காப்பகங்களில் இருந்துதான். இதுதான் நமக்கு அவர்களுக்கும் உள்ள முக்கியமான வித்யாசம். இன்னும் கூட நெருக்கடி நிலை பற்றிய ஆவண்ங்கள் ரகசியமாகவே வைக்கப்பட்டுள்ளன. சம காலத்திலேயே பல ஆவணங்களை திருத்தியும் மறைத்தும் வைக்கும் பழக்கம் நம் நிர்வாகங்களுக்கு இருக்கிறது. தகவல் அறியும் உரிமைச் சட்டத்தின் கீழ் தகவல் கேட்டால் மறுப்பதற்கும் திரிப்பதற்கும் தயார் நிலையில் இருக்கிறது நிர்வாகம். இந்தச் சூழ்நிலையில் இன்றைய பல அவலங்களை நாளைய வரலாற்றாசிரியர்கள் தோண்டியெடுக்கக் கூட வாய்ப்பு இல்லாமல் போய்விடும்.

அப்போது இன்னொரு ஹிட்லர் என்று நாம் அழைக்க வேண்டியவர்களையெல்லாம், இன்னொரு காந்தி என்று அழைப்பதற்கு மட்டுமே கூட ஆவணங்களைத் தயார் செய்துவைத்துவிட்டுப் போகும் ஆபத்து இருக்கிறது !

## இந்த வாரப் பூச்செண்டு

தன் பஸ்களுக்கு பயோ டீசலைப் பயன்படுத்த முடிவு செய்திருக்கும் மகாராஷ்டிர அரசுக்கு இ.வா.பூ. ஏற்கனவே ஆந்திரமும், கர்நாடகமும் அரசு பஸ்களில் பயோடீசல் பயன்படுத்துகின்றன. சூழலை மாசுபடுத்துவது குறைவதோடு, வருடத்துக்கு 15 கோடி ரூபாய் மிச்சமாகும் என்றும் மராட்டிய அரசு கணக்கிட்டுள்ளது.

## இந்த வாரத் திட்டு

வறுமைக் கோட்டிற்குக் கீழிருக்கும் ஏழைகளுக்கு இலவசமாக

உணவு தானியம் தர முடியாது என்று மறுத்த மன்மோகன் அரசு இப்போது அவர்களுக்கு இலவசமாகக் செல்பேசி மட்டும் தரும் விசித்திரத்துக்கு இ.வா.தி.

## இந்த வாரப் புதிர்

ஏன் எந்தக் கட்டடத்தையும் முடிக்காமலே கலைஞர் கருணாநிதி திறந்து வைக்க அவசரப்படுகிறார் ? கோட்டூர்புரம் அண்ணா நூலகத்தில் ஒரே ஒரு தளத்தில் குழந்தைகள் பிரிவு மட்டும்தான் தயாராகியிருக்கிறது. ஏன் அவசர திறப்பு விழா? நூலகம் பற்றிய தகவல் ஏட்டை ஏன் தமிழில் அச்சடிக்காமல் ஆங்கிலத்தில் மட்டும் அச்சடித்திருக்கிறார்கள் ?

## இந்த வார அதிர்ச்சி

தன் தந்தை தன்னை வளர்த்து சோறு போட்டு படிக்க வைத்து ஆளாக்கின செலவுக்காக அவருக்கு 28 லட்சம் ரூபாய் தருவதாக டென்னிஸ் வீரர் மகேஷ் பூபதி அப்பாவுடன் ஒப்பந்தம் போட்டுக்கொண்டு பணம் கொடுத்த செய்தி அதிர்ச்சியாக இருக்கிறது. இந்த ஒப்பந்தம் செல்லத்தக்கது அல்ல. இதெல்லாம் பெற்றோரின் கடமை. வருமான வரி ஏய்ப்பிற்காக இப்படி ஒப்ந்தம் போடப்பட்டிருப்பது ஏற்கமுடியாது என்று கர்நாடக நீதிமன்றம் தெரிவித்துவிட்டது.!

***கல்கி 20.9.2010***

# ஒரு வீடு ஒரு கோவில் ஒரு வள்ளல்..

முதல்வர் கலைஞர் கருணாநிதி கோபாலபுரத்தில் தான் வசித்து வரும் வீட்டைத் தன் காலத்துக்கும் தன் மனைவி தயாளு அம்மாள் காலத்துக்கும் பிறகு பொது மருத்துவமனையாக ஆக்குவதற்கு நன்கொடையாக அளித்ததை உலக மகா தர்மமாக அவர் கட்சியினரும் துதிபாடிகளும் வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஏதோ அவர் இப்போதே வீட்டைக் கொடுத்துவிட்டு நடுத்தெருவில் நின்றபடி இனி எந்த வீட்டில் போய் வாழ்வது என்ற நிலை ஏற்பட்டுவிட்ட தியாகத்தை செய்திருப்பது போல சித்திரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

கோபாலபுரம் வீட்டை தானமாகத் தருவதாக கருணாநிதி அறிவித்தபோது, அந்த அறிக்கையில் ஒரு தகவல் சுவாரஸ்யமாக இருந்தது. அந்த வீட்டை அவர் 1968லேயே தன் மகன்கள் அழகிரி, ஸ்டாலின் முதலானோருக்கு செட்டில் செய்துவிட்டதாகவும் இப்போது தானமாகத் தருவதற்கு அவர்கள் மனமுவந்து சம்மதம் தந்திருப்பதாகவும் தெரிவித்திருந்தார். ஆச்சரியமாக இருந்தது. 1968ல் கருணாநிதிக்கு வயது 44 தான். சொத்தை மகன்களுக்கு செட்டில் செய்யவேண்டிய முதுமையான வயது அல்ல. அதுவும் கோபாலபுரம் வீடு அவர் சம்பாதித்து வாங்கிய முதல் வீடு. ஏன் அப்போதே மகன்களுக்குக் கொடுத்தார் என்று யோசித்தால், அந்த வருடம்தான் துணைவியின் மூலம் வாரிசாகக் கனிமொழி பிறந்தார் என்ற வரலாற்றுத் தகவல் தெரியவந்தது. ஒரே சொத்து, துணைவி வீட்டுக்குப் போய்விடாமல் காப்பாற்றிக் கொள்ளவேண்டிய கட்டாயம் நிச்சயம் மனைவி வீட்டுக்கு

இருந்திருக்கத்தான் செய்யும்.

எது எப்படியோ இப்போது அந்த வீட்டை தானமாகக் கொடுப்பதால் கருணாநிதியின் குடும்பங்களுக்கு எந்த பேரிழப்பும் இல்லை. அரசியலில் கடுமையாக உழைத்து சம்பாதித்து பேரன் பேத்திகள் வரை எல்லாருக்கும் தனித்தனியே சொந்த வீடுகள் வாங்கும் வசதிகள் வந்தாயிற்று. ஒரு வீட்டை தானமாகக் கொடுத்ததற்கு கூரை மீது ஏறி நின்று கூவுகிற விசித்திரத்தைப் பார்க்கும்போது, அந்த கோபாலபுரம் வீட்டுக்கு விஜயம் செய்த பிரபலங்களில் ஒருவரின் ஞாபகம் வருவதைத் தவிர்க்க முடியவில்லை.

அவர் பெயர் பில் கேட்ஸ்.

உலகத்தில் ஏற்பட்ட கணிணிப் புரட்சியில் பெரும் உந்து சக்தியாக இருந்த மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தை உருவாக்கிய அதே பில் கேட்ஸ்தான். இன்று உலகத்தின் மிகப் பெரும் பணக்காரர்களின் முதல் வரிசைப் பட்டியலில் இருப்பவர் பில் கேட்ஸ்.

பில் கேட்ஸை சந்தித்தபோது என்ன பேசினீர்கள் என்று நிருபர்கள் கருணாநிதியைக் கேட்டார்கள். அவரோடு சேர்ந்து வியாபாரம் செய்வதைப் பற்றிப் பேசினேன் என்று 'நகைச்சுவையாக' (!) பதிலளித்தார் கருணாநிதி. நல்லவேளை வியாபார பேரம் நடக்கவில்லை. நடந்திருந்தால்,மைக்ரோசாஃப்ட், சன் குழுமத்தில் ஒன்றாக ஆகிவிட்டிருக்கும் ஆபத்து ஏற்பட்டிருக்கலாம்.

அப்போது பில் கேட்ஸ் இப்போது அறிவித்திருக்கும் அறிவிப்பை செய்யும் வாய்ப்பே ஏற்படாமல் போயிருக்கலாம். தானும் தன் மனைவி மெலிண்டாவும் உயிரோடு இருக்கும்போதே தங்கள் சொத்தில் பெரும் பகுதியை பொதுக் காரியங்களுக்கு நன்கொடையாகக் கொடுத்துவிடப் போவதாக பில் கேட்ஸ் அறிவித்தார்.

பில் கேட்ஸின் மொத்த சொத்து மதிப்பு 53 பில்லியன் டாலர்கள். ஏற்கனவே இதில் 23 மில்லியன் டாலர் சொத்துகளை நன்கொடையாகக் கொடுத்தும் விட்டார் ! பில் கேட்ஸைப் போலவே இன்னொரு பெரும் பணக்கார தொழிலதிபர் வாரன் பஃபெட். இவரது சொத்து மதிப்பு 47 பில்லியன் டாலர்கள். இதில் ஒரே ஒரு சதவிகிதத்தை மட்டுமே தனக்கென்று வைத்துக் கொள்ளப் போவதாக அறிவித்த பஃபெட், மீதி 99 சதவிகிதமும் தான் இறப்பதற்கு முன்னால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டுவிடும் என்று தெரிவித்திருக்கிறார்.

இன்னொரு அமெரிக்கப் பணக்காரர் ஜார்ஜ் லூக்காஸ்.

இவருக்கும் கருணாநிதி குடும்பத்துக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இருவரும் சினிமாகாரர்கள். ஸ்டார் வார்ஸ் படங்களை உருவாக்கியவர் லூக்காஸ். இவர் தன் மூன்று பில்லியன் டாலர் சொத்தில் பெரும் பகுதியைக் கல்வித்துறைக்குத் தான் வாழும்போதே கொடுப்பதாக அறிவித்திருக்கிறார்.

பில் கேட்ஸும் வாரன் பஃபெட்டும் தங்கள் சொத்துகளை தானம் செய்வதோடு நிற்கவில்லை. அமெரிக்காவில் இருக்கும் இதர பெரும் பணக்காரர்களை அழைத்து நீங்களும் சம்பாதித்ததை இந்த சமூகத்துக்குத் திருப்பிக் கொடுங்கள் என்று பிரசாரம் செய்தார்கள். " தருவதாக வாக்குறுதி அளித்தல்" ( கிவிங் ப்ளெட்ஜ்) என்ற இந்த இயக்கத்தில் இணைய, இதுவரை 40 பெரும் பணக்காரர்கள் முன்வந்திருக்கிறார்கள்.

பதினெட்டு பில்லியன் டாலர் சொத்துள்ள புளூம்பர்க், 11 பில்லியன் சொத்துக்காரர் ரொனால்ட் பெரெல்மன், உலகத்தின் ஆறாவது பெரும் பணக்காரரும் 28 பில்லியன் டாலர் சொத்துக்காரருமான லாரி எல்லிசன் ஆகியோர் முன்வந்துள்ளனர்.

தன் ஆயுட்காலத்திலேயே 95 சதவிகித சொத்தையும் கொடுத்துவிடப் போவதாக எல்லிசன் அறிவித்திருக்கிறார். பில் கேட்ஸின் தொண்டு நிறுவனம் அவர் சொத்துகளை அதிகபட்சம் அவர் இறந்து 50 ஆண்டுகளுக்குள் முழுமையாகக் கொடுத்து முடித்துவிடவேண்டும் என்று டிரஸ்ட் விதியே போட்டிருக்கிறது.

ஒவ்வொரு வருடமும் வெவ்வேறு அமைப்புகளுக்குக் கொஞ்சம் கொஞ்சம் நன்கொடை கொடுப்பதற்கு பதில், உடனடியாக பெரிய திட்டங்களுக்கு ஆராய்ச்சிகளுக்கு பெரும் தொகைகளை இப்போதே கொடுத்து விரைவில் நல்ல விளைவுகளும் மாற்றமும் ஏற்படச் செய்யவேண்டும் என்பது பில் கேட்ஸின் கொள்கை. இப்போதே ஆப்ரிக்காவில் கொசு எதிர்ப்பு மருந்து பூசிய கொசு வலைகளைப் பெருமளவு விநியோகித்து மலேரியா ஏற்படுவதைக் கட்டுப்படுத்தியிருக்கிறது.

இதே போல பிரிட்டனிலும் தொழிலதிபர்கள் நன்கொடை வாக்குறுதி இயக்கம் தொடங்கியிருக்கிறார்கள். ஆல்பர்ட் குபே என்பவர் சூப்பர் மார்க்கெட்கள் அதிபர். சொத்து மதிப்பு 480 மில்லியன் பவுண்டுகள்.. இதில் வெறும் 10 மில்லியன் பவுண்டை மட்டும் தனக்கு வைத்துக் கொண்டு மீதியை தரப்போவதாக அறிவித்துவிட்டார். சைன்ஸ்பரி பிரபு என்பவர் ஏற்கனவே 275 மில்லியன் பவுண்டுகளை தானம் வழங்கியிருக்கிறார்.

பொதுவாக இதுவரை பெரும் பணக்காரர்கள் நன்கொடைகள் கொடுத்தாலும் பெருமளவில் தருவதில்லை. அமெரிக்காவில்

இதுவரை மொத்த சொத்து மதிப்பில் அதிகபட்சம் 12 சத விகிதம் வரை மட்டுமே நன்கொடைகளாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதை பில் கேட்ஸும் வாரன் பஃபெட்டும் மாற்றத் தொடங்கியிருக்கிறார்கள்.

சாதாரண மனிதர்களாகத் தொடங்கினோம். இந்த சமூகம் இதுவரை நமக்குக் கொடுத்தது. இனி நாம் நம் தேவைக்கு போக மீதியை திருப்பிக் கொடுக்க வேண்டும் என்பது இவர்கள் பார்வை.

'பில் கேட்ஸுக்கும் வாரன் பஃபெட்டுக்கும் குழந்தை குட்டி எதுவும் இருக்காது. குடும்பம் இருதால்தானே கொள்ளுப்பேரன் சினிமா தயாரிப்பாளராவதற்கும் சேர்த்து இப்போதே சேர்க்க வேண்டியிருக்கும்' என்ற விதண்டாவாதமெல்லாம் செல்லுபடியாகாது.

பில் கேட்ஸுக்கு மூன்று குழந்தைகள். பெரியவளுக்கு வயது 24. அடுத்தவளுக்கு 18 வயது. கடைசி மகன் வயது 11. முதல் தலைமுறைக்கே கூட சொத்தையெல்லாம் வைத்துவிட்டுப் போக வேண்டும் என்று கேட்ஸ் தம்பதி நினைக்கவில்லை.

வாரன் பஃபெட் முதல் மனைவி இறந்தபிறகு தன் துணைவியாக இருந்தவரை அவளுடைய அறுபதாவது வயதில் திருமணம் செய்துகொண்டார். வாரனுக்கு ஒரு மகள், இரு மகன்கள். வாரன் மஞ்சள் துண்டு அணியாத ஒரு பகுத்தறிவுவாதி. கடவுள் நம்பிக்கையற்றவர் என்று அறிவித்துக் கொண்டவர்.

ஈ பே என்ற ஏல இணைய தளத்தின் அதிபர்களான பியர், பாம் இருவரும் ஐந்து பில்லியன் டாலர் சொத்து மதிப்புள்ளவர்கள். எங்கள் குடும்பத்துக்கு எவ்வளவு பணம் தேவையோ அதை விட பல மடங்கு அதிகமாக எங்களிடம் இருக்கிறது. அதை சும்மா வைத்துக் கொண்டிராமல் இப்போதே பொதுக் காரியத்துக்குப் பயன்படுத்துவதுதான் சரி என்று சொல்லியிருக்கிறார்கள்.

இங்கே ஒரு தம்மாத்தூண்டு வீட்டை எப்போதோ தானமாகக் கொடுக்கப் போவதற்கு பெரும் பப்ளிசிட்டி நடக்கிறது. வாரிசுகள் என்ன தொழில் வேண்டுமானாலும் செய்யட்டும்; ஆனால் அவர்களிடம் எப்படி எங்கிருந்து முதலீடு வந்தது என்ற கேள்விக்கு பதில் தராமல், திசை திருப்பும் வேலை மட்டும் கச்சிதமாக செய்யப்படுகிறது.

தஞ்சை பெரிய கோயிலுக்கு ஆயிரமாவது ஆண்டு விழா எடுப்பதில் கூட வாரிசு அரசியலை முன் நிறுத்தும் மனப்பான்மைதான் துருத்திக் கொண்டு வருகிறது. தஞ்சை மாவட்ட தி.மு.க, கலைஞர் கருணாநிதியை 'எங்கள் ராஜ ரஜ சோழனே'

என்று வர்ணித்து முழுப்பக்க விளம்பரம் வெளியிடுகிறது. இவெண்ட் மேனேஜ்மெண்ட் அமைச்சர் துரைமுருகன் ராஜராஜனுக்கு ஒரு ராஜேந்திர சோழன் போல எங்களுடைய ராஜேந்திர சோழன் ஸ்டாலின் என்கிறார். (அப்படியானால் நான் யார் என்ற தத்துவக் குழப்பம் அழகிரிக்கு ஏற்பட்டிருக்கலாம்.)

தமிழக வரலாறு குழப்பமாக இருக்கிறதாம். அதை சரி செய்ய முதல்வர் குழு அமைத்து வரலாறு எழுதவேண்டும் என்கிறார் துரைமுருகன். அப்படி ஒன்று எழுதினால் எப்படியிருக்குமோ ? ராஜராஜனை முதலாம் கருணாநிதி என்று கூட எழுதிவிடுவார்கள்.

பெரிய கோயில் ராஜராஜனின் தனிப்பட்ட சாதனை அல்ல. அந்த காலகட்டத்தின் தமிழ்ச் சமூகத்தின் ரத்தம், வியர்வை, அறிவு, பக்தி எல்லாம் கலந்த விளைவு. ராஜராஜன் ஜனநாயகவாதியும் அல்ல. வாரிசு அரசியலைப் பின்பற்றியவன். குடும்பத்தில் இருந்து தேர்வு செய்யாமல், மக்களிடையே இருந்து அடுத்த மன்னனைத் தேர்ந்தெடுக்கும் முறையைப் பின்பற்றிய சேர நாட்டுப் பழக்கத்தை ஒழித்துக் கட்டியவன் ராஜராஜ சோழன். அதனால் அவனை இன்றைய வாழும் ராஜராஜன்களுக்குப் பிடித்திருப்பதில் ஆச்சரியமில்லை.

தஞ்சைப் பெரிய கோயில் என்ற சரித்திர சாதனையைப் போற்றவேண்டுமென்றால், அது கட்சிக்கும் அரசுக்கும் அப்பாற்பட்ட அனைத்துக் கட்சி, அனைத்து மக்கள் இயக்க விழாவாக நடத்தப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அரசு விழாவாக, ஆளுங்கட்சி விழாவாக நடத்தப்பட்டது. கூட்டணிக்கட்சியாக இருக்கும் வாசனுக்கு இடமுண்டு, திருமாவுக்கு இந்த விழாவில் இடமில்லை என்பது கோயில் சார்ந்த சாதி அரசியலின் இன்னொரு வடிவம்தான்.

ஒரு பெரிய கோயில் கொண்டாடப்படும் அதே வேளையில் தமிழகமெங்கும் எண்ணற்ற வரலாற்றுச் சின்னங்கள் கோயில்கள், விஹாரங்கள், குகைகள், எல்லாம் கற்குவாரி வியாபாரிகள் கையில் சிக்கிக் கிடப்பதைப் பொருட்படுத்தாமல் அரசு நடக்கிறது.

எல்லாமே இங்கு ஒரு ‘ஷோ’தான். தான் ஒரு ஷோமேன் என்பதில் பெருமைப்படுபவரல்லவா நம் முதல்வர், சாரி ராஜராஜ சோழர் !

## இந்த வாரப் பூச்செண்டு

நீதிமன்ற அவமதிப்புக் குற்றச்சாட்டு வரும் என்பது பற்றி பயப்படாமல் ஊழல் நீதிபதிகள் பட்டியலை உச்ச நீதி மன்றத்திடம்

அளித்திருக்கும் வழக்கறிஞர்கள் சாந்தி பூஷன், பிரஷாந்த் பூஷன் ஆகியோருக்கு இ.வா.பூ

## இந்த வாரத் திட்டு

காங்கிரஸ் கட்சியில் கூட்டணி பற்றி யாரும் பேசக் கூடாது. நான் கூடப் பேசக் கூடாது. சோனியா மட்டும்தான் பேசலாம் என்று காங்கிரசின் உச்சகட்ட அடிமைத்தனத்தின் வெளிப்பாடாகப் பேசியிருப்பதற்காக மாநிலத்தலைவர் தங்கபாலுவுக்கு இ.வா.தி.

*கல்கி 27.9.2010*

# எல்லார் ரத்தமும் அயோத்தியில் ஓடட்டும் !

நான் அயோத்திக்கு பத்திரிகையாளர் மாநாட்டுக்காக 27 வருடங்களுக்கு முன்னர் சென்றேன். அயோத்தி ஃபைசாபாத் இரட்டை நகரம். ஃபைசாபாத் ரயில் நிலையத்தில் இறங்கியதுமே காவி, தாடி, சடை இருந்த நிறைய பண்டாரங்கள் சூழ்ந்துகொண்டார்கள். (தமிழில் பண்டாரம். ஹிந்தியின் பண்டா. அதாவது பூசாரி ) ராமர் பிறந்த இடத்தைக் காட்டுவதாகச் சொல்லி கையைப் பிடித்து இழுத்து வற்புறுத்தினார்கள். நண்பர்கள் சிலர் அவர்களுடன் ராமர் பிறந்த இடத்தைக் காணச் சென்றார்கள்.

ஒவ்வொரு பண்டாரமும் தனித்தனியே காட்டியது வெவ்வேறு இடம். நம் ஊர் நடைபாதை கோவில் சைசில் இருக்கும் குட்டிக் கோவிலைக் காட்டி இதுதான் ராமர் பிறந்த இடம் என்று ஒவ்வொரு பண்டாரமும் சத்தியம் செய்து தட்சிணையும் வாங்கிக் கொண்டார்கள். ஒரு பண்டாரம் கூட நண்பர்களை, பாபர் மசூதி இருந்த இடத்துக்கு அழைத்துச் செல்லவில்லை. இதுதான் 1983ல் அயோத்தி நிலைமை. அயோத்தியை உள்ளடக்கிய ஃபைசாபாத் எம்.பி. தொகுதியில் 80கள் வரை தொடர்ந்து ஜெயித்தவர்கள் காங்கிரசார், கம்யூனிஸ்ட்கள்.

கடவுளான ராமர் மனிதராகப் பிறந்து வாழ்ந்தது புராணங்களின்படி சுமார் எட்டு லட்சம் வருடங்களுக்கு முன்பு. ஆனால் அயோத்தியில் மனிதர்கள் குடியேறியே 2800 வருடங்கள்தான் ஆகின்றன. எனவே ராமர் பிறந்த இடம் இந்த அயோத்தி என்பதும், இந்த அயோத்தியில் இந்த இடத்தில்தான் என்பதும் நிரூபிக்கக் கூடிய விஷயங்களே அல்ல. முழுக்க முழுக்க நம்பிக்கை

மட்டுமே சார்ந்தவை. இதைப் பற்றி எந்த நீதிபதியும் தீர்மானமாகத் தீர்ப்பு வழங்கவே முடியாது. வழங்கினாலும், அது அவர் நம்பிக்கையோடு சம்பந்தப்பட்டதென்றுதான் பார்க்கவேண்டும். சட்ட சாட்சியங்களுக்கு அது அப்பாற்பட்டது.

எந்தத் தொழிலில் இருப்பவர்களும் அவரரவர் நம்பிக்கைகளுடன்தான் இருக்கிறார்கள். அதில் சிலர், ஓய்வு பெற்றபிறகு ஏதேனும் ஓர் அமைப்பில் சேர்கிறார்கள். அது அவ்ர்களின் நம்பிக்கைகளின் தொடர்ச்சி. யாருக்கும் திடீரென்று 60 வது வயதில் ஒரு கொள்கைப்பிடிப்பு வந்துவிடுவதில்லை. சுமார் 25,30 வயதிலிருந்தே உருவான ஈர்ப்பு அடுத்த சில வருடங்களில் வலுவடைந்து விடுகிறது. பின்னர் சூழலுக்கும் வாய்ப்புக்கும் ஏற்ப சிலர் நேரடி அரசியலில் ஈடுபடுகிறார்கள். அப்படிப்பட்ட ஒருவரான நய்யார்தான் அயோத்தி பிரச்சினை சுதந்திர இந்தியாவில் 1949 டிசம்பரில்முற்றி வெடிக்க உதவியவர்.

அது சுதந்திரம் பெற்றபோது செய்த பிரிவினையால் உருவான ஹிந்து முஸ்லிம் கலவரங்களால் பேரிழப்புகள் ஏற்பட்ட நேரம். காந்தி ஒரு ஹிந்துமத வெறியனால் கொல்லப்பட்டு 23 மாதங்கள்தான் ஆகியிருந்தன. நேருவின் அரசு வட இந்தியாவில் தொடர்ந்து மத மோதல்கள் நிகழாமல் தடுக்கப் பெரும் கவனம் செலுத்த வேண்டியிருந்த நேரம்.

டிசம்பர் 23ந்தேதி மாலைத் தொழுகை முடிந்தபிறகு, நள்ளிரவு பாபர் மசூதிக்கு 50 பேர் கொண்ட ஒரு கும்பல் வந்து அதன் திண்ணையில் ராமர், சீதை, லட்சுமணர் சிலைகளை வைத்துவிட்டுச் சென்றது. அங்கிருந்த 12 போலீசார் அதைத் தடுக்கவில்லை. இதை மத்திய அரசுக்குத் தெரிவித்த மாவட்ட மாஜிஸ்ட்ரேட் ( கலெக்டர்) கே.கே.நய்யார், மசூதியை இழுத்துப் பூட்டி இனி அங்கே தொழுகை நடக்கக்கூடாது என்று உத்தரவிட்டார். ஆனால் அத்து மீறி வைக்கப்பட்ட சிலைகளை எடுக்கவில்லை. இது பற்றிக் கவலைப்பட்ட பிரதமர் நேரு, மாநில முதல்வர் ஜி.பி.பந்த்திடமும் உள்துறை அமைச்சர் வல்லபாய் பட்டேலிடமும் தன் கவலைகளைத் தெரிவித்தார்.

அப்போது நய்யார் உடனடியாக சிலைகளை அகற்றிவிட்டு அத்து மீறியவர்கள் மீது நடவடிக்கை எடுத்திருந்தால், வரலாறு வேறு மாதிரியாக இருந்திருக்கும். ஆனால் அது நய்யார் விரும்பிய வரலாறல்ல. பதவியை ராஜினாமா செய்துவிட்டு நய்யார் ஜனசங்கம் கட்சியில் சேர்ந்து அதன் எம்.பி.வேட்பாளராகி ஜெயித்தார். ஜனசங்கம் போலவே ஆர்.எஸ்.எஸ்சின் ஆசி பெற்ற இன்னொரு அமைப்பான விஸ்வ ஹிந்து பரீஷத்தின் தலைவரான அசோக் சிங்காலின் சகோதரர் பி.பி.சிங்கால் அயோத்தி இருக்கும்

உத்தரப் பிரதேச மாநிலத்தின் காவல் துறையின் தலைவராகப் பணியாற்றியவர். ஓய்வு பெற்றதும் பாரதிய ஜனதா எம்.பியானார்!

பாபர் மசூதியை இடித்து ராமர் கோவில் கட்டுவதற்கான இயக்கம்,1940களிலிருந்து ஆர்.எஸ்.எஸ் வழிகாட்டுதலில் சுமார் 40 வருட காலம் வெளியில் தெரியாமல் மௌனமாக இயங்கி வந்திருக்கிறது. ஆட்சி அதிகார மீடியா அமைப்புகளில் ஊடுருவியிருக்கும் அனுதாபிகளின் உதவியுடன், ஒவ்வொரு அடியாக இது எடுத்து வந்திருக்கிறது. உ.பி.மாநில ஆட்சியை பாரதிய ஜனதா பிடித்தபின்னர், பகிரங்கமாகச் செயல்பட்டு அத்வானி தலைமையில் கல்யாண்சிங், நரசிம்மராவ் உதவியுடன் மசூதியை இடித்து சிலைகளை தாங்கள் விரும்பிய இடத்திலேயே வைத்துவிட்டனர். இனி கோவில் கட்டுவதுதான் அவர்களைப் பொறுத்த மட்டில் பாக்கி இருக்கும் விஷயம்.

அதற்கு முழு நிலமும் தேவை. இப்போது அலகாபாத் உயர் நீதிமன்ற பெஞ்ச் அளித்துள்ள தீர்ப்பு, மூன்றில் இரு பங்கு நிலத்தை ராமர் கோவில் ஆதரவு அமைப்புகளுக்கு சட்டப்படி அளிக்கிறது. இனி வரும் மாதங்களில் ஆர்.எஸ்.எஸ் செய்யப்போகும் பிரசாரம் என்னவாக இருக்கும் என்று எளிதாக யூகிக்கலாம். 1. நீதிமன்றமே அந்த இடம் ராமர் பிறந்த இடம்தான் என்று சொல்லிவிட்டது. 2. அங்கே இருந்த பிரும்மாண்டமான ராமர் கோவிலை இடித்துத்தான் பாபர் மசூதி கட்டினார் என்று ஆதாரம் இருப்பதாகவும் நீதிமன்றம் சொலிவிட்டது. 3. எனவே மறுபடியும் பிரும்மாண்டமான ராமர் கோவிலைக் கட்ட வசதியாக தங்களுக்கு தரப்பட்ட மூன்றில் ஒரு பங்கு நிலத்தையும் முஸ்லிம்கள் தாமாகவே முன்வந்து கொடுத்து, மத நல்லிணக்கத்தை வளர்க்க வேண்டும். இதுதான் நடக்கத் தொடங்கியுள்ள, வலுவடையப்போகிற பிரசாரம்.

மசூதி இருந்த இடம்தான் ராமர் பிறந்த இடம் என்று மூன்று நீதிபதிகளில் ஒருவரான தர்மவீர் சர்மா அடித்துச் சொல்லியிருக்கிறார். மீதி இரு நீதிபதிகளும் அது ஒரு நம்பிக்கை என்று சொல்லியிருக்கிறார்கள். நீதிபதி சர்மாவோ, தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டு, 'ராமராகப். பிறந்தவர் ஒரு கடவுள். தெய்வாம்சம் என்பது எல்லா இடங்களிலும் நிறைந்திருப்பது. எந்த இடத்திலும் யாரும் அதற்கு வடிவம் கொடுத்துக் கொள்ளலாம். அல்லது வடிவம் கொடுக்காமலே கூட வழிபட்டுக் கொள்ளலாம்' என்று ஒரு குழப்பமான வாக்கியத்தை சொல்லிவிட்டு, மசூதி இருந்த இடம்தான் ராமர் பிறந்த இடம் என்று சொல்லிவிடுகிறார்.

இதன்படி கருணாநிதி நகரில் அய்யப்பன் கோவில் வாசலில் ஒரு வருடமாக நாற்சந்தி நடைபாதையை ஆக்ரமித்து உண்டியல் சகிதம் உருவாகி வரும் கோவிலை, தப்பித்தவறி நாளைக்கு

மாநகராட்சி உச்ச நீதிமன்றத் தீர்ப்பின்படி இடித்தால், ஆக்ரமித்தவர் அலகாபாத் தீர்ப்பை மேற்கோள் காட்டி எங்கும் இருக்கும் தெய்வாம்சத்தைத் தான் எந்த இடத்திலும் எந்த வடிவத்திலும் நிறுவி வழிபடலாம் என்று சட்டப்படி வாதாடி, வெற்றி கூடப் பெறமுடியும்.

அனுமன் பக்தரான நீதிபதி சர்மா திருமணமாகாதவர். தன் உணவை தானே சமைத்து சாப்பிடும் ஆசாரமான பழக்கம் உடையவர். தன் நம்பிக்கைகளுக்கேற்ப அவர் தீர்ப்பு வழங்கியிருக்கிறார் என்றுதான் பார்க்க முடியும். நிலத்தை மூவருக்கும் பிரித்துத் தருவதையே அவர் ஆதரிக்கவில்லை. இன்னொரு நீதிபதி அகர்வால், முஸ்லிம்களுக்கு மூன்றில் ஒரு பங்கேனும் தரவேண்டும் என்கிறார். இன்னொரு நீதிபதியான உல்லா கான், இஸ்லாமியர். ஹிந்து நம்பிக்கைப் பிரச்சினைகளுக்குள்ளேயே தான் போக விரும்பவில்லை , இதை ஒரு சிவில் சூட்டாக மட்டுமே கருதுவதாகச் சொல்லியிருக்கிறார். ஆனால் தீர்ப்பில் இதர இஸ்லாமியர்களுக்கு ஒரு நீண்ட வேண்டுகோளை, முகமது நபிகள் வாழ்க்கையிலிருந்து மேற்கோளுடன் வைக்கிறார். வழக்கில் இருக்கும் பிரச்சினைக்கு சம்பந்தமே இல்லாத பகுதி இது.

பாபர் ஹிந்துக் கோவிலை இடித்தார் என்பதற்கு எந்த சரித்திர ஆதாரமும் இல்லை. இந்திய தொல்லியல் துறையின் அறிக்கையை மட்டுமே நீதிபதி சர்மா ஆதாரம் காட்டுகிறார். பி.ஜே.பி மத்தியில் ஆட்சியில் இருந்தபோது அளித்த அந்த அறிக்கையின் பல ஓட்டைகளை அப்போதே இதர தொல்லியல் அறிஞர்கள் விமர்சித்திருக்கிறார்கள். ஹிந்துக்கள் மனம் புண்படும்; எனவே நீ மாட்டுக் கறி சாப்பிடவேண்டாம் என்று மகன் ஹுமாயுனுக்கு உயிலில் எழுதிய பாபர், ஹிந்துக் கோயிலை இடித்திருப்பாரா என்பதே கேள்விக்குரியதுதான். இடித்திருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். சில விதி விலக்குகளைத் தவிர, ஒவ்வொரு மன்னனும் தன் நம்பிக்கைக்கேற்ப ஒரு மதத்தை ஆதரித்து இன்னொரு மதத்தினரை துன்புறுத்தினான் என்பதுதான் நம் முழு மன்னராட்சி வரலாறு.

கோவிலை இடித்து மசூதி கட்டுவது இஸ்லாத்துக்கு விரோதமானது என்பதால், கட்டப்பட்டது மசூதியே அல்ல என்று ஒரு விசித்திரமான வாதத்தையும் நீதிபதி சர்மா சொல்லுகிறார். இன்னொருத்தர் வழிபாட்டு இடத்தை இடிப்பது இஸ்லாமிய நெறிகளுக்கு மட்டும்தான் முரணானதா? ஹிந்து, கிறித்துவ, பௌத்த மதங்களெல்லாம் அதை ஆதரிக்கிறதா? ஏனென்றால் இப்போது மறுபடியும் ராமர் கோவிலைக் கட்டுவதற்கு, வழிபாடு நடந்து வந்த மசூதிதானே இடிக்கப்பட்டிருக்கிறது ? இது ஹிந்து

மத கோட்பாட்டின்படி சரி என்று நீதிபதி சொல்வதாகப் பொருள் கொள்ளமுடியுமா? எந்த மத நெறிப்படியும் இன்னொரு மத வழிபாட்டிடத்தை இடித்தோ சிதைத்தோ தங்கள் வழிபாட்டிடத்தை கட்டக் கூடாது என்றால், இந்தியாவில் எத்தனை கோவில்கள், மசூதிகள், தேவலாயங்கள் மிஞ்சும் ?

பூரி ஜகந்நாதர் ஆலயமே பௌத்த விஹாரத்தை இடித்துக் கட்டப்பட்டதுதான் என்று சுவாமி விவேகானந்தரே சொல்லியிருக்கிறார். பூரியில் மட்டுமல்ல, காஞ்சிபுரத்தில் இருக்கும் ஆலயங்கள் பலவும் முன்னர் பௌத்த விஹாரங்களாக இருந்தவைதான் என்பதற்கு தெளிவான சரித்திர ஆதாரங்கள் இருக்கின்றன. சிருங்கேரியில் ஆதி சங்கரர் மடம் கட்டிய இடம் புத்த விஹாரத்தை இடித்துத்தான். ராஜராஜ சோழன் இலங்கையில் சிங்களர்களை வென்றதும், அங்கிருந்த புத்த விஹாரங்களை இடித்து, சைவக் கோயில்களாக மாற்றினான் என்பதும் சரித்திரம்தான். இனி பௌத்தர்கள் இயக்கம் நடத்தி இவற்றையெல்லாம் இடித்து மறுபடி பௌத்த விஹாரங்களாக ஆக்கவேண்டும் என்று நீதிமன்றத்துக்குப் போனால், சர்மாவின் முன்மாதிரித் தீர்ப்பின்படி இடிக்க ஒப்புக் கொள்ள வேண்டி வரும்.

இது ஒரு சிவில் வழக்கு. இந்த நிலம் எங்களுக்குத்தான் சொந்தம் என்று மூன்று பேர் கோருகிறார்கள். யாருக்குச் சொந்தம் என்று தீர்ப்பு தரவேண்டும். இதை விட்டு விட்டு தேவையற்ற விஷயங்களுக்குள் எல்லாம் தலையை நுழைத்து, குழப்பத்தையும் தொடர்ந்து இன்னும் 50 வருடங்களுக்கு மோதலையும் உருவாக்கக்கூடிய ஆபத்தான தீர்ப்பே அலகாபாத் தீர்ப்பு.

நான் நீதிபதியாக இருந்தால், இந்த நிலம் எந்த தனியாருக்கும் தனி அமைப்புக்கும் சொந்தமானதில்லை என்பதுதான், என் தீர்ப்பாக இருக்கும். வெவ்வேறு ஆட்சிக் காலத்தில் அந்தந்த ஆட்சியாளரின் விருப்பு வெறுப்புக்கேற்ப வழங்கப்பட்டவற்றை, ஜனநாயக ஆட்சி பொருட்படுத்த வேண்டியதே இல்லை. மொத்த நிலமும் இன்றைய குடியரசுக்குரியது. அதை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று தீர்மானிப்பது இந்திய அரசின் பொறுப்பு என்று தீர்ப்பளிப்பேன்.

அரசுக்கு ஆலோசனையும் சொல்லுவேன். எல்லா இந்தியர்களுக்கும் மொழி, சாதி, மதம், இனம் கடந்து பயன்படக்கூடிய பொது மருத்துவமனையை அங்கே கட்டுங்கள். எல்லார் ரத்தமும் அங்கே ஓடட்டும் இன்னொருவருக்குப் பயனுள்ள விதத்தில், ரத்த தானமாக. அல்லது ( எனக்கு அணு குண்டில் நம்பிக்கை இல்லாவிட்டாலும் பிரச்சினைக்கு தீர்வாக),

அங்கே பொக்ரான் 3 அணுவெடிப்பு சோதனையை நடத்துங்கள். எந்த தேசபக்தரும் ஆட்சேபிக்கவே மாட்டார்கள். சோதனைக்குப் பின் ஒரு பயலும் அந்த நிலத்தின் பக்கமே போகமாட்டான். கடவுளை விட கதிர்வீச்சுக்குத்தான் அதிகம் பயப்படுவார்கள் !

## இந்த வாரப் பூச்செண்டும், திட்டும்

மேற்படி கட்டுரைக்காக இரண்டுமே எனக்குத்தான் அதிகம் வந்து சேரும் என்பதால், இந்த வாரம் இரண்டும் எனக்கே !

## இந்த வாரக் கேள்வி

கோட்டூர்புரம் சொகுசு நூலகத்தில் வெடிப்பொருள் வெடித்ததை ஒட்டி விசாரித்ததில் அங்கிருக்கும் கட்டடத்தொழிலாளர்கள் எல்லாம் வட மாநிலத்திலிருந்து வந்தவர்கள் என்று தெரிந்ததாம். ஏன் சட்டசபை, மேம்பாலம், நூலகம் எதைக் கட்டினாலும் கட்டடத்தொழிலாளர்களை அரசு இறக்குமதி செய்கிறது ? தமிழ் படித்தால் அரசு வேலை. ஆனால் கட்டடம் கட்டத் தெரிந்த தமிழருக்கு இங்கேயே வேலை தரமாட்டீர்களா?

*கல்கி 9.10.2010*

# யாரை நம்புவது? எங்கே தொடங்குவது?..

லஞ்சத்தை அதிகாரப்பூர்வமாக ஆக்கித் தொலையுங்கள் என்று உச்ச நீதி மன்ற நீதிபதிகள் கடும் வெறுப்பில் சொல்லியிருக்கிறார்கள்.

நீதிபதிகள் மார்க்கண்டேய கட்ஜு, டி.எஸ்.தாக்குர். ஆகியோர்தான் இந்தக் கருத்தைச் சொன்னவர்கள். லஞ்சம் வாங்கியதாகக் கையும் களவுமாகப் பிடிபட்ட ஒரு வருமானவரித் துறை ஆய்வாளரை கீழ் கோர்ட் தண்டித்தது. பஞ்சாப் உயர்நீதிமன்றம் அதை ரத்து செய்து அவரை விடுவித்தது. இப்போது அதன் மீதான அப்பீலை விசாரணைக்கு அனுமதிக்கும்போதுதான், உச்ச நீதி மன்ற நீதிபதிகள், அரசு அலுவலகங்களில் லஞ்சம் இல்லாமல் எதுவும் நகர்வதில்லை என்று விமர்சித்திருக்கிறார்கள். குறிப்பாக வருமானவரி, வணிக வரி, விற்பனை வரித் துறைகளில் லஞ்சம் தலைவிரித்து ஆடுகிறது என்று கூறிய நீதிபதிகள் ஒவ்வொரு அலுவலகத்திலும், இன்ன வேலை நடக்க இவ்வளவு லஞ்சம் என்று அதிகாரப்பூர்வமாக அறிவித்துவிட்டால், மக்களுக்கு கொஞ்சம் சிரமமில்லாமல் இருக்கும் என்று வேதனையில் நையாண்டி செய்திருக்கிறார்கள்.

நீதிமன்றத்தில் அப்போது இருந்த மூத்த வழக்கறிஞர் கே.கே. வேணுகோபாலிடம் நீதிபதிகள் அவர் இதை அரசுக்கு ஆலோசனையாகக் கூறலாமே என்று வேறு சொல்லியிருக்கிறார்கள். அவர் சொன்ன பதிலும், அடுத்து நீதிபதிகள் அவரிடமே, அவர் ஏன் செக் மோசடி போன்ற வழக்குகளில் ஆஜராகிறார் என்பது பற்றி கேட்டு நடத்திய உரையாடலும் நம் பரிசீலனைக்குரியவை.

லஞ்சத்தை அதிகாரபூர்வமாக்குவது தீர்வல்ல என்று சொன்ன வழக்கறிஞர் வேணுகோபால் லஞ்சம் வாங்குவது தவறு என்பதைப் பள்ளிக் கூடத்திலேயே கற்றுத் தருவதுதான் தீர்வு என்று சொல்லியிருக்கிறார்.

நிறைய விஷயங்களைப் பள்ளிப் பருவத்திலேயே கற்றுத் தருவதுதான் சரி என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. ஒழுக்கம், நேர்மை, சக மனிதர்களைப் பற்றிய அக்கறை, சமத்துவம் போன்ற மதிப்பீடுகளும், இசை, நடனம், இலக்கியம், நாடகம், ஓவியம், சிற்பம் போன்றவற்றில் ரசனையையும் குழந்தைப் பருவத்திலேயே ஏற்படுத்தினால்தான் நம் சமூகத்தில் நல்ல அரசியலுக்கான அடித்தளம் ஏற்படமுடியும்; மனதை வக்கிரமாக்காமல் வைரமாக்கும் கலை இலக்கியங்கள் தழைக்க முடியும்.

நம் சிறுவர் சிறுமியர் நல்ல வாக்காளர்களாகவும் சிறந்த ரசிகர்களாகவும் உருவாவதைப் பள்ளிக் கூடத்தில் மட்டுமாக தொடங்கவோ செய்யவோ முடியாது. குடும்பத்திலிருந்தே தொடங்கவேண்டும். பள்ளியில் செய்வதற்குக் குடும்பத்தின் முழு ஆதரவு தேவைப்படுகிறது.

ஆனால் படித்த குடும்பங்களே என்ன செய்கின்றன ? குழந்தைகளை மார்க் வாங்கும் மெஷினாகவும் பணம் உற்பத்தி செய்யும் இயந்திரமாகவும் மாற்றும் கல்வி முறையைத்தான் தேடித் தேடிப் போய் ஆதரிக்கின்றன. தீவிரப் பயிற்சி மூலம் அதிக மதிப்பெண்கள் வாங்க வைக்கும் பள்ளிகளுக்குக் குழந்தைகளை அனுப்பும் பெற்றோர்கள், தங்கள் குழந்தைகள் மாலை நேரத்தில் விளையாடுவதைக் கூட விரும்புவதில்லை. இசையாவது, நடனமாவது, இலக்கியமாவது...அதற்கெல்லாம் நேரமே கிடையாது.

நான் படித்த அறுபதுகளில் பள்ளிக் கூடங்கள் இப்படி இல்லை. எங்களுக்கு வாரம் முழுவதும் இருந்த வகுப்புகளில் ஒரு பகுதியாக, ஓவியம், இசை, நெசவு போன்ற பாடங்கள் எல்லாம் இருந்தன. வருடம் முழுக்க நாடகம் போட்டோம். எனக்கு முந்தைய தலைமுறைகளில் படித்தவர்களுக்கும் இப்படிப்பட்ட சூழல் பள்ளிகளில் இருந்தது.

அந்த கல்வி முறையிலிருந்துதான் சி.வி.ராமன், போன்ற விஞ் ஞானிகளும், தலை சிறந்த மருத்துவர்களும் பொறியாளர்களும் உருவாகியிருக்கிறார்கள். பெயர்ப் பட்டியல் போட்டால் நீளும். இன்றைய கல்விமுறையிலிருந்து அல்ல. இன்று ஐ.டி படித்துவிட்டு லட்சக்கணக்கில் பணம் சம்பாதிக்கும் இளைஞர்களிலிருந்து, தன் விருப்பத்துக்கு மாறாகக் குழந்தை

பெற்றதற்காக மனைவியை ஒதுக்கிவைத்துவிட்டு, குழந்தையைக் கொல்பவர்கள் உருவாகியிருக்கிறார்கள். முந்தைய படித்த மூத்த தலைமுறைகளிலிருந்து விதிவிலக்காகக் கூட இப்படிப்பட்ட கொடூரர்களைப் பார்க்க முடியாது.

பள்ளிக்கூடங்களுக்குச் சென்று அடிப்படை இசை அறிவைப் கட்டும் பயிற்சிகள் நடத்திவரும் ப்ரஹ்த்வனி அமைப்பின் இசைக் கலைஞர் அனில் சீனிவாசன், எங்கள் கேணி அமைப்பின் சந்திப்பில் சொன்னார். டி.வி சூப்பர் சிங்கர் போட்டிகளுக்குக் குழந்தையை அனுப்பும் பெற்றோர், தமக்கு போன் செய்து குழந்தையைப் பயிற்றுவிக்கும்படி கேட்கிறார்கள். எப்போது ? நிகழ்ச்சிக்கு மதியம் ஆடிஷனுக்குப் போவதற்கு ஒரு மணி நேரம் முன்னால், கொஞ்சம் டிப்ஸ் வேண்டுமென்று !

எந்த விஷயத்தைக் கற்கவும் தொடர்ந்த பயிற்சியும் உழைப்பும் தேவை என்பதை மதிக்கும் மன நிலை மாறிவருகிறது. எப்படியாவது ஏதாவது செய்து 35 லட்ச ரூபாய் வீட்டை டி.வியில் பரிசாகத் தட்டி வந்துவிடமுடியாதா என்ற பேராசை ஆட்டி வைக்கிறது. படித்த சுமாரான வசதி உள்ள குடும்பங்களிலேயே பண ஆசை பிரதானமாகி வரும்போது, ஏதும் இல்லாத குடும்பங்கள் ஆசைப்படுவதில் என்ன தவறு இருக்க முடியும் ?

அவர்கள் ஆசைப்படத்தான் முடியுமே தவிர, படித்த குடும்பங்களுக்கு உள்ள வழிகள் அவர்களுக்கு இல்லை. அவர்கள் அதிகபட்சம் ஓட்டுக்கு ஆயிரம் ரூபாயும், இலவச டி.வி பெட்டி போன்றவற்றை அலைந்து திரிந்து பெறவும் மட்டும்தான் முடியும். அதில் கூட அவர்களுடன் படித்த வசதியான குடும்பங்கள் போட்டியிடுகின்றன. பங்களாக்களே நிறைந்த கருணாநிதி நகர் பகுதியில் குடியிருப்போர் சங்கம், எங்கே எப்போது இலவச டி.வி டோக்கன் பெற வேண்டும் என்ற அறிவிப்பை பூங்கா அறிவிப்புப் பலகையில் தெரிவித்து சேவை செய்கிறது. ஆகஸ்ட் 15ல் சுதந்திர தினத்தை மிட்டாய் கொடுத்துக் கொண்டாடுவது தவிர செய்யும் சமூகப் பணி இதுதான்.

உச்ச நீதிமன்ற நீதிபதிகள் வேதனைப்பட்டிருக்கும் லஞ்சப் பிரச்சினையில் பிரதானக் குற்றவாளிகள் யார் ? படித்தவர்கள்தான். அவர்கள்தான் லஞ்சம் வாங்கும் அரசு வேலைக்கும், லஞ்சம் கொடுக்கும் தனியார் நிறுவன அதிகாரிகள் வேலைக்கும் செல்ல முடியும். தாசில்தார் முதல் தலைமைச் செயலாளர் வரை எல்லாரும் படித்தவர்கள்தான்.

ஊழல் செய்யும் அரசியல்வாதிகளில் வேண்டுமானால் கொஞ்சம் படிக்காதவர்கள் இருக்க முடியும். ஆனால்,

அவர்களுடைய கறுப்பை வெளுப்பாக்கவும், மறைக்கவும், மறுக்கவும் உதவி செய்யும் ஆடிட்டர்களும், வழக்கறிஞர்களும் காவல் அதிகாரிகளும் மெத்தப் படித்தவர்கள்தான். அவர்கள் உதவி இல்லாமல் எந்த அரசியல்வாதியும் விஞ்ஞானப்பூர்வமான ஊழலில் ஈடுபடவே முடியாது.செக் மோசடி வழக்கில் ஆஜராகிறீர்களே, காந்திஜி ஒருபோதும் அப்படியெல்லாம் ஆஜரானதில்லை என்று நீதிபதிகள் கேட்டதற்கு, வேணுகோபால் சொன்ன பதில், அப்படி ஆஜராகாவிட்டால், பெரும்பாலான வழக்குகள் தன் கையை விட்டுப் போய்விடும் என்பதுதான். ஸ்கேன் செண்ட்டரிடம் கமிஷன் வாங்கிக் கொண்டு பிரிஸ்கிரிப்ஷன எழுதும் டாக்டர்கள் படிக்காத படிப்பா?

படித்தவன் சூதும் வாதும் பண்ணினால், போவான் போவான் அய்யோவென்று போவான் என்று பாரதி சபித்தது அன்றைக்கு வேண்டுமானால் படித்தவனையாக இருக்கலாம். ஆனால் இன்று படித்தவன் செய்யும் சூது வாதுகளால் அய்யோவென்று போவது படிக்காதவர்கள்தான். இந்த அவலமான சூழ்நிலையில் மக்களின் வேதனைகளுக்கு நிவாரணங்களை அளிக்க எஞ்சியிருப்பது மீடியாவும் நீதித் துறையும்தான். கொடுமை கொடுமை என்று கோவிலுக்குப் போனால் அங்கே ரெண்டு கொடுமை கூத்தாடுது என்பது போல இவையும் ஆகிவருகின்றன.

இந்த வாரம் ஓர் ஆங்கில சேனலின் டிபேட்டில் பங்கேற்க அழைத்திருந்தார்கள். ரஜினி ஃபினாமினன், ஒரு ஸ்டார் பவரா, மார்க்கெட் மஸிலா என்று விவாதித்தோம். விற்பனை உத்திதான் என்று நானும் சக பத்திரிகையாளர் சுதாங்கனும் வாதிட்டோம். கடைசியில் ஜெயித்தது ஸ்டார் பவர் அணிதான். காரணம் அந்த சேனலும் சன் குழும எஸ்.சி.வி வழியாகத்தான் ஒளிபரப்பாக வேண்டியிருக்கிறது; வேறு மாதிரி தீர்ப்பு சொல்ல முடியாது. பத்திரிகையாளர்கள் உண்மைக் கருத்தைப் பேசினால், அவர்களின் பத்திரிகைக்குப் பட விளம்பரம் நிறுத்தப்பட்டுவிடும். இதுதான் நமது மீடியா சூழல்.

நீதித்துறைக்கு வந்தால், எந்த உச்ச நீதிமன்றம் லஞ்சம் பற்றி இவ்வளவு வேதனையும் அங்கலாய்த்திருக்கிறதோ, அதே உச்ச நீதி மன்றத்தின் முன்னாள் தலைமை நீதிபதிகள் ஆறு பேர் ரங்கநாத் மிஸ்ரா, கே.என்.சிங். அகமதி, எம்.எம்.பூஞ்சி, ஏ.எஸ்.ஆனந்த், ஒய்.கே.சபர்வால் ஆகியோர் ஊழல் செய்திருக்கிறார்கள் என்று சந்தேகிக்க இடமிருக்கிறது என்று வழக்கறிஞர்கள் சாந்தி பூஷனும் பிரசாந்த் பூஷணும் மனு கொடுத்திருக்கிறார்கள். எங்கள் மீது நீதிமன்ற அவமதிப்பு வழக்கு போட்டாலும் பரவாயில்லை என்று பூஷண்கள் சொல்லியிருக்கிறார்கள். இந்த மனு மீது இன்னும்

உச்ச நீதி மன்றம் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

சென்ற வாரம் நீதிபதிகளுக்கான நடத்தை விதிகள் சட்டமுன்வடிவுக்கு டெல்லியில் அமைச்சரவை ஒப்புதல் அளித்தது. அதே சமயத்தில், சென்னையில் உயர்நீதிமன்ற நீதிபதிகளில் பலர் குடும்பங்களுடன் பிரத்யேகமான எந்திரன் ஷோவுக்கு சென்று கண்டு களித்தார்கள். ஆளுக்கு 500 ரூபாய் டிக்கட் வாங்கிக் கொண்டு தியேட்டரில் ஒரு நீதிபதி சினிமா பார்க்க முடியாதா என்ன ? இதை ஓசியில் செய்திருக்கும் நீதிபதிகள், நாளைக்கு ரஜினி, சன் குழுமம், ஷங்கர் ஆகியோருக்கு எதிரான வழக்குகள் வரும்போது இவர்கள் அவற்றை விசாரிக்கும் தார்மிக உரிமையையே இழந்துவிடுகிறார்கள் என்பதுதான் நம் அக்கறைக்குரியது.

எங்கே போகிறோம் நாம் ? இப்போது 5 லிருந்து 15 வயது வரையுள்ள சிறுவர்கள் மூலம்தான் எல்லாம் மாறும் என்று நான் நம்பியிருக்கிறேன் அவர்களை பெற்றோரும் ஆசிரியர்களும் கெடுக்காமல் இருந்தால்.

## இந்த வாரப் பூச்செண்டு

ஊழல் செய்ததாகக் கைதான முன்னாள் மருத்துவக் கவுன்சில் தலைவர் கேத்தன் மேத்தாவின் டாக்டர் லைசன்சை தற்காலிகமாக ரத்து செய்திருப்பதற்காக மருத்துவக் கவுன்சிலுக்கு இ.வா.பூ.

## இந்த வார நகைச்சுவை

எங்களுடன் கூட்டணி மகிழ்ச்சி தருவதாக சோனியா சொல்லியிருகிறார். எங்களுக்கும் மகிழ்ச்சிதான். கூட்டணிகள் வரும் போகும். தி.மு.க ஒருபோதும் சுயமரியாதையை இழக்காது. திருச்சியில் முதல்வர் கருணாநிதி.

## இந்த வார அதிர்ச்சி

மத்தியபிரதேசத்தில் இரு வருடங்களில் 400 லாரிகள் மொத்தமாக 1283 டன் வெடிமருந்துகளுடன் காணாமற் போயிருகின்றன. குவாரிகளில் பயன்படும் இந்த வெடிகள் கானாமற்போனதாகச் சொல்லி ஒரே வியாபாரி இவற்றைக் கறுப்பு மார்க்கெட்டில் விற்றிருக்கிறார்.

*கல்கி 16.10.2010*

# அழகிரி பூச்சாண்டி ஒழிந்தது !

ஜெயலலிதாவின் மதுரைப் பொதுக் கூட்டம் அவருக்கு மிகப் பெரிய வெற்றி என்பதில் சந்தேகமில்லை. கோவையிலும் திருச்சியிலும் பிரும்மாண்ட கூட்டங்களை நடத்திக் காட்டியதை விட மதுரையில் நடத்தியது கூடுதல் முக்கியத்துவம் உடையது.

மதுரையில் ஜெயலலிதாவைக் கூட்டம் நடத்த விடாமல் தடுக்க தி.மு.க அரசு பல விதங்களில் முயற்சித்தது. உயர் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்து கூட்ட அனுமதியைப் பெற்றார் ஜெயலலிதா. அடுத்தபடியாக கொலைமிரட்டல் கடிதங்கள். இவையும் பயன் தரவில்லை.

ஜெயலலிதாவுக்கு மட்டும்தானா கொலை மிரட்டல், எனக்கும்தான் என்று கருணாநிதி தரப்பிலிருந்து ஒரு ஈ மெயில் மிரட்டலும், ஒரு எஸ்.எம்.எஸ் மிரட்டலும் வந்ததாக அறிவிக்கப்பட்டன. மொட்டைக் கடிதமெழுதுபவர்களைக் கண்டுபிடிப்பது கொஞ்சம்கடினம். ஆனால் ஈமெயில், எஸ்.எம்.எஸ் ஆசாமிகளைப் பிடிப்பது அவ்வளவு கடினமானதல்ல.

பொது வாழ்க்கையில் இருந்தால் எல்லா விதமான மிரட்டல்களும் வருவது சாதாரணம். அயோத்தி தீர்ப்பு பற்றி எழுதியதற்காக, எனக்குக் கூடத்தான் ஆபாசமான கடிதங்களும் போன் கால்களும் வந்துகொண்டிருக்கின்றன. (பொதுவாக எதையும் பாராட்டுபவர்கள் இவ்வளவு சுறுசுறுப்பாக வேலை செய்வது இல்லை!).

கோல்வால்கர், ஹெட்கவார், வாஜ்பேயி ஆகியோர் படங்களுடன் லெட்டர்ஹெட் போட்டுக் கொண்டு, ஜெய் ஆர்.எஸ்.எஸ். வாழ்க பா.ஜ.க என்ற தலைப்பு

முழக்கங்களுடன், திருக்கோயிலூர் இந்து முன்னணி டி.கே.எஸ் ராஜசேகரன் என்று பெயர் விவரம் அச்சிட்ட தாளில் ஒருவர், என்னை முச்சந்தியில் கமுகு மரத்தில் கட்டி பெண்களை வைத்து அடித்தே சாகடிப்பதாக எழுதியிருக்கிறார். ஊருக்கு பத்து பேர் இப்படிப்பட்ட மன நோயாளிகள் இருக்கத்தான் செய்கிறார்கள். உண்மையில் கொல்லுகிறவன் மிரட்டுவதே இல்லை. தா.கிருஷ்ணனனையோ சங்கர் ராமனையோ முன்கூட்டி மிரட்டிவிட்டுக் கொன்றதாகத் தெரியவில்லை. மிரட்டல் கடிதங்கள் ஒருவரின் கோபத்துக்கு வடிகால் என்றே நான் நினைக்கிறேன்.

சீப்பை ஒளித்து வைத்தால் கல்யாணத்தை நிறுத்திவிடலாம் என்று எண்ணும் மூடனைப் போல, தி.மு.க ஆட்சி மதுரை நகரில் ஜெயலலிதா கூட்டத்துக்கு ஃபிளெக்ஸ் போர்டுகள் வைக்க விடாமல் தடுத்தது. போக்குவரத்துக்கு பாதிப்பு வருமாம். வருடம் 365 நாளும் மதுரையெங்கும் ஜொலிக்கிற அழகிரி போர்டுகளால் பாதிப்பு வராதா?

இப்படி எந்த மிரட்டலையும் எந்தத் தடையையும் பொருட்படுத்தாமல், மதுரையில் வெற்றிகரமாகக் கூட்டம் நடத்தி முடித்திருக்கும் ஜெயலலிதாவின் 'சாதனை' ( ஒரு கூட்டம் நடத்துவதே சாதனையாகிவிட்டது என்ன கொடுமை !), அவருக்கு ஓட்டுகளையும் கொண்டு வந்து கொட்டுமா என்பது சந்தேகம்தான். கூட்டணிக் கணக்குகளும் இன்றைய கோளாறான தேர்தல் முறையில் முக்கியமானவை.

மதுரைப் பேச்சில் ஜெயலலிதா, தமிழகமெங்கும் தி.மு.க ஆட்சிக்கெதிராக மக்கள் மத்தியில், வீட்டுக் கூடங்களில், டீக்கடைகளில், அரசு தனியார் அலுவலகங்களில், திரைப்படத்துறையின் படப்பிடிப்புத்தளங்களில், முணுமுணுப்புகளாகப் பேசப்பட்டுக் கொண்டிருக்கும் அத்தனை குமுறல்களையும், ஒரு குற்றப்பத்திரிகையாகத் தொகுத்து வழங்கியிருக்கிறார். ஒவ்வொரு அரசு அலுவலகத்திலும் லஞ்சம், காவல் துறையில் லஞ்சம், மணல் கொள்ளை, குவாரி கொள்ளை, சினிமா துறையின் மீது கிடுக்குப் பிடி, குடும்ப உறுப்பினர்களின் அராஜகம், ரவுடிகளைக் கொண்டு மிரட்டல் என்று ஜெயலலிதா பட்டியலிட்டிருக்கும் விஷயங்கள் ஏற்கனவே மக்கள் அனுபவித்து அறிந்துகொண்டிருப்பவைதான்.

இதற்கு மாற்று ஜெயலலிதா அல்ல என்பதுதான் நமக்கு இருக்கும் மிகப்பெரிய சிக்கல். கருணாநிதிக்கு மாற்று ஜெயலலிதா, இவருக்கு மாற்று அவர் என்பது, வீட்டை எரிக்கிற கொள்ளிகளில் எந்தக் கொள்ளி மேல் என்ற ஆராய்ச்சியாகத்தான் முடிகிறது.

திரும்ப ஆட்சியைப் பிடிப்பதற்காக தொடர் கூட்டங்கள் நடத்தி முயற்சிப்பது ஜெயலலிதாவின் அரசியல் தேவை. பதிலுக்கு அதே ஊர்களில் தானும் கூட்டங்கள் நடத்திக் காட்டி, முடிந்தால் மதுரையில் அழகிரி ஸ்டாலின் இருவரோடும் தோன்றி மக்களைத் தன் பக்கம் திருப்பப் பார்ப்பது கருணாநிதியின் அரசியல் தேவை. இவை எதுவும் மக்களின் தேவைகள் அல்ல.

ஜெயலலிதாவின் மதுரைக் கூட்டத்தால் ஒரே ஒரு மகத்தான பயன் ஏற்படும் என்று நம்புகிறேன். மதுரை மக்கள் அழகிரி பூச்சாண்டி பயத்திலிருந்து விடுதலையாவார்கள். கடந்த மாதம் மதுரையில் பத்து நாட்கள் தங்கியிருந்தபோது எல்லா தட்டு மக்களுடனும் பேசினேன். பேராசிரியர்கள் முதல் தினக்கூலி உழைப்பாளிகள் வரை பரவலாக அழகிரி பற்றிய பயத்துடனே அன்றாட வாழ்க்கையை நடத்துவதாகச் சொன்னார்கள்.

ஜெயலலிதாவின் பிரும்மாண்டமான கூட்டம், அழகிரி என்ற பலூனின் காற்றை இறக்கிவிட்டிருக்கிறது. இனி அழகிரியின் ஆட்கள் பழையபடி மக்களிடமும் கடைக்காரர்களிடமும் அராஜகங்கள் செய்தால், திருப்பி எதிர்த்துக் கேட்கும் துணிச்சலை மக்கள் திரும்பப் பெற இந்தக் கூட்டம் உதவும். இனி அழகிரியும் மதுரையில் அடக்கி வாசித்தே ஆகவேண்டிய கட்டாயம் ஏற்படும். நன்றி ஜெயலலிதா. நன்றி மட்டும்தான். என் ஓட்டு உங்களுக்கும் இல்லை.

நம் ஓட்டு யாருக்குப் போக வேண்டும் என்பதை மக்களாகிய நாம் தெளிவாக ஆழமாக சிந்தித்து தீர்மானிக்க வேண்டும். படித்தவர்கள் மத்தியில், குறிப்பாக படித்த இளைஞர்கள் நடுவே இப்போதைய அரசியல் பற்றி பெரும் அதிருப்தியும் கூடவே ஏதாவது செய்ய வேண்டுமென்ற ஆர்வமும், ஆனால் என்ன செய்வது என்று தெரியாத குழப்பமும் இருப்பதை நேரடியாக அறிந்து வருகிறேன்.

படித்தவர்கள் அரசியலில் சில மாற்றங்களைக் கொண்டு வருவதற்கான வாய்ப்பாக, நான் தமிழக சட்ட மேலவை உருவாக்கத்தைப் பார்க்கிறேன். மேலவை என்பது நேரடியாக தேர்தலில் நின்று மக்கள் வாக்குகளைப் பெற முடியாத, அதற்கான செல்வாக்கோ, பணபலமோ, கட்சி அமைப்பு பலமோ இல்லாத, அறிஞர்கள், சாதனையாளர்கள், கல்வியாளர்கள், தொழில் முனைவர்கள் போன்றோர் பங்கு பெறுவதற்கான அமைப்பு. ஒரு சமூகத்தின் மேம்பாட்டுக்கு, ஆட்சி சிறப்பாக நடப்பதற்கு இவர்களுடைய ஆலோசனைகள், விமர்சனங்கள் ஒலிப்பதற்கான

அவையாக மேலவை மாநிலத்திலும் டெல்லியிலும், நம் அரசியல் சட்டத்தை உருவாக்கிய மேதைகளால், வடிவமைக்கப்பட்டன.

நம் அரசியல்வாதிகள் இதைச் சீரழித்து, இதையும் கட்சிக்காரர்கள், விஸ்வாசிகள் பங்கேற்கும் இடமாக மாற்றினார்கள். தனக்கு எதிரானவர்கள் நிறைய இருக்கும் இடம் என்று கருதி எம்.ஜி.ஆர் மேலவையையே ஒழித்தார். 19 வருடங்கள் கழித்து கருணாநிதி அதை மீண்டும் கொண்டு வரும்போது, அதையும் தனக்கு எதிர்ப்பு இல்லாத அவையாக இப்போதே உருவாக்கி வைத்துவிட வேண்டுமென்பதற்காக, சட்டமன்றத் தேர்தலுக்கு முன்பாகவே மேலவைத் தேர்தலை நடத்திவிட திட்டமிட்டிருக்கிறார்.

மேலவையை அதன் அசல் நோக்கத்துக்கான இடமாக ஆக்குவதற்கான வாய்ப்பு, படித்தவர்களுக்கு இப்போது வந்திருக்கிறது. மேலவையில் மொத்த இடங்கள் 78. இதில் 26 இடங்களுக்கானவர்களை இப்போதைய எம்.எல்.ஏக்கள் தேர்ந்தெடுப்பார்கள். இன்னொரு 26 பேரை உள்ளாட்சி (பஞ்சாயத்து, நகராட்சி முதலியவற்றின்) பிரதிநிதிகள் தேர்ந்தெடுப்பார்கள். பட்டதாரிகள் சார்பில் 7 பேரும் ஆசிரியர்கள் சார்பில் 7 பேரும் தேர்வாகவேண்டும். மீதி 12 பேரை ஆளுநர் நியமிப்பார்.

நாம் செய்யவேண்டியது என்ன ?

1.ஆளுநர் எந்த அரசியல்வாதியையும் கட்சி சார்புள்ளவரையும் நியமிக்கக்கூடாது என்று வற்புறுத்திக் கடிதம் எழுத வேண்டும். பேராசிரியர் மு.ஆனந்தகிருஷ்ணன், கல்வியாளர் வெ.வசந்தி தேவி போன்ற அறிஞர்களை, கலைஞர்களை , பல்வேறு தன்னார்வ தொண்டு நிறுவனப் பணி செய்வோரை நியமிக்க வேண்டும் என்று கோருவோம். please nominate only non party independent intellectuals, artistes and NGO workers to legislative council என்று ஆளுநர், தமிழ்நாடு , ராஜ் பவன், கிண்டி சென்னை 32க்கு கடிதம் அனுப்புங்கள்.

2. உள்ளாட்சிகளில் அடிமட்டத்தில் கட்சி அடிப்படையில் தேர்தல் கூடாது என்று ஏற்கனவே சட்டம் இருக்கிறது. எனவே உள்ளாட்சிகளின் பிரதிநிதிகளாக மேலவைக்கு வருவோரும் கட்சி சார்பற்றவர்களாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்துவோம். பல உள்ளாட்சிகளில் கட்சி சார்பற்றவர்கள் ஜெயித்திருக்கிறார்கள்.

3. ஏழு பட்டதாரி தொகுதிகளிலும் ஏழு ஆசிரியர் தொகுதிகளிலும், கட்சி சார்பற்ற பட்டதாரிகளும் ஆசிரியர்களும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இந்த தொகுதிகளில் வாக்களிப்பது யார் , போட்டியிடுவது எப்படி என்பதே பலருக்குத் தெரியாது. ஏற்கனவே வாக்காளர் பட்டியலில் பெயர் உள்ளவர்களில் இருக்கும்

பட்டதாரிகளும் ஆசிரியர்களும் ஆட்டோமாடிக்காக இதிலும் வாக்களிக்க வகையில்லை. இந்தத் தொகுதிக்கென்று தன்னை வாக்காளராகப் பதிவு செய்துகொண்ட பட்டதாரியும் ஆசிரியரும் மட்டுமே வாக்களிக்கலாம்.

இப்படிப் பதிவு செய்வதற்கான கடைசி நாள் நவம்பர் 6. இன்னும் பத்துப் பதினைந்து நாட்கள்தான் இருக்கின்றன. சென்னையில் மாநகராட்சி அலுவலகம் எதிலும் சென்று பதிவு செய்யலாம். மற்ற ஊர்களில் தாலுகா அலுவலகம். இது பற்றிய விவரங்கள் www.elections.tn.gov.in. என்ற இணைய தளத்தில் உள்ளன.

பட்டதாரி ஆசிரியர் தொகுதிகளில் தன்னை வாக்காளராகப் பதிவு செய்யாத ஒவ்வொருவரும் நம் அரசியலை விமர்சிப்பதற்கான தார்மிக அருகதையை இழந்துவிடுகிறோம் என்பதை நினைவில் வைத்துக் கொள்வோம்.

4.எம்.எல்.ஏக்கள் தேர்ந்தெடுக்கும் 26 மேலவை உறுப்பினர்கள் தவிர இதர 52 உறுப்பினர்கள் அனைவரும் கட்சி சார்ந்தவர்களாக இல்லாமல் பொது மனிதர்களாக அமையும் வாய்ப்பை நாம் ஏற்படுத்த வேண்டும். அப்போதுதான் மேலவை சட்டப் பேரவையின் மனசாட்சியாக செயல்பட முடியும். இல்லையேல் ஜால்ரா எதிரொலியாக ஆகிவிடும்.

5.தமிழ் நாட்டின் அறிவுஜீவிகள், கலைஞர்கள், படைப்பாளிகள், படித்த இளைஞர்கள் பங்கேற்கும் இடமாக மேலவையை உருவாக்கினால்தான், தடம் புரண்டு போய்க் கொண்டிருக்கும் தமிழக அரசியலில் நெறிகளையும், பொது ஒழுக்கத்தையும், சமூக அக்கறையையும் உயிர்ப்பிக்க முடியும்.

அப்போதுதான் இதை எழுதும் நானும் இதைப் படிக்கும் நீங்களும் நம்மைப் போன்றவர்களும் அரசியலுக்கு வர முடியும். ஜெயலலிதாக்களும் கருணாநிதிகளும் மட்டுமே அரசியலுக்கு வருவதைத் தடுக்க முடியும்.

## இந்த வாரப் பூச்செண்டு

இந்த நூற்றாண்டின் பூச்செண்டு இது என்றே சொல்லலாம். சிலியில் சுரங்கத்துக்குள் பூமிக்கு அரை மைல் கீழே சிக்கியவர்களை 68 நாட்கள் கழித்து மீட்ட சிலி அரசுக்கும், அதற்கு உழைத்த அத்தனை பேருக்கும், மன உறுதியுடன் தாக்குப் பிடித்த 33 சுரங்கத் தொழிலாளிகளுக்கும் இ.வா/நூ பூ.

## இந்த வார அதிர்ச்சி

சராசரியாக ஒவ்வொரு நபரும் ஒரு வருடத்தில் பயன்படுத்தும்

*பருப்பு தானியங்களின் அளவு: அமெரிக்கா: 889.5 ஐரோப்பா:: 557.3 கிலோ. சீனம்: 289.1கிலோ. ஆப்ரிக்கா: 196.4 கிலோ. இந்தியா: 174.2 கிலோ.*

## இந்த வார திட்டு

*எம்.ஜி.ஆர் மருத்துவப் பல்கலைக்கழகத்தில் நியமன முறைகேடுகள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் அலுவலகம், ஆளுநர் அலுவலகம் ஆகியவற்றின் தலையீட்டால் நடந்திருப்பது அம்பலமானபின்னரும், விசாரணை முடியும்வரை பதவியிலிருந்து விலகியிருக்க முன்வராத அமைச்சருக்கும் ஆளுநர் செயலாளருக்கும் இ.வா.தி.*

***கல்கி 23.10.2010***

# ஸ்டாலினுக்கும் பொன்முடிக்கும் இரண்டு கடிதங்கள்

## 1. அன்புள்ள துணை முதல்வர் மு.க. ஸ்டாலின் அவர்களுக்கு

வணக்கம்.

உங்கள் தனிச் செயலரின் எண்ணைக் கண்டுபிடித்து உங்களைச் சந்திக்க நேரம் வாங்கி ஒரு முக்கியமான சமூகப் பிரச்சினையை உங்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்பினேன். அதற்குத் தாமதம் ஆகும் என்பதால் இந்தக் கடிதம்.

உங்கள் நடவடிக்கையை வேண்டும் இந்த விஷயம் தொடர்பாக, முதலில் என் மகன் மனுஷ் நந்தனைப் பற்றிச் சொல்லியாகவேண்டும். அவருக்கு இது பிடிக்காது என்றபோதும். உங்கள் மகன் உதயநிதி தயாரிப்பில் கமல்ஹாசன் நடிக்க, கே.எஸ்.ரவிகுமார் இயக்கும் மன்மதன் அம்பு திரைப்படத்தின் ஒளிப்பதிவாளராக தற்போது பணியாற்றிவருகிறார். அதற்கு முன்பு அவர், பிரபல ஒளிப்பதிவு இயக்குநர் ரவி.கே.சந்திரனின் உதவி ஒளிப்பதிவாளராக சுமார் நான்காண்டுகள் மும்பையில் இந்திப்படங்களில் வேலை செய்தார். உதயநிதியின் மேற்படிப் படத்துக்கு ரவி.கே.சந்திரனைக் கேட்டிருந்தார்கள். அவர் தன் உதவியாளரான மனுஷ் நந்தனைப் பரிந்துரைத்ததால், மனுஷுக்கு இந்த வாய்ப்பு கிட்டியது.

ரவியிடம் வேலை செய்வதற்கு முன்னால் மனுஷ் நந்தன் தமிழக அரசு நடத்தி வரும் திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவு பயின்றார். அதற்கு முன்னால்

அவர் ப்ளஸ் டூ படிக்கும்போது நீங்கள் சென்னை மேயராக இருந்தீர்கள். உங்கள் நிர்வாகத்தின் கீழ் நடக்கும் மாநகராட்சிப் பள்ளியில் தான் என் மகன் படித்தார். அந்தப் பள்ளியைப் பற்றியும் படிப்பைப் பற்றியும்தான் இப்போது உங்கள் நடவடிக்கை உடனடியாகத் தேவைப்படுகிறது.

என் மகன் ஒரு தனியார் மெட்ரிக் பள்ளியில் பத்தாவதை முடித்ததும், ப்ளஸ் டூவில் புகைப்படம் படிக்க விரும்பினார். அப்படி ஒரு பாடப்பிரிவு ப்ளஸ் டூவில் எங்காவது உண்டா என்று தேடினோம். இந்தியாவிலேயே , தமிழகத்திலேயே. ஒரே ஒரு பள்ளியில் மட்டும்தான் அந்தப் பிரிவு இருக்கிறது. அதுதான் சூளைமேட்டில் இருக்கும் மாநகராட்சிப் பள்ளி. அந்த மாநகராட்சிப் பள்ளியில் என்னைப் போன்ற நடுத்தர வகுப்பினரின் குழந்தைகள் பெரும்பாலும் சேர்வதில்லை. ஏழை, பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் குழந்தைகளே 99 சதவிகிதம் படிக்கிறார்கள். திருவான்மியூர் வீட்டிலிருந்து சூளைமேடு வரை தினசரி சென்று அங்கே படித்ததுதான், என் மகனின் வாழ்க்கையையே அவர் விரும்பிய சரியான தடத்தில் கொண்டு சென்றது.

முதல் வருட முடிவிலேயே மாணவர்களுக்கு ஓரளவு புகைப்படம் எடுக்கும் திறமை அங்கே புகட்டப்பட்டுவிடுகிறது. இரண்டாவது வருடம் படிக்கும்போதே ஓய்வு நேரங்களில் தெரிந்தவர்கள் வீட்டுத் திருமணம், சடங்குகள், கொண்டாட்டங்கள் முதலியவற்றுக்கு சென்று புகைப்படம் எடுத்து தங்கள் செலவுக்கான தொகைகளை சம்பாதிக்கும் அளவுக்கு மாணவர்கள் தேர்ந்துவிடுகிறார்கள். என் மகனும் அப்படித்தான் புகைப்படக்காரராக உருவானார்.

அடுத்தபடியாக ஒவ்வோராண்டும் அங்கிருந்து குறைந்தது மூன்று பேர் முதல் ஐந்து பேர் வரை திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவு, படத்தொகுப்பு, படம் பதனிடுதல் பிரிவுகளுக்குத் தேர்வாகிறார்கள். ஏழை எளிய, நடுத்தர வகுப்புகளிலிருந்து வரும் இளைஞர்களுக்கு இது ஓர் பெரும்பேறு. எந்தத் தனியார் நிறுவனத்திலும் புகைப்படக் கலையையோ திரைப்படக் கலையையோ பல லட்சம் ரூபாய்கள் செலவழிக்காமல் கற்கவே முடியாது.

இவ்வளவு சிறப்பான பாடப் பிரிவை இந்த ஆண்டுடன் மூடிவிடப் போவதாக உங்கள் நிர்வாகத்தின் கீழுள்ள மாநகராட்சி அறிவித்துள்ளது. இந்தியாவிலேயே ப்ளஸ் டூவில் புகைப்படம் கற்றுத் தரும் ஒரே பள்ளி இதை மூடுவதாக அறிவித்திருப்பது எனக்குப் பெரும் அதிர்ச்சியைத் தருகிறது.

இதை ஏன் மூடவேண்டும்? சேர்வோர் எண்ணிக்கை குறைவாக

உள்ளது என்கிறார்கள். இப்படி ஒரு பாடப்பிரிவு இருப்பது இதர மாநகராட்சிப் பள்ளிகளில் பத்தாவது படிக்கும் மாணவர்களுக்கே கூடத் தெரியாது. விளம்பரமே செய்யாமல் ரகசியமாக நடத்திக் கொண்டிருக்கும்போது எப்படி மாணவர்கள் சேர்வார்கள் ? ஒவ்வோராண்டும் நானே குறைந்தது ஒருவரை அங்கே சேர்த்து வருகிறேன்.

இன்னும் பல பள்ளிகளிலும் மாவட்டத்துக்கு ஒரு பள்ளியிலேனும் கூட ப்ளஸ் டு புகைப்படப் பிரிவைத் தொடங்கலாம். தொழிற்கல்வியின் கீழ் கற்றுத்தரப்படும் பாடப் பிரிவுகளிலேயே வாழ்க்கை வசதிக்கான வாய்ப்பை அதிகமாகத் தரக் கூடிய படிப்பு புகைப்படக்கலை. ப்ளஸ் டூவுக்குப் பிறகு படிக்காவிட்டாலும் கூட, புகைப்படக்காரராக நல்ல வருவாயுடன் கௌரவமாக வாழ்க்கையை நடத்த முடியும்.

பத்திரிகை, சினிமா, மீடியா, தொழிற்துறை, அறிவியல் துறை என்று பல துறைகளிலும் புகைப்படக்காரருக்கான வேலை வாய்ப்புகளும், ஸ்டுடியோ வைப்பது போன்ற சுய வேலை வாய்ப்பும் உள்ள படிப்பு இது. படிக்கிறபோதே கூட மாநகராட்சியின் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் இந்த மாணவர்கள் வந்து புகைப்படம் எடுக்க வேண்டும் என்ற உத்தரவைப் பிறப்பித்தால் அவர்களுக்கும் மாநகராட்சிக்கும் பெரும் பயன் ஏற்படும்.

எனவே நீங்கள் உடனடியாகத் தலையிட்டு, தமிழகத்துக்கும் சென்னை மாநகராட்சிக்கும் பெருமை தரக்கூடியதாக உள்ள இந்தப் ப்ளஸ் டு புகைப்படப் பிரிவை மூடும் உத்தரவை ரத்து செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சூளைமேடு பள்ளியின் புகைப்படப் பிரிவின் முன்னாள் இந்நாள் மாணவர்களுடைய புகைப்படக் கண்காட்சி ஒன்றை மாநகராட்சி சார்பில் நடத்தவும் இந்தக் கல்விப்பிரிவு பற்றிப் போதுமான விளம்பரங்கள் செய்யவும் ஏற்பாடு செய்யுங்கள்.

சமூகத்தின் அடித்தட்டு மக்களுக்கு பெரிதும் உதவக்கூடிய இந்தக் கல்விப்பிரிவைத் தொடர்ந்து நடத்த வெளியிலிருந்து தேவைப்படும் உதவிகளை என்னைப் போன்றோர் எப்போதும் செய்யத் தயாராக உள்ளோம். விடுதலைச்சிறுத்தைகள் தலைவர் திருமாவளவன், இயக்குநர் தங்கர் பச்சான் ஆகியோருக்கெல்லாம் நான் நேரில் வேண்டுகோள் விடுத்திருக்கிறேன். நீங்கள் வேண்டுகோள் விடுத்தால் அவர்களும் இன்னும் பலரும் உடனடியாக உதவுவார்கள்.

உங்களிடமிருந்து சாதகமான ஆணையை எதிர்நோக்கும்

*அன்புள்ள*

*ஞாநி*

## 2. அன்புள்ள அமைச்சர் பொன்முடி அவர்களுக்கு

வணக்கம்.

உண்மையில் இந்தக் கடிதத்தை நான் ஒவ்வொரு துணைவேந்தருக்கும் ஒவ்வொரு தன்னாட்சிக் கல்லூரியின் முதல்வர்களுக்கும் எழுத வேண்டும். அவர்கள் எல்லாருக்கும் உத்தரவிடக் கூடிய உயர்கல்வித் துறையின் அமைச்சராக நீங்கள் இருப்பதால், நீங்களே இந்தப் பிரச்சினையை ஒற்றை ஆணையில் தீர்க்கும் வாய்ப்பு இருக்கிறது.

மாணவர்களையும், பெற்றோரையும் கல்வியின் தரத்தையும் பாதிக்கும் இதை என் கவனத்துக்குக் கொண்டு வந்த வாசகர் இளந்திருமாறன், முன்னாள் குடியரசுத்தலைவர் அப்துல் கலாம் கவனத்துக்கும் எடுத்துச் சென்றார். கலாம் எழுதிய பதிலில், மாணவர்கள் இப்படிச் செய்வது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதாகும். தன் செயல் திறனை வளர்க்காமல் மார்க்கை மட்டும் நம்பியிருப்பது தவறு என்று குறிப்பிட்டிருக்கிறார்.

பிரச்சினை இதுதான் ஒவ்வொரு பொறியியல் பட்டம், பட்டயம், கம்ப்யூட்டர் தொழில்நுட்பம் படிக்கும் மாணவரும் சுமார் மூன்று மாத காலம் ஒரு ப்ராஜெக்ட் செய்ய வேண்டுமென்பது கல்வித்திட்டத்தில் உள்ள விதியாகும். ஒரு குறிப்பிட்ட தலைப்பைத்தேர்ந்தெடுத்துக் கொண்டு, அதற்குப் பொருத்தமான ஒரு நிறுவனத்திற்குச் சென்று இதைச் செய்யவேண்டும்.

இதன் நோக்கம் மானவர் படித்த தியரியை நடைமுறையில் செயல்படுத்திப் பார்ப்பதைக் கற்றுக் கொள்வதாகும். ஆனால் நடைமுறையில் என்ன ப்ராஜெக்ட், என்ன தலைப்பு ,எப்படி ரிப்போர்ட் எழுதுவது என்பது எல்லாம் மோசடியாகவும் பணம் சம்பந்தப்பட்ட தொழிலாகவும் மாறிவிட்டன. கல்லூரிகளும், துறைத்தலைவர்களும் சில போலி நிறுவனங்களும் சேர்ந்து பொய்யான் பிராஜக்ட்டுகளைத் தயாரிக்க மாணவருக்கு உதவுகின்றன.

மாணவர்களின் பெற்றோர் இதற்காக 4 ஆயிரம் முதல் 15 ஆயிரம் வரை, சராசரியாக 6 ஆயிரம் ரூபாய் கட்டுகிறார்கள். பிராஜெக்ட் செய்து தரும் செண்ட்டர்கள், ரெடிமேட் ரிப்போர்ட்டுகளைத் தயார் செய்து தருகின்றன. மொத்தம் 900 கல்லூரிகள், தலா 400 மாணவர்கள் , ஆளுக்கு 6 ஆயிரம் என்று கணக்கிட்டால் வருடத்தில் மொத்தம் சுமார் 216 கோடி ரூபாய்கள் இதில் புழங்குகின்றன. வைவா வொசி எனப்படும் நேர்முக சோதனை என்பது பெரிதும் கண்துடைப்பு வேலையாகவே நடக்கிறது.

இப்போது இந்த வருட சீசன் ஆரம்பமாகிவிடது. பிராஜக்ட் செண்ட்டர்கள் விளம்பரம் செய்யத் தொடங்கிவிட்டார்கள். 2010 IEEE பிராஜெக்ட் 25 டைட்டில், 2009 IEEE 25 டைட்டில், ஜாவா நெட் பிராஜெக்ட் 250 டைட்டில் எல்லாமாக மொத்தம் ரூ 50 ஆயிரத்துக்கு தயார் என்று எனக்கே ஒரு எஸ்.எம்.எஸ் வந்திருக்கிறது.

நூற்றுக்கு 95 சதவிகித மாணவர்கள் இந்த மோசடியில் ஈடுபட்டாகவேண்டிய கல்விச் சூழலில், படிப்பு முடித்ததும் பெருவாரியானவர்களுக்கு வேலை கிடைப்பதில்லை. விப்ரோ, டி.சி.எஸ், இன்ஃபோசிஸ் போன்ற நிறுவனங்கள் மதிப்பெண்களை மட்டும் பார்ப்பதில்லை. அசல் தகுதியை, ஆற்றலை சோதிக்கும்போது போலி பிராஜெக்ட் செய்தவர்கள் மதிப்பெண் இருந்தாலும் நிராகரிக்கப்படுகிறார்கள்.

விரைந்து தலையிடாவிட்டால், தமிழகம் ஐ.டி துறையிலும் பொறியியலிலும் அடுத்த 5 வருடங்களில் பின்னடைவையே சந்திக்கும். தொழிற்சாலைகள் பெருகும். ஆனால் அவற்றில் தமிழ் இளைஞர்கள் வேலை செய்யமாட்டார்கள் என்ற நிலை வரும்.

பெற்றோர்களின் பணத்தைச் சுரண்டி, மாணவர்களின் அறியாமையை ஊக்குவிக்கும் இந்த முறைக்கு முற்றுப்புள்ளி வைக்கும் விதத்தில் நீங்கள் கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும். எப்படிப்பட்ட நடவடிக்கைகள் எடுக்கலாம் என்பதை பேரா. ஆனந்தகிருஷ்ணன் போன்ற உயர்கல்வி அறிஞர்களிடம் நீங்கள் ஆலோசிக்கலாம். எந்த நடவடிக்கையானாலும் விரைந்து எடுக்கவேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

அன்புள்ள

ஞாநி

## இந்த வார நகைச்சுவை

பெரியார், அண்ணா தந்த திராவிடக் கொள்கைகளைக் காப்பாற்றுவதற்காகத்தான் தேர்தலில் வெற்றி பெற விரும்புகிறோமே தவிர நாங்கள் ஆட்சிப் பொறுப்பில் இருக்கவேண்டும் என்பதற்காக அல்ல.

- கலைஞர் கருணாநிதி

## இந்த வாரப் பூச்செண்டு

சென்னை பெசண்ட் நகர் வேளாங்கண்ணி தேவாலயத்தில் மொட்டை போட வருவோருக்கு மொட்டை அடிக்கும் பணியில் ஆண்கள் மட்டுமல்ல, பெண்களும் ஈடுபடலாம் என்று காட்டியிருக்கும் அறுபது வயது முருகம்மாள் தலைமையிலான பெண்கள் குழுவுக்கு இ.வா.பூ. இந்தப் பெண்கள் முதியோர் இல்லங்களிலும் முடி மழிக்கும் பணியில் ஈடுபடுகிறார்கள். ஏற்கனவே திருப்பதி கோயிலில் பெண் நாவிதர்கள் அண்மைக்காலமாக பணி புரிந்து வருவது நினைவுகூரத்தக்கது.

## இந்த வாரத் திட்டு

தெரு நாய்களுக்கு வெறி தடுப்பூசியும் கருத்தடை ஊசியும் போடாமல், மொத்தமாக அவற்றைக் கொன்று அள்ளிச் சென்ற மௌளிவாக்கம் பஞ்சாயத்துக்கு இ.வாதி.

*கல்கி 30.10.2010*

# காவல் துறை கற்குமா?

வரலாற்று சிறப்பு மிக்க இரு தீர்ப்புகள் இந்த வாரம் அடுத்தடுத்து வந்திருக்கின்றன. வேலியே பயிரை மேய்வதா என்பது ஓர் அநீதி பற்றிய அதிர்ச்சியை வெளிப்படுத்த நம் முன்னோர்கள் உருவாக்கிய சொலவடை. அப்படிப் பயிரை மேய்கிற வேலிகள் தண்டனையில்லாமல் தப்பிக்கமுடியாது என்பதை நிரூபிப்பவை இந்த இரண்டு தீர்ப்புகள்.

ரீட்டா மேரி என்ற பெயர் நம் சமூகத்தினாலும் சிறைத் துறையாலும் வஞ்சிக்கப்பட்ட அத்தனை பெண்களுக்கும் அடையாளமாகிவிட்ட ஒரு பெயர். ஈரோட்டில் வசித்து வந்த 18 வயதுப் பெண் ரீட்டா மேரி, அக்காவுடன் ஏற்பட்ட மனத்தாங்கலினால் வீட்டை விட்டு வெளியே வந்தபோது, அவருக்கு உதவுவதாக சொல்லி ஏமாற்றி அவரை ஆத்தூர் விபசார விடுதிக்கு சிலர் விற்றனர். அங்கிருந்து திண்டிவனம் விடுதிக்கு அவர் விற்கப்பட்டார். அங்கே வாடிக்கையாளர் சிலரிடம் தன் அவலக்கதையைச் சொல்லி ரீட்டா மேரி உதவி கேட்டார். அவர்கள் ரீட்டாவை விடுதியிலிருந்து விடுவித்து அழைத்துப் போனபோது விபசாரத் தரகர்கள் துரத்தி வழிமறித்து ரீட்டாமேரியைப் போலீசிடம் ஒப்படைத்தார்கள். காவல் துறையோ ரீட்டா மேரிக்கு நியாயம் வழங்காமல் அவர் விபசாரம் செய்ததாகக் குற்றஞ்சாட்டி செஞ்சி சப் ஜெயிலில் அடைத்தது.

சிறையில் இருந்த வார்டர்கள் சிலர் ரீட்டா மேரியைப் பாலியல் வன்முறை செய்தனர். நீதி மன்றத்துக்கு மோசமான உடல்நிலையில் நடக்க முடியாமல் இழுத்துவரப்பட்ட ரீட்டா மேரியிடம் ஒரு வழக்கறிஞர் சந்தேகப்பட்டு விசாரித்ததில் உண்மைகள் வெளியாகின. மனித உரிமை அமைப்புகள் ரீட்டாவுக்கு ஆதரவாக களம்

இறங்கியதையடுத்து சிறை வார்டர்கள் மீது வழக்கு பதிவாகியது. திண்டிவனம் விரைவு நீதிமன்றம் குற்றஞ்சாட்டப்பட்ட ஐந்து வார்டர்களில் நால்வர் மீது குற்றம் நிரூபிக்கப்பட்டதாகக் கூறி ஒவ்வொருவருக்கும் பத்தாண்டு சிறை தண்டனை விதித்தது. இதை எதிர்த்து வார்டர்கள் மனு செய்தார்கள்.

அதை விசாரித்த சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி சுதந்திரம், சந்தேகத்தின் பலனை இன்னும் ஒருவருக்கு அளித்து விடுவித்த அதே சமயத்தில் மீதி மூவருக்கும் பத்தாண்டு சிறை தண்டனையை உறுதி செய்திருக்கிறார். சிறைக்குள் நடைபெற்ற பாலியல் வன்முறையை நிரூபிக்க, பாதிக்கப்பட்டவரின் சாட்சியமே போதுமானது; பெண்ணின் உடலில் காயம் இல்லை என்பதாலோ, அவர் எதிர்த்துப் போராடியதற்கு அடையாளங்கள் இல்லை என்பதாலோ அவர் சம்மதித்தார் என்று ஆகிவிடாது என்றும் நீதிபதி கூறியிருக்கிறார். எதிர்க்கும் சூழ்நிலையே இல்லாத இடத்தில் ஒருவர் எப்படி எதிர்த்துப் போராடியிருக்க முடியும் என்று அவர் கேட்டுள்ளார்.

ரீட்டா மேரி வழக்கில் ஓர் அநீதிக்கு நியாயம் கிடைக்க ஒன்பதாண்டுகள் ஆகிவிட்டன. ரீட்டா மேரியை விபசாரத்துக்கு விற்றவர்கள், வழிமறித்து போலீசிடம் ஒப்படைத்த விபசாரத் தரகர்கள் செய்த அநீதிகளுக்கு நடவடிக்கைகள் எங்கே ? காவல் துறையின் அறிமுகமும் ஒத்துழைப்பும் இல்லாமல் இவர்கள் எதையும் செய்திருக்க முடியாது. கடைசியாக ரீட்டாவுக்கு கொடுமை செய்தவர்களுக்கு மட்டுமே இப்போது தண்டனை வந்துள்ளது. ஆரம்பம் முதல் கொடுமை செய்தவர்களின் வலைப்பின்னலை அறுக்காதவரையில், மேலும் மேலும் பல ரீட்டாக்கள் பலியாவது தொடரும்.

இன்னொரு வழக்கில் கேரளாவில் காவல் துறையில் உச்சமான பதவியில் இருந்தவர் 40 ஆண்டுகள் முன்பு செய்த குற்றத்துக்கு இப்போது தண்டனை கிடைத்திருக்கிறது. கேரள மக்களிடையே நக்சல்பாரி வர்கீஸ் என்ற பெயர் பெரும் எழுச்சியை ஏற்படுத்தும் பெயர். குறிப்பாக ஆதிவாசி மக்களிடையே அவர், அவர்களுக்காகத் தன் உயிரையே அர்ப்பணித்த ஒரு காவல் தேவதை.

சரியாக 40 வருடங்களுக்கு முன்னால் 1970 பிப்ரவரி 18 அன்று வயநாடு மலைப்பகுதியில் போலீசுடன் நடந்த 'மோதலில்' நக்சல்பாரி வர்கீஸ் சுட்டுக் கொல்லப்பட்டதாக அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்டது. வர்கீசை போலீஸ் கடும் சித்ரவதைகள் செய்து கொன்றதாக வதந்திகள் இருந்தன. ஆனால் யாராலும் எதுவும் நிச்சயமாக சொல்லமுடியவில்லை. போலீசார் மட்டும் என்கவுண்ட்டர் என்றே சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஒரு

போலீஸ்காரரைத் தவிர.

அவர்தான் வர்கீஸை சுட்டுக் கொன்ற ராமச்சந்திர நாயர். ஃஅப்போது அவர்கள் இருவருக்கும் ஒரே வயது 27 ! வர்கீஸ் தங்கியிருந்த கிராம வீட்டில் அவரைத் தந்திரமாகப் பூட்டி வைத்த ஓர் உளவாளி தகவல் சொன்னதும், போய் கைது செய்தவர்களில் ராமச்சந்திரனும் ஒருவர். வர்கீசிடம் எந்த ஆயுதமும் இருக்கவில்லை. எதிர்க்கவும் இல்லை. மத்திய போலீஸ் பிரிவைச் சேர்ந்த ராமச்சந்திரனும் சகாக்களும் வர்கீசை கேரள மாநில காவலர்களிடம் ஒப்படைத்தனர். மாவட்ட துணைக் காவல் தலைவராக இருந்த லட்சுமணா ஸ்பாட்டுக்கு வந்தார். வர்கீசை மலைப்பாறையில் உட்காரவைத்து சுட்டுக் கொல்லும்படி உத்தரவிட்டார். யார் சுடத் தயார் என்று கேட்டார். கை தூக்காதவர் ராமச்சந்திரன். அப்படியானால் நீதான் அவனைச் சுடவேண்டும் என்று ராமச்சந்திரனுக்கு லட்சுமணா உத்தரவிட்டார்.

கைகள் கட்டப்பட்டிருந்த வர்கீசுக்குச் சற்று முன்னர்தான் சில கவளம் சோறு ஊட்டியவர் ராமச்சந்திரன். கடைசியாக ஒரு பீடியை வலிக்கவும் வாயில் பொருத்தியவர் அவரேதான். இப்போது அவரே சுட்டுக் கொல்லவேண்டியதாயிற்று. என்னைக் கொல்வதற்கு முன்னால் நான் புரட்சிகர கோஷம் எழுப்ப அனுமதியுங்கள் என்பதுதான் வர்கீசின் கடைசி விருப்பம். மேலதிகாரியின் உத்தரவுப்படி நிராயுதபாணியான வர்கீசை சுட்டுக் கொன்றார் ராமச்சந்திரன்.

இந்த உறுத்தலுடனே அவர் அடுத்த இருபத்தைந்தாண்டுகள் வாழ்ந்து வந்தார். வர்கீஸ் மோதலில் இறக்கவில்லை; சுட்டுக் கொல்லப்பட்டார் என்ற தகவல் நக்சல்பாரி இயக்கத் தோழர்களிடையே பரவியபடி இருந்தது. ராமச்சந்திரனைத் தேடிக் கண்டுபிடித்தார் ஒரு மலையாளப் பத்திரிகைத் தோழர். கடும் மன உளைச்சலில் இருந்த ராமச்சந்திரன் எல்லா விவரங்களையும் பகிரங்கப்படுத்தினார். கேரளா அதிர்ந்தது. என் மீது வழக்கு போடட்டும். என்னை தண்டிக்கட்டும். ஆனால் என்னைக் கொலைகாரனாக்கிய என் மேலதிகாரிகள் என் இருபுறமும் என் சக கைதிகளாக ஒரே கொட்டடியில் இருக்கவேண்டும் என்பதுதான் என் கடைசி ஆசை என்று சொன்னார் ராமச்சந்திரன்.

அவர் மீது கேரள மாநில அரசு தொடுத்த வழக்கு பின்னர் சி.பி.ஐக்கு மாற்றப்பட்டது. ராமச்சந்திரன் முதல் குற்றவாளியாகவும் லட்சுமணா, இதர உயர் அதிகாரிகள் பிற குற்றவாளிகளாகவும் பதிவு செய்யப்பட்டனர். லட்சுமணா கேரள மாநில ஐ.ஜி பதவி வரை சென்று ஓய்வு பெற்றிருந்தார். நீதிமன்றத்திலும் ராமச்சந்திரன் எல்லா உண்மைகளையும் சொன்னார்.

வழக்கின் தீர்ப்பு இந்த வாரம்தான் வந்திருக்கிறது. ராமச்சந்திரன் 2006லேயே இறந்துவிட்டார். லட்சுமணாவுக்கு ஆயுள் தண்டனை விதித்திருக்கிறார் சிறப்பு சி.பி.ஐ நீதிமன்ற நீதிபதி விஜயகுமார். வர்கீஸைக் கொல்லும்போது ராமச்சந்திரனுடன் கூட இருந்த இன்னொரு கான்ஸ்டபிள் ஹனீஃபா, எழுபது வயதாகி நடமாட முடியாத நிலையிலும் நீதிபதி அனுப்பிய சிறப்பு பிரதிநிதியிடம் வாக்குமூலம் கொடுத்தார். ராமச்சந்திரன் சொன்னதெல்லாம் உண்மை என்று ஹனீஃபா உறுதிப்படுத்தினார்.

" எப்படிப்பட்ட குற்றவாளியானாலும் சரி பயங்கரவாதி, நக்சல்பாரி, தீவிரவாதி யாரானாலும், அவர்களைப் பிடித்ததும் நீதிமன்றம் முன்பு ஒப்படைக்கவேண்டிய போலீஸே அவர்களை கொலை செய்யும் குற்றத்தை எத்தனை காலம் ஆனாலும் அழித்துவிட முடியாது. அரசியல் சட்டமே முதன்மையானது. எல்லாமே சட்டப்படிதான் நடைபெறவேண்டும். எப்படிப்பட்ட குற்றவாளியானாலும் சரி, அவரது குற்றத்தைப் புலன் விசாரிக்க வேண்டிய பொறுப்பில் இருப்பவர்களே அவருக்கு தண்டனை வழங்கிவிட முடியாது." என்று நீதிபதி தெள்ளத்தெளிவாக போலீசின் எல்லையை வரையறுத்திருக்கிறார்.

ராமச்சந்திரன் போல மனசாட்சியின் உறுத்தல்கள் இருக்கும் மனிதர்கள்தான் ஒவ்வொரு துறையையும் சீர்படுத்த உதவுகிறார்கள். "நான் வாழ்ந்தேன் என்பதற்கான சாட்சி" என்ற தலைப்பில் ராமச்சந்திரன் தன் போலீஸ் வாழ்க்கை பற்றி எழுதியிருக்கும் சுயசரிதை இன்னொரு சத்திய சோதனை நூல்.( குளச்சல் யூசுப் மொழிபெயர்ப்பில் தமிழில் மதுரை மக்கள் கண்காணிப்பகம் வெளியிட்டிருக்கிறது.)

வர்கீஸ் ஒடுக்கப்பட்ட ஆதிவாசிகளின் சம உரிமைகளுக்காக உழைத்தவர். அவரும் அவர் சகாக்களும் நடத்திய போராட்டங்களில் துளியும் சுயநலம் இல்லை. வன்முறை தீர்வு அல்லதான். ஆனால் தங்கள் குடும்பம் பல நூற்றாண்டுகளுக்குப் பணக்காரர்களாக வாழ்வதற்காக அகிம்சை வழியில் ஆட்சியைப் பிடித்துக் கொண்டு மக்கள் பணத்தை ஒவ்வொரு வழியிலும் கொள்ளையடித்துக் கொண்டிருப்பதும், மக்களுக்கு எதிரான இன்னொரு விதமான வன்முறைதான் என்பதை நாம் உணரவேண்டும்.

காவல் துறை நேர்மையாக நடந்துகொண்டால், அரசின் மீதி எல்லா துறைகளும் ஒழுங்குக்கு வந்துவிடும். காவல் துறை தானும் நேர்மையில்லாமல், நேர்மையற்ற அரசியல்வாதிகளுடன் கை கோத்துக் கொள்ளும்போது ரீட்டா மேரிகள் பாதிக்கப்படுகிறார்கள். வர்கீஸ்கள் உருவாகிறார்கள். காவல் துறைக்குத் தேவையான முக்கியப் பாடங்களை இந்த இரு தீர்ப்புகள் அளித்திருக்கின்றன. காவல் துறை இதிலிருந்து கற்குமா?

## இந்த வாரப் பூச்செண்டு

சிறு நீரக நோய் உள்ள சுமார் 25 ஆயிரம் ஏழைகளுக்கு இலவச ரத்த மாற்று சிகிச்சை ( டயாலிசிஸ்) அளிக்க ஏற்பாடு செய்திருக்கும் சென்னை மாநகராட்சிக்கு இ.வா.பூ

## இந்த வாரத் திட்டு

எழுத்தாளர் அருந்ததி ராயின் காஷ்மீர் பற்றிய கருத்துக்காக அவர் வீட்டு முன்னால் கூடி ரகளை செய்ததற்காக பி.ஜே.பி மகளிர் அணிக்கு இ.வாதி. கருத்துக்கு பதில் கருத்து சொல்வது மட்டுமே நியாயமானது.

*கல்கி 6.11.2010*

# கோடிகளில் மான்யம் சீரோ அக்கறை

அடுத்தடுத்து பதினெட்டே நாட்களுக்குள் ஐந்து செய்திகள்:

1.அக்டோபர் 17: விவசாயத்தைக் காப்பாற்றுவதற்காக நொய்யல் ஆறு மாசுபடாமல் தடுக்க, திருப்பூர் சாயப்பட்டறைக் கழிவுகளை சுத்தப்படுத்தி சீரோ டிஸ்சார்ஜ் அடிப்படையிலான கழிவு சுத்திகரிப்பு நிலையங்களை ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு தமிழக அரசு மான்யமான 150 கோடி ரூபாய்களை துணை முதல்வர் மு.க.ஸ்டாலின் திருப்பூர் தொழிலதிபர்களுக்கு வழங்கினார். மொத்தம் 320 கோடி ரூபாய் மான்யத்தை மத்திய, மாநில அரசுகள் வழங்குகின்றன.

2.அக்டோபர் 23 : நொய்யல் ஆற்று நீர் சாயப்பட்டறைக் கழிவுகளால் கடுமையாக மாசுபட்டிருக்கிறதா என்று தண்ணீர் சாம்பிளை எடுத்து ஒரு வாரத்துக்குள் சோதித்து தெரிவிக்கும்படி சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகள் உத்தரவிட்டனர்.

3.நவம்பர் 2: நொய்யல் ஆற்று நீர் சேம்பிள்கள் கடும் மாசுடன் இருப்பதாகவும் குடிக்க லாயக்கற்றது என்றும் சோதனை முடிவில் கூறப்பட்டிருப்பதற்கு பதில் தெரிவிக்கும்படி மாநில மாசுக் கட்டுப்பாடு வாரியத்துக்கு நீதிபதிகள் உத்தரவிட்டனர். இதுவரை எத்தனை சாயப்பட்டறைகள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று விவரங்களும் கேட்டுள்ளனர்.

4. நவம்பர் 3: திருப்பூர் அருகே ஒரு சாயப்பட்டறையில் சாயக் கழிவுத் தொட்டியை சுத்தப்படுத்த இறங்கிய நான்கு தொழிலாளர்கள் கழிவிலிருந்து வந்த விஷ வாயுவினால்

மூச்சு திணறி இறந்தனர்.

5. நவம்பர் 4: மேற்படி சாயப்பட்டறையை மூடும்படி அரசு அதிகாரிகள் உத்தரவிட்டனர். கழிவுகளை அகற்ற இயந்திரம் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற விதிக்கு மாறாக மனிதர்களை தொட்டியில் இறக்கியதாகவும் சீரோ டிஸ்சார்ஜ் நிலையத்தை பட்டறை பயன்படுத்தவே இல்லை என்றும் அதிகாரிகள் கூறியுள்ளனர்

மக்கள் வரிப் பணமான 320 கோடி ரூபாய் மான்யத்தை விழுங்கியிருக்கும் சீரோ டிஸ்சார்ஜ் நிலையங்களை மேற்கண்ட சாயப் பட்டறை மட்டுமல்ல, திருப்பூரில் இருக்கும் பல சாயப்பட்டறைகள் பயன்படுத்துவதே இல்லை. ஜனவரி 6ந்தேதி முதல் சாயக்கழிவுகளை சுத்திகரிக்காமல் சூழலில் கலக்கவிடக் கூடாது என்ற உச்ச நீதி மன்றத் தடை உத்தரவு அமலுக்கு வந்தது. அதன் பிறகு 177 சாயப்பட்டறைகள் விதி மீறலுக்காக மூடப்பட்டன. இதில் 139 பட்டறைகள் சீரோ டிஸ்சார்ஜ் நிலையத்தைப் பயன்படுத்துகிறோம் என்று பொய் சொல்லியிருக்கின்றன. இது அரசின் அதிகாரப்பூர்வமான தகவல்.

ஒரு பக்கம் சீரோ டிஸ்சார்ஜ் தொழில்நுட்பம் அமைப்பதற்காக 320 கோடி ரூபாய் மான்யம் வாங்கிக் கொண்டு இன்னொரு பக்கம் அதைப் பயன்படுத்தாமல் தொழிலாளர்கள் உயிரைப் பறிக்கும் நடைமுறையையே பின்பற்றும் கொடூரம். உச்ச நீதி மன்றம் உத்தரவிட்டதால்தான் சீரோ டிஸ்சார்ஜ் கண்துடைப்புக்கே வந்தார்கள்.

அதே உச்ச நீதி மன்றம் இன்னொன்றையும் சொல்லியிருக்கிறது. யார் சூழலை மாசுபடுத்துகிறார்களோ அவர்கள்தான் சூழலுக்கு ஏற்பட்ட பாதிப்பை சரி செய்வதற்கான செலவையும் கொடுக்க வேண்டும் என்பது உச்ச நீதி மன்றத்தின் உத்தரவு. ‘பொல்யூட்டர் பேஸ் பிரின்சிபிள்’ என்ற இந்த கோட்பாட்டை 1996லேயே உச்ச நீதி மன்றம் . இந்தியன் கவுன்சில் ஃபார் என்விரொலீகல் ஆக்ஷன் அமைப்பு தொடுத்த வழக்கில் அறிவித்தது. எனவே பொது மக்கள் பணத்தை இதற்கு எடுத்துப் பயன்படுத்துவது உச்ச நீதி மன்ற தீர்ப்புக்கு முரணானது. அப்படிக் கொடுத்த பணத்தில் ஏற்படுத்திய வசதியையும் பயன்படுத்தாமல் நூற்றுக் கணக்கான பட்டறைகள் இயங்கி வருகின்றன என்பது எவ்வளவு பெரிய கொடுமை.

சாயப் பட்டறைக் கழிவுகளுக்குத் தீர்வாக இப்போது இன்னொரு திட்டம் அரசு செலவில் முன்வைக்கப்படுகிறது.மத்திய அரசு 200 கோடி ரூபாய் தருவதாக ஒப்புக் கொண்டிருக்கிறது. மொத்த செலவு

600 கோடி. சாயப்பட்டறைக் கழிவுகளை சுத்திகரித்து பின்னர் அதை தரைக்கடியில் குழாய் வழியே வங்காள விரிகுடாவுக்குக் கொண்டு போய் விடுவதுதான் திட்டம். திருப்பூர், கரூரிலிருந்து கடலுக்குச் செல்வதென்றால் குறைந்தபட்சம் 250லிருந்து 300 கிலோமிட்டர் தூரம் குழாய் போடவேண்டும்.

இந்த மாதிரி கழிவுகளை கடலில் விடுவது சரியானதா என்பதைப் பார்ப்பதற்கு முன்பு, இந்தியாவில் வேறெங்காவது அப்படி செய்கிறார்களா என்று பார்ப்போம். குஜராத்தில் கடந்த பதினோரு வருடங்களாக அப்படிச் செய்கிறார்கள். தென் குஜராத்தில் சர்காம் நகரத்தில் குஜராத் அரசின் ரசாயனத் தொழிற்பேட்டை இருக்கிறது. அங்கிருந்து கழிவுகள் 14 கிலோமீட்டர் தூரத்துக்கு இரண்டடி விட்டமுள்ள குழாய் வழியே கடலுக்கு எடுத்துச் சென்று கொட்டப்படுகிறது. தினசரி 12 மில்லியன் லிட்டர் கழிவு.வழியில் தட்காம்,சரோண்டா, நர்கோல், மரோலி ஆகிய கிராமங்கள் இருக்கின்றன.

நிலத்தடியில் பதிக்கப்பட்டுள்ள குழாய் வழி நெடுக ஆங்காங்கே ஒழுகுகிறது. அதனால் நிலத்தடி நீர் மாசாகி நான்கு கிராமங்களிலும் விவசாயமும் குடி நீரும் பாதிக்கப்பட்டுவிட்டது. அடி பம்ப்பில் தண்ணீர் சிவப்பாக வருகிறது. அரிசியையும் பருப்பையும் அந்தத் தண்ணீரில் வேகவைப்பது மிகக் கடினம். தண்ணீரிலேயே ரசாயன வாடை வருகிறது. தட்காம் கிராமக் கடற்கரையில் கழிவுகள் குழாயில் வந்து விழும் இடத்தருகே கொஞ்ச நேரம் நின்றாலே குமட்டலும் மூச்சுத் திணறலும் ஏற்படுவதாகப் பத்திரிகையாளர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

நான்கு கிராமங்களிலும் மக்கள் தொகையில் 60 சத விகிதம் பேர் தோல் நோய்கள், நுரையீரல் பிரச்சினை, ஜீரணக் கோளாறுகளுடன் அவதிப்படுகிறார்கள் என்று அந்த வட்டார மருத்துவர்கள் தெரிவிக்கிறார்கள். கடலில் மீன் வளம் கடுமையாக பாதிக்கப்பட்டிருக்கிறது. வாப்பி தொழிற்பேட்டையின்கழிவுகளால் டாமன் டையூ கடற்பகுதி மீவளம் 65 சதவிகிதம் குறைந்துவிட்டதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. தட்காம் கடற்பகுதியும் அருகிலேயே உள்ளது. மீன்வளம் பாதிக்கப்பட்டுவிட்டதால் வருடத்தில் நான்கு மாதங்களில் மட்டுமே மீன் கிடைக்கிறது. குஜராத் மாநில மாசுக் கட்டுப்பாட்டு வாரியம் நிர்ணயித்த விதிகள் எதுவும் பின்பற்றப்படவில்லை. பல இடங்களில் குழாயைத்தாங்கியிருக்கவேண்டிய சிமென்ட் உடைந்துவிட்டது. கடலுக்குள் செல்லும் குழாயே முழுத்தொலைவும் செல்லாமல் பாதியில் உடைந்து, அதன் ஃபில்டர்கள் பழுதாகிவிட்டன.

இத்தனை சீர்கேடுகளைப் பற்றியும் வாரியம்

பொருட்படுத்தவில்லை, எனவே தட்காமில் உள்ள ஒரு குடியிருப்போர் சங்கமும் நான்கு கிராமங்களின் பஞ்சாயத்து தலைவர்களும் குஜராத் உயர் நீதி மன்றத்தில் சென்ற வருடம் வழக்கு தொடுத்தனர். கழிவுகள் குழாய் வழியே அனுப்பப்படும் விதத்தைக் கண்காணிக்க அதற்கென அமைக்கப்பட்ட நிறுவனம் தவறிவிட்டதாக அதன் வக்கீல் கோர்ட்டிலேயே ஒப்புக் கொண்டார்.

விதிகளின்படி கழிவின் அளவு கடல்நீரில் எந்த விகிதத்தில் இருக்க வேண்டுமென்றால், ஒரு மீன் அதில் 90 நாட்கள் வரை உயிர் வாழ முடியவேண்டும். தட்காம் கழிவை சோதனைக்கு அனுப்பியதில் ஒரு மீன் அதில் ஒரு மணி நேரம் கூட உயிருடன் இருக்க முடியாது என்பது தெரியவந்தது. கடலுக்குள் செல்லும் குழாய் இரண்டு கிலோமீட்டர் உள்ளே செல்ல வேண்டும், நிலத்தில் குழாய் ஆறடி கீழே புதைக்கப்படவேண்டும் என்ற விதிகளும் பின்பற்றப்படவில்லை. கடலுக்குள் செல்லும் குழாய் உடைந்து 6 வருடங்களாகிவிட்டன. இப்போது புதுக் குழாயை தினசரி 24 மில்லியன் லிட்டர் கழிவு கொண்டு செல்ல வசதியாக அமைக்கலாமா என்று அதிகாரிகள் யோசித்துவருகிறார்கள்.

குஜராத்தில் நடக்கும் நரேந்திர மோடியின் ஆட்சியில் ஊழல் இல்லை, திறமையான நிர்வாகம் நடக்கிறது என்றெல்லாம் சொல்லப்படுகிறது. மோடியின் மதவாதக் கொள்கைகளை விமர்சிக்கிறவர்கள் கூட சமயங்களில் அங்கே ஊழல் குறைவு என்று சொல்கிறார்கள். அங்கேயே இந்த நிலை . தமிழ்நாட்டில் ஒரு லாரி மணல் எடுக்க அனுமதித்தால் ஆறு லாரி அள்ளுவதற்கான லஞ்சப்பணத்தைக் குடும்பத்தில் ஒருவருக்கான வருவாயாக ஒதுக்கித் தரும் அளவுக்கு ஊழல் ஆட்சிகள்தான் நம் தொடர்ந்த அனுபவம். திருப்பூரில் தொழிலதிபர்களிடமிருந்து வசூலித்து அமைச்சரிடம் பணம் தருவதுதான் எம்.எல்.ஏவின் மக்கள் பணி என்று ஏற்கனவே குற்றம்சாட்டப்பட்டிருக்கிறது.

நொய்யல் போன்ற அசல் பிரச்சினைகளை விட்டுவிட்டு அக்கப்போர் அரசியல் ரிப்போர்ட்டிங்கில்தான் நம் மீடியாவும் இருக்கிறது. திருப்பூர் கரூர் சாயப்பட்டறைகள் பற்றி விமர்சித்தால் உடனே அவை கோடிக்கணக்கில் அந்நிய செலாவணி சம்பாதிப்பதைத்தான் சமாதானமாக சொல்கிறார்கள். நம் ஆற்றையும் நம் விவசாயத்தையும் கெடுத்துவிட்டு எதற்காக அந்த அந்நியச் செலாவணி என்ற கேள்விக்கு பதில் வராது.

நம்மிடமிருந்து இறக்குமதி செய்யும் அமெரிக்காவும் மேலை நாடுகளும் ஏன் அவர்கள் நாட்டில் இந்த சாயக் கழிவு. தோல் பதனிடும் கழிவுத் தொழிலை அனுமதிக்கவில்லை என்று யோசிக்க வேண்டும். அவர்களுடைய சூழலைக் காப்பாற்றி

நம்முடையதைக் கெடுத்துக் கொண்டு அந்நியச் செலாவணி யாருக்காக சம்பாதிக்கிறோம் ?

நேர்மையான பதில்களைத் தேடுவோமா?

## இந்த வாரப் பூச்செண்டு

சென்னைத் தொழிலதிபர் மகன் கடத்தலில் வீரத்தை விட விவேகம் முக்கியம் என்று செயல்பட்டு மகனையும், பிணைத் தொகையையும் மீட்ட சென்னை நகர போலீசாருக்கு இ.வா.பூ.

## இந்த வாரத் திட்டு

ஸ்பெக்ட்ரம் முறைகேடு தொடர்பாக ,தணிக்கை அதிகாரி, உச்ச நீதி மன்றம் ஆகியோர் கண்டித்த பிறகும், விசாரணை முடியும் வரை விலகியிருக்க முன்வராமல், மந்திரி பதவியில் ஒட்டிக் கொண்டிருக்கும் ஆ.ராசாவுக்கு இ.வா.தி.

## இந்த வாரக் கேள்வி

"தலைமைப் பொறுப்பிலே உள்ள அதிகாரிகள் இரண்டு பேரில் ஒரு பெண்மணி தலைமைச் செயலாளராகவும் இன்னொரு பெண்மணி காவல் துறைக்குத்தலைமை இயக்குநராகவும் இருப்பதை எண்ணி எண்ணி நாமெல்லாம் மகிழலாம். மகிழ முடியாதவர்கள் வேண்டுமானால் கோர்ட்டுக்கு செல்வார்கள். அது பெண்கள் முன்னேறவேண்டுமென்ற கருத்துடையவர்களால் செய்யப்படுகிற காரியமா என்பதை அவர்களை ஆதரிக்கின்ற இதழாளர்கள், ஏட்டாளர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்." என்று முதலமைச்சர் கருணாநிதி அன்னை தெரெசா மாளிகை திறப்பு விழாவிலே கேட்டுக் கொண்டிருக்கிறார். தன் சீனியாரிட்டியைப் புறக்கணித்துவிட்டு லத்திகா சரணை காவல் துறை தலைவர் பதவிக்கு நியமித்ததை எதிர்த்து நட்ராஜ் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்ததைத்தான் கருணாநிதி குறிப்பிடுகிறார். லத்திகா பெண் என்பதால் நட்ராஜ் கோர்ட்டுக்கு செல்லவில்லை. தன் சீனியாரிட்டி புறக்கணிக்கப்பட்டதை எதிர்த்துத்தான் சென்றார்.. லத்திகாவுக்கு பதில் ஓர் ஆணை நியமித்திருந்தாலும் எதிர்க்கத்தான் செய்வார். கருணாநிதியின் அபத்தமான வாதத்தின் அடிப்படையில் ஒரு கேள்வி. ஜெயலலிதா ஒரு பெண் என்பதாலும் ஒரு பெண் முதலமைச்சராகக் கூடாது என்பதற்காகவும்தான் அவர் ஜெயலலிதாவை எதிர்த்து அரசியல் செய்கிறார் என்று நாம் சொல்லலாமா? எனவே ஒரு பெண் முதலமைச்சராவதற்கு மகிழ்ச்சியடையாமல் தடுக்கப் பார்க்கும் அவர் அரசியலிலிருந்து விலகிக் கொண்டு ஒரு பெண்ணுக்கு வழி விடுவார் என்று எதிர்பார்க்கலாமா?

*கல்கி 13.11.2010*

# ராசா மட்டும்தானா? ராணி, பரிவாரங்கள் அம்பலமாவது எப்போது ?

கடைசியில் ஆ.ராசாவைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ள வேண்டியதாகிவிட்டது. ஒரு வருடம் முன்னாலேயே செய்திருக்க வேண்டியதை சோனியாவும் மன்மோகன்சிங்கும் தாமதமாகச் செய்திருக்கிறார்கள். இப்போது செய்ய முடிந்ததற்குக் காரணம் இன்னும் ஆறு மாதங்களில் வரப் போகும் தமிழக சட்டமன்றத் தேர்தலில் காங்கிரஸ் உறவைத் தக்க வைத்துக் கொள்ளவேண்டிய கட்டாயத்தில் தி.மு.க இருப்பதால், இப்போது அது பணியவேண்டியதாயிற்று. இல்லையென்றால், தி.மு.க நிச்சயம் ராசாவை ராஜினாமா செய்யவைத்திருக்காது. காங்கிரஸ் தலைமையும் கடுமையாக நடந்துகொண்டிருக்காது.

ராசாவை நீக்க, நிச்சயம் ஜெயலலிதாவின் அதிரடி அறிவிப்பு ஒரு காரணம். ஆட்சியை தி.மு.க கவிழ்த்துவிடும் என்ற பயம் இல்லாமல் நீக்குங்கள்; நிபந்தனையற்ற ஆதரவை நான் தருகிறேன் என்று ஜெயலலிதா அறிவித்தது நிச்சயமாக காங்கிரசின் கையை பலப்படுத்தியது. நீ இல்லாவிட்டால் அவர் என்ற சாத்தியம் இருக்கும்போது கருணாநிதியிடம் அடித்துச் சொல்லும் தைரியம் காங்கிரஸுக்கு கிடைத்தது.

இதனால் தேர்தலில் அ.தி.மு.கவுடன் காங்கிரஸ் அணி சேர்ந்துவிடும் என்று சொல்லமுடியாது. ஆனால் காங்கிரசின் பேரம் பேசும் சக்தி அதிகரித்துவிட்டது. தேர்தலில் அதிக இடங்கள், ஆட்சி அமைத்தால், எத்தனை மந்திரி பதவிகள், துணை முதல்வர் பதவி

உண்டா இல்லையா என்பதையெல்லாம் அடித்துப் பேசி வாங்கும் சக்தி அதிகமாகியிருக்கிறது. காங்கிரஸ் விரும்பும் அளவை தி.மு.க தர மறுத்தால், நிச்சயம் நஷ்டம் தி.மு.கவுக்குத்தான். ஏனென்றால் ஜெயலலிதா தயாராக இருக்கிறார். காங்கிரஸ் ஜெ அணிக்குச் செல்லுமானால், கூடவே நிச்சயம் பா.ம.கவும் சென்று விடும். விஜய்காந்தும் அங்கே செல்வார். பதிலுக்கு வைகோவும் இடதுசாரிகளும் தி.மு.கவுக்கு சென்றாலும் கூட, எண்ணிக்கை செல்வாக்கு பலம் காங்கிரஸ்அ.தி.மு.க கூட்டணிக்குத்தான் இருக்கும். எனவே மறுபடி ஆட்சியைப் பிடிக்க ஜெயலலிதாவுக்குக் காங்கிரஸ் தேவைப்படும் அதே அளவுக்குக் கருணாநிதிக்கும் தன் ஆட்சியை மறுபடியும் தக்கவைத்துக் கொள்ள காங்கிரஸ் தேவைப்படுகிறது. ஜெயலலிதாவின் அறிக்கையால் நிகர லாபம் காங்கிரசுக்குத்தான். அதன் அடையாளம்தான் ஆ.ராசாவுக்குக் கொடுத்த கல்தா.

ஸ்பெக்ட்ரம் 2ஜி முறைகேட்டில் ராசா செய்ததாக கணக்குத் தணிக்கைத் தலைவர் அறிக்கையில் சொல்லியிருப்பதைப் பார்ப்போம். ப்ழைய முறைப்படியே முதலில் விண்னப்பிப்போருக்கு ஒதுக்கிடு என்ற அடிப்படையைப் பின்பற்றியது தவறு. ஏனென்றால் ஸ்பெக்ட்ரம் உரிமத்தின் சந்தை மதிப்பு பல மடங்கு உயர்ந்துவிட்டது. ஆனால் பழைய விலைக்கே விற்றிருக்கிறார். வேண்டிய கம்பெனிகளுக்குக் கொடுபபதற்காக, விண்ணப்ப தேதியை திடீரென முன்னதாக மாற்றியிருக்கிறார். இப்படிச் செய்யாமல் ஏலத்தில் விட்டிருந்தால் , அரசுக்கு பல கோடி ரூபாய்கள் லாபம் கூடுதலாக கிடைத்திருக்கும். பழைய விதிகளை அப்படியே பின்பற்றினேன். அதிலென்ன தவறு என்பது ராசா, கருணாநிதி வாதம். நிர்வாகத்தில் செய்பவை செய்யத் தவறுபவை இரண்டுமே முக்கியமானவை. செய்யத் தவறிய குற்றம் இது. அதனால் பெரும் நஷ்டம் என்பது வெறும் யூகம்தான் என்பது ராசா-கருணாநிதியின் இரண்டாவது வாதம்.

இதுவும் சரியல்ல. ஏனென்றால் உரிமத்தை 1651 கோடி ரூபாய்களுக்கு (சுமார் 40 கோடி டாலர்) அரசிடம் வாங்கிய கம்பெனிகள் தங்கள் பங்குகளை வெளியாருக்கு விற்றிருக்கின்றன. ஸ்வான் 45 சத பங்குகளை 90 கோடி டாலருக்கும், யூனிடெக் 60 சதப் பங்குகளை 136 கோடி டாலருக்கும், எஸ்டெல் 49 சதப் பங்குகளை 22.5 கோடி டாலருக்கும் டாட்டா 26 சதப் பங்குகளை 27 கோடி டாலருக்கும் விற்றிருக்கின்றன. அதாவது 40 கோடி டாலருக்கு வாங்கியதைப் பயன்படுத்தி 275 கோடி டாலருக்குப் பங்கு விற்றிருக்கிறார்கள். ஏழு மடங்கு லாபம் அவர்களுக்கு. அது அரசுக்கு நஷ்டம். தணிக்கைக் குழு வெவ்வேறு மதிப்பீடுகளின்படி

நஷ்டம் ஒரு லட்சத்து 76 ஆயிரம் கோடி வரை இருக்கலாம் என்று கூறுகிறது.

அந்தக் கம்பெனிகளுக்கு லாபம் செய்து கொடுத்ததற்கு, பதிலுக்கு அதில் எவ்வளவு பங்கு அரசியல்வாதிகளுக்குக் கிடைத்தது என்பதுதான் முக்கியமான கேள்வி. இவ்வளவு கோடி ரூபாய்கள் சமபந்தப்படும் ஒரு விஷயத்தை ராசா தனியே தன்னந்தனியே செய்ய வாய்ப்பில்லை. நிச்சயம் கட்சியும் தலைமையும் கட்சிக்குள் ராசாவின் புரவலர்களும் சம்பந்தப்படாமல் இருக்க முடியாது. அந்த சம்பந்தம் இருப்பதனால்தான் கடைசி நிமிடம் வரை ராசா குற்றமற்றவர் என்றுகருணாநிதியும் கனிமொழியும் மீடியாவிடம் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். ஸ்பெக்ட்ரம் தில்லுமுல்லுவில் லாபமடைந்தவர்கள் தி.முகவில் உள்ளவர்கள் மட்டுமா, அல்லது கூட்டணிக்கட்சியான காங்கிரசிலும் உண்டா என்தெல்லாம் இனிமேல்தான் துருவப்படவேண்டும்.

முக்கிய புள்ளிகள் பலர் சம்பந்தப்படவிலலையென்றால் ராசாவை எப்போதோ பலி கொடுத்திருக்கலாம். ஒரே ஒரு டெலிபோன் பேச்சுக்காக தமிழகத்தில் பூங்கோதையை அமைச்சர் பதவியிலிருந்து தூக்கி எறிந்தார் கருணாநிதி. தன் உறவினர் மீதான லஞ்சப் புகார் தொடர்பாக லஞ்ச ஒழிப்புத் துறை அதிகாரியுடன் டெலிபோனில் பேசியதுதான் பூங்கோதையின் குற்றம்.

ராசா தொடர்பான இரண்டு டெலிபோன் பேச்சுகள் ஏழு மாதங்கள் முன்னால் மே மாதத்தில் அம்பலமாகின. இரண்டும் சி.பி.ஐ பதிவு செய்த பேச்சுகள். டெல்லியில் அதிகாரமையங்களுடன் கார்ப்பரேட் நிறுவனங்கள் சார்பில் தொடர்புகொண்டு காரியமாற்றும் பிரபல தரகரான நீரா ராடியா என்ற பெண்மணியுடன் கனிமொழியும் ராசாவும் பேசிய பேச்சுகள் இவை. ராடியாவை சி.பி.ஐ கண்காணித்து வந்தது. ஆகஸ்ட் 2008 முதல் 300 நாட்களுக்கு அவர் போனை ஒட்டுக் கேட்டது.

ஹெட்லைன்ஸ் டுடே சேனல் அம்பலப்படுத்திய பேச்சுகளில் சில பகுதிகள் மட்டும் இதோ:

*பேச்சு 1. கனிமொழியுடன் மே 21, 2009, காலை 8:41*

*கனிமொழி : ஹலோ*

*ராடியா : வேலை இன்னும் உறுதிப்படவில்லை. பிரதமர் இன்றும் அது பற்றிய விவாதங்களில்தான் இருக்கிறார்.*

*கனிமொழி : தொலைத்தொடர்புத் துறை எங்களுக்கு என்று வாக்குக் கொடுத்திருக்கிறார்கள். இனி அதில் ஏதாவது மாற்றங்கள் . . .*

*ராடியா : என்ன?*

*கனிமொழி : எங்களுக்குத் தொலைத் தொடர்பு என்பதை உறுதிப்படுத்தி விட்டார்கள். ஆனால் அது 'அவருக்குப்' போய்விடக் கூடாது. ஏனென்றால் அவர் மீடியாவில் அப்படியான செய்திகளை வரவழைத்துக் கொண்டிருக்கிறார். ('அவர்' என்பது தயாநிதி மாறன்தான் !)*

*பேச்சு இரண்டு: மே 24, 2009 காலை: 11:05*

*ராசா : என் பெயரை 'கிளியர்' பண்ணியாச்சா?*

*ராடியா : நேற்றிரவு உங்கள் பெயரை கிளியர் பண்ணியாச்சு.*

*ராசா : சரி, தயாநிதி விஷயம் என்னாச்சு? ஜவுளித் துறையா அல்லது ரசாயனம் / உரத்துறையா?*

*ராடியா : தயாவுக்குக் கிடைக்காது, அழகிரி, தயா இருவரில் ஒருவர்தான் நுழைய முடியும்.*

*ராசா : இல்லை, இருவருமே நுழையலாம்.*

*ராடியா : இருவருமா? பாலுவால்தான் பிரச்சினை இருக்குமென்று நினைக்கிறேன். மூன்று குடும்ப உறுப்பினர்களை நுழைப்பதில் கஷ்டம்தான்.*

*ராசா : (சிரிக்கிறார்) ஆமாம். ஆனால் எல்லோருக்கும் தெரியுமே .*

*ராடியா : இல்லை, கனி(மொழி) என்னிடம் நேற்றிரவு சொன்னார், அவர் தந்தை அவரிடம் நேற்று கூறியதாக, மூன்று குடும்ப உறுப்பினர்களை உள்ளே நுழைப்பது கஷ்டம், இதிலுள்ள பிரச்சினையை அவரால் உணரமுடிகிறது . . .*

*ராசா : பொறுத்திருந்து பார்ப்போம். நாம் போராடிப் பார்ப்போம்.*

இந்த இரண்டு டேப்களுக்கு இன்றளவும் பிரதமர் முதல் கருணாநிதி வரை விளக்கம் தரவில்லை. போன் குரல்கள் எங்களுடையதல்ல என்றால் டெஹல்கா விவகாரம் போல கோர்ட்டுக்குப் போய் டேப்பை சோதனையிட்டு நிரூபிக்க சேனல் தயாராக இருந்தது. இப்படி ஒரு டேப்பில் ஜெயலலிதா சிக்கியிருந்தால், கருணாநிதி வானத்துக்கும் பூமிக்குமாக எம்பிக் குதித்து மாபெரும் மீடியா தாண்டவமே ஆடியிருப்பார்.

பூங்கோதைக்கு ஒரு நீதி; ராசாவுக்கு இன்னொரு நீதி என்று கருணாநிதி நடந்துகொண்டது ஏன்? ராசா மீதான சி.பி.ஐ விசாரணை ஏன் ஒரு வருடமாகியும் தாமதம், என்று உச்ச நீதி மன்றம் கடிந்துகொண்டபின்னரும் அவர் ராசாவை ஏன் விலகச் செய்யவில்லை?

அரசியல் சட்டப்படி சுயேச்சையான அமைப்பாக இருக்கும் கணக்குத் தணிக்கை அதிகாரி பற்றி கருனாநிதி அடித்த கமெண்ட் படு கேவலமானது. பிரதமர், அமைச்சர்கள் பத்தியெல்லாம் அவங்க எப்பிடி ரிப்போர்ட் எழுதறாங்கன்னு எங்களுக்குத் தெரியும். என்றார். இவரேதான் 1989ல் ஆடிட்டர் ரிப்போர்ட்டை தெருத்தெருவாக எடுத்துக் கொண்டு போய் பேசி இன்றைய நண்பர் சோனியாவின் கணவர் ராஜீவ் காந்தி ஃபோபர்ஸ் பீரங்கி ஊழல் செய்ததாக கடும் பிரசாரம் செய்தார். அதன் பயனாகத்தான் தேசிய முன்னணி ஆட்சி ஏற்பட்டு மத்தியில் மந்திரி பதவி அடையும் முதல் வாய்ப்பு தி.மு.கவுக்கு வந்தது. ராஜீவுக்கு எதிராக ஆடிட்டர் ரிப்போர்ட்டை நம்பி பிரசாரம் செய்ததற்கு இப்போது சோனியாவிடம் கருணாநிதி மன்னிப்பு கேட்பாரா ?

ராசாவின் விலகலுக்கு இப்போது சொல்லியிருக்கும் காரணம்தான் சூப்பர் நகைச்சுவை. இந்த விவகாரத்தால் சில எதிர்க்கட்சியினர் பாராளுமன்றத்தை நடக்கவிடாமல் முடக்குகிறார்களாம். ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதற்காக ராஜினாமாவாம். அவையை முடக்குபவர்கள் அநியாயம் செய்கிறார்கள் என்றால் அதை எதிர்க்காமல் அடங்கிப் போவது எப்படி தீர்வாகும் ? இது போல ஒவ்வொரு முறையும் ஒரு சிலர் அவையை முடக்கினால் இதே போல ராஜினாமாக்கள் செய்வார்களா? குப்புற விழுந்தும் மீசையில் மண் ஒட்டவில்லை என்று வாதாடுகிறார் கருணாநிதி.

மக்களைப் பொறுத்தமட்டில் ராசாவின் நீக்கம் தீர்வல்ல. இது ஓர் ஆரம்பமாக மட்டுமே இருக்க வேண்டும். ஸ்பெக்ட்ரம் ஊழலில் லாபமடைந்த ராசாவின் கூட்டாளிகள் யார் யார் என்பது அம்பலப்படுத்தப்பட்டு தண்டிக்கப்பட்டால்தான் எதிர்கால அரசியல்வாதிகளுக்கும் தொழிலதிபர்களுக்கும் பயம் இருக்கும். இல்லாவிட்டால் ராசா ராஜினாமா ஊழலை அமுக்க நடந்த உத்தியாக முடிந்துவிடும்.

## இந்த வாரத் திட்டு

பெண் டிரைவர்களை வேலைக்கு நியமித்தால் பிரசவ விடுமுறை கேட்கிறார்கள்; அவர்களால் கடினமான டிரைவர் வேலை செய்ய முடியாது என்பதால் அவர்களை அரசு நியமிக்காது என்று தமிழக சட்டமன்றத்தில் அறிவித்திருக்கும் போக்குவரத்து அமைச்சர் கே.என்.நேருவுக்கு இ. வா.தி. மேலை நாடுகள் முழுவதிலும் பெண் டிரைவர்கள் ஏராளமாக பணி புரிகிறார்கள். பிரசவ விடுறை கேட்பார்கள் என்பதற்காக நர்சுகள், ஆசிரியர்கள் என்று எல்லா துறைகளிலிருந்தும் பெண்களை அமைச்சர் நீக்கச் சொல்வாரா?.

தன் அபத்தமான கருத்துக்காக அமைச்சர் பெண்களிடம் மன்னிப்பு கேட்கவேண்டும்.

## இந்த வாரப் பூச்செண்டு

பல லட்சம் பட்டதாரிகளும் ஆசிரியர்க்ளும் அலட்சியமாக இருக்கும்போது, சமூகப் பொறுப்புடன் தங்களை மேலவை வாக்காளர்களாகப் பதிவு செய்துகொண்டிருக்கும் தமிழகப் பட்டதாரிகள் 3 லட்சத்து 11,681 பேருக்கும் ஆசிரியர்கள் 72 ஆயிரம் பேருக்கும் இ.வா.பூ.

***கல்கி 20.11.2010***

# யாருக்கும் வெட்கமில்லை......

இந்த வாரம் என் ரத்தக் கொதிப்பு அதிகமாகிவிட்டது. நவம்பர் 18ந்தேதி மதுரையில் கருணாநிதியின் பேரன் கல்யாணத் திருவிழா நிகழ்ச்சிகளை டி.வியில் பார்த்தபோதும் செய்திகளைப் பத்திரிகைகளில் படித்தபோதும், ரத்தம் கொதித்தது.

அன்று மதுரையில் பள்ளிகளுக்கு விடுமுறை. பல்கலைக்கழக தேர்வுகள் தள்ளிவைக்கப்பட்டன. நகரெங்கும் மதுரையின் இளவரசர் என்று அழகிரி மகனைப் போற்றி விளம்பரப் பலகைகள். தான் மேற்கொண்ட அதே பகுத்தறிவு லட்சியத்தைத் தன் குடும்பமே பேரன் பேத்திகள் வரை பின்பற்றுவதைப் பற்றிப் பெருமைப்படுவதாக மேடையில் கருணாநிதியின் ஓர் அப்பட்டமான பொய்ப் பேச்சு... எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தமாதிரி திருமணத்துக்கு வந்த ஆங்கில வாழ்த்துச் செய்திகளைப் படித்து நன்றி கூறியது தயாநிதி மாறன்.பக்கத்தில் அழகிரி.

அடப்பாவிகளா...உங்கள் இரண்டு பேர் சொத்துச் சண்டையில்தானே மதுரை தினகரன் அலுவலகத்தில் மூன்று அப்பாவி மனிதர்களுக்குக் கொள்ளி வைத்தீர்கள்.. கொள்ளி வைத்த கும்பல் எல்லாம் சிறப்பு விருந்தினர்களாக எதிரே ஜொலிக்கும் பந்தலில்...

கருணாநிதி குடும்பத்தில் தயாளு அம்மாளிலிருந்து தயாநிதி வரை எல்லாரும் எப்பேர்ப்பட்ட திறமையான நடிகர்கள் என்பது அன்றைக்கு மேடையில் தெரிந்தது. அடுத்த சில நாட்களில் வெளிவந்த அவுட்லுக் இதழில் அம்பலப்படுத்தப்பட்ட நீரா ராடியா போன் பேச்சு

டேப்களைப் படித்தபோதுதான், அவர்களின் நடிப்புத் திறமையின் முழுப் பரிமாணமும் புரிந்தது. சிவாஜி கணேசன் முதல் தனுஷ் வரை பத்மினி, சாவித்திரி முதல் அஞ்சலி வரை அத்தனை நடிகர்களையும் தூக்கி சாப்பிட்டுவிடுகிற திறமையுடன் ஒரே குடும்பத்தில் இத்தனை பேர் இருக்கிறார்களே என்று வியப்பாகவும் எரிச்சலாகவும் இருந்தது. தமிழக வரலாற்றில் இதற்கு முன்பும் சரி, இனியும் சரி, இப்படி ஒரு குடும்பம் இருந்ததும் இல்லை இருக்கப்போவதுமில்லை. வரலாற்றில்நிச்சயம் இடம் உண்டு.

மக்களுக்குத் தொண்டு செய்வதற்காக தயாநிதி மாறனும் கனிமொழியும் ஆ.ராசாவும் எவ்வளவு துடித்திருக்கிறார்கள் என்பதை நீரா ராடியா டேப்கள் நமக்குப் புரியவைக்கின்றன. தொழில் தரகர் நீரா ராடியாவுடன் கனிமொழி, ராசா, பத்திரிகையாளர்கள் வீர் சங்வி, பர்க்கா தத், தொழிலதிபர் ரத்தன் டாட்டா இன்னும் பலர் அரசியல், தொழில்துறை விவகாரங்கள் பற்றிப் பேசியவை அம்பலமாகியிருக்கின்றன. இந்த டேப்கள் எதுவும் எந்தப் பத்திரிகையாளரும் தனி முயற்சியில் பதிவு செய்தவை அல்ல. அரசாங்கத்தின் வருமானவரித் துறை உள்துறை அனுமதியுடன் நீரா ராடியாவைத் தொடர்ந்து கண்காணித்துப் பதிவு செய்தவை. இப்போது உச்ச நீதிமன்றத்தின் முன்னால் தாக்கல் செய்யப்பட்டிருப்பவை.

இவற்றிலிருந்து தெரியவரும் தகவல்கள்தான் என்ன ?

1. கருணாநிதிக்கு வயதாகி புத்தி பேதலித்துவிட்டது. (senile). இனிமேல் தானும் ஸ்டாலினும்தான் கட்சியை நடத்திச் செல்லப் போகிறோம். காங்கிரசார் எதுவானாலும் இனி என்னுடன் பேசுவதுதான் நல்லது. ஸ்டாலினும் என் கட்டுப்பாட்டில்தான் இருப்பார் என்றெல்லாம் தயாநிதி மாறன் டெல்லியில் சொல்லுவதாக நீரா ராடியா ஆ.ராசாவிடம் சொல்லுகிறார்.

2. அழகிரிக்கு ஆங்கிலம் தெரியாது என்று காங்கிரசார் மனதில் கருத வைத்தது யாரென்று தனக்குத் தெரியும் என்று ராசா சொன்னதற்குத்தான் மேற்படி பதில்.

3. அதுமட்டுமல்ல அழகிரி ஒரு கிரிமினல். ஐந்தாவது வகுப்புக்கு மேல் படிக்கவில்லை என்றும் தயாநிதி சொல்லியிருக்கிறார். இதையெல்லாம் கருணாநிதியிடம் சொல்லுங்கள் என்கிறார் நீரா.

4. இல்லை. நான் அழகிரியிடமே சொல்லிவிட்டேன். அவர் தலைவரிடம் போய் சொல்லிவிட்டார் என்கிறார் ராசா.

5. எங்களுக்கு டி.ஆர்.பாலுவுடன்தான் பிரச்சினை. ராசாவிடம் இல்லை என்று சோனியா காந்தியை நேரடியாகவே கருணாநிதியிடம் போனில் சொல்ல வைக்கும்படி ராசா நீராவைக்

கேட்டுக் கொள்கிறார். அகமது படேல் மூலம் சொல்லுவதாக நீரா சொல்லுகிறார். பாலுதான் பிரச்சினை என்பதை எழுதி ஒரு சீலிட்ட கவரில் வைத்து கருணாநிதியிடம் கொடுக்கச் சொல்கிறார் ராசா.

6. தன்னைத்தான் தி.மு.க சார்பில் டெல்லியில் காங்கிரசாருடன் பேசும்படி கருணாநிதி தனியே சொல்லியனுப்பியிருப்பதாக தயாநிதி மாறன் டெல்லியில் சொல்லிவருவதாக நீரா, கனிமொழியிடம் சொல்கிறார்.

7. தயாநிதி பொய் சொல்லுவதாகவும் பொய்களைப் பரப்புவதாக்வும் கனிமொழி நீராவிடம் சொல்கிறார். அதற்கு நீரா இதையேதான் சி.என்.என்.ஐ.பி.என் சேனலின் ராஜ்தீப் சர்தேசாய் தன்னிடமும் சொன்னதாகச் சொல்கிறார். சென்னையில் சன் டி.விகாரர்கள் இதர வட இந்திய சேனல்கள் எல்லாரிடமும் தவறான செய்திகளை வேண்டுமென்றே பரப்புகிறார்கள் என்று தனக்குத் தெரியும் என்று ராஜ்தீப் சொன்னதாக நீரா கனிமொழியிடம் தெரிவிக்கிறார்.

8.கனிமொழி டெல்லியிலிருந்து சென்னைக்குச் செல்ல விமான நிலையத்துக்குப் புறப்படும் முன்பு நீராவும் கனிமொழியும் பேசுகிறார்கள். தயாநிதி பதவி ஏற்கச் செல்லப்போவதாக நீரா சொல்கிறார். போகக்கூடாது என்று கருணாநிதி சொல்லியிருப்பதாக கனிமொழி சொல்கிறார். ராசாதான் போகவேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறதாம். ஆனால் தயாநிதி பின்னால் கருணாநிதியிடம் வந்து அகமது படேல் கூப்பிட்டதால் சென்றேன் என்று ஏதாவது கதை விடுவார் என்கிறார் கனிமொழி. இதையெல்லாம் அப்பாவிடம் சொல்ல வேண்டியதுதானே என்று நீரா கேட்கிரார். அய்யோ அவருக்குப் புரியவே புரியாது, என்று அலுத்துக் கொள்கிறார் கனிமொழி. விரக்தியடையாதே. நீதான் மகள். நீதான் அப்பாவிடம் பேசவேண்டும் என்று ஆறுதல் சொல்கிறார் நீரா.

9.தனக்கு கேபினட்டில் என்ன துறை தருவார்கள் என்று நீராவிடம் கனிமொழி கேட்கிறார். நல்வாழ்வு, சுற்றுச் சூழல், விமானத்துறைகளில் ஒன்றைத் தரச் சொல்லியிருப்பதாக நீரா சொல்கிறார். சுற்றுலா வேண்டாம் என்கிறார் கனிமொழி.

10. தொழிலதிபர் ரத்தன் டாட்டாவுடன் நீரா பேசும்போது, ராசாவை தயாநிதி துரத்தித் துரத்தி அடிப்பது கவலையாக இருப்பதாக டாட்டா சொல்கிறார். எதுவும் ஆகாது. அப்படியே ஆனாலும், ராசா இடத்துக்குக் கனிமொழிதான் வருவார் என்று ஆறுதல் சொல்கிறார் நீரா.

*11.* இன்னொரு பேச்சில், ராசாவுக்காக இவ்வளவு செய்திருந்தும் இப்படி ( நமக்கு சாதகமில்லாமல்) நடந்துகொள்கிறாரே என்று கவலைப்படுகிறார் ரத்தன் டாட்டா. கோர்ட் உத்தரவினால் அப்படி என்று தன்னிடம் ராசா விளக்கியதாகவும் கோர்ட் உத்தரவைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். அதற்கு வியாக்யானம் சொல்வது ராசா கையில்தான் இருக்கிறது என்று ராசாவிடம் சொல்லிவிட்டதாகவும் நீரா தெரிவிக்கிறார்.

*12.* புதிய அட்டர்னி ஜெனரல் பற்றி ரத்தன் டாட்டா கவலை தெரிவிக்கிறார். அவரைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். நமக்கு சாலிசிட்டர் ஜெனரல் கோபால் சுப்ரமணியம்தான் முக்கியம். அவரைப் பார்க்கப்போகிறேன். அவ்ருக்கு அனில் அம்பானியை துளியும் பிடிக்காது. நேர்மையானவர். (!) அனில் சொல்வதை ஒப்புக் கொள்ளமாட்டார் என்று நீரா பதிலளிக்கிறார்.

*13.* அனில் அம்பானியின் குழப்படிகள் பற்றி ஏன் மீடியா அம்பலப்படுத்தாமல் இருக்கிறது என்று டாட்டா நீராவைக் கேட்கிறார். விளம்பர பலம்தான். ஏதாவது நெகடிவாக எழுதினால் உடனே விளம்பரத்தை நிறுத்திவிடுகிறார்கள் என்று டைம்ஸ் ஆஃப் இந்தியாவும் தைனிக் பாஸ்கர் பத்திரிகையும் சொல்கிறார்கள். மற்றவர்களும் இதை செய்யமுடியுமே என்றேன். மீடியா ரொம்ப ரொம்ப பேராசைப்படுகிறது என்று விளக்குகிறார் நீரா.

*14.* என்.டி. டி.வியின் பர்க்கா தத்துடன் நீரா பேசுகிறார். இருவரும் காங்கிரஸ் தி.மு.க அமைச்சர் பதவிப் பங்கீடு பேச்சு வார்த்தைகளை விவாதிக்கிறார்கள். தான் காங்கிரஸ் தரப்பிடம் என்ன தெரிவிக்க வேண்டும் என்று பர்க்கா கேட்கிறார். தான் அம்மா, மகள் (ராஜாத்தி, கனிமொழி) இருவருடனும் பேசிவிட்டதாகவும் , காங்கிரஸ் தலைவர்கள் கருணாநிதியிடம் நேரடியாகப் பேசவேண்டும் என்றும் தயாநிதி மாறன், பாலு இருவரையும் வைத்துக் கொண்டு பேசக் கூடாது என்றும் நீரா சொல்கிறார்

*15.* ஹிந்துஸ்தான் டைம்ஸின் ஆசிரியர் இயக்குநர் வீர் சங்வியும் நீராவும் பேசுகிறார்கள். சங்வி தான் தொடர்ந்து சோனியாவையும் ராகுலையும் சந்தித்து வருவதாக சொல்கிறார். அமைச்சர் துறைப் பங்கீட்டுப் பிரச்சினை காங்கிரஸ்-தி.மு.க பிரச்சினை அல்ல. தி.மு.கவின் உள்தகராறுதான் என்கிறார். இரண்டு மனைவிகள், ஒரு சகோதரன், ஒரு சகோதரி, ஒரு மருமகன், என்று எல்லாம் ஒரே சிக்கலாக இருக்கிறது. கருணாநிதி தானே நேரில் பேசட்டும். அல்லது இன்னார்தான் தன் சார்பில் என்று ஒரே ஒருவரை தெரிவிக்கட்டும். ஆளுக்கு ஆள் பேசுகிறார்கள். தயாநிதி குலாம் நபி ஆசாதை அடிக்கடிக் கூப்பிட்டு நான் தான் அதிகாரப்பூர்வமான

பிரதிநிதி என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார். யாரும் அவரை சீரியசாக எடுத்துக் கொள்வதில்லை என்று வீர் சிங்வி சொல்கிறார். நீரா உடனே தயாநிதி மாறனை அமைச்சரவையில் சேர்க்க பெரும் நிர்ப்பந்தம் இருப்பதாகச் சொல்கிறார். என்ன நிர்ப்பந்தம் ? தயாநிதி கருணாநிதியின் மனைவி தயாளு அம்மாளுக்கு 600 கோடி ரூபாய் கொடுத்திருப்பதாகவும் அதனால் ஸ்டாலினும் செல்வியும் நிர்பந்திப்பதாகவும் நீரா சொல்கிறார்.

இப்படியாகத் தமிழ்நாட்டின் மானத்தை டெல்லியில் தி.மு.க தலைவர் கருணாநிதியின் குடும்பம் நாறடித்துக் கொண்டிருக்கும் கதை தொடர்கிறது.

படிக்கப் படிக்க ரத்தம் கொதிக்கிறது..... மேலே கொடுக்கப்பட்டது சுருக்கம்தான். அதற்கே எனக்கு ரத்தம் கொதிக்கிறது. அசல் உரையாடல்களைப் படித்தால், மந்திரி பதவிக்கான வெறி, ஆவேசம், பேராசை, நினைத்தபடி ஒவ்வொன்றும் நடக்கவில்லையே என்ற ஆதங்கம், எரிச்சல், எப்படியாவது காரியத்தை முடித்துவிடவேண்டுமென்ற பதைப்பு எல்லாம் கனிமொழியின் பேச்சில் தொனிக்கின்றன. ஒவ்வொருவர் பேச்சிலும் ஒரு தொனி இருக்கிறது. தைரியம், மமதை,எல்லாம் தன் கண்ட்ரோலில் இருக்கிறது என்ற மிதப்பு எல்லாம் தெரிகின்றன.

இந்திய ஜனநாயகத்தின் அடிப்படைகளையே உலுக்கும் கேள்விகளையும் அவற்றுக்கு அதிர்ச்சியான பதில்களையும் இந்த டேப்கள் நமக்குள் எழுப்புகின்றன.

**கேள்வி 1: அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பது யார் ? பிரதமரா? தொழிலதிபர்களா?**

பதில்: தொழிலதிபர்கள்தான். மன்மோகன்சிங் ஒரு டம்மி பீஸ்.

**கேள்வி 2: எதற்காகக் குறிப்பிட்ட துறை தனக்கு வேண்டுமென்று அலைகிறார்கள் ? தொண்டு செய்யவா? கொள்ளையடிக்கவா?**

பதில்: கேள்வி கேட்ட முட்டாளே ! தொண்டுக்கும் அரசியலுக்கும் என்ன சம்பந்தம் ? கொள்ளையடிக்கத்தான்.

**கேள்வி 3: எல்லா ஊழல்களையும் முறைகேடுகளையும் அம்பலப்படுத்தும் மீடியா, பத்திரிகையாளர்கள் அரசியல்வாதிகளுடன் செய்தி சேகரிக்கப் பேசினால் குற்றமா ? அது தரகு வேலை பார்ப்பதாகிவிடுமா?**

பதில்: செய்தி சேகரிப்பவரின் தொனி வேறு. தரகு பேர்வழியின் தொனி வேறு. நிச்சயம் ராடியா டேப்களில் இருக்கும் தொனி தரகர்களின் தொனிதான்.

*கேள்வி 4 : ராடியா டேப்கள் பற்றி கருணாநிதி, கனிமொழி, ராசா, தயாநிதி மாறன், மன்மோகன்சிங், சோனியா, ராகுல் காந்தி, ரத்தன் டாட்டா ஆகியோர் ஏன் ஒரு வார்த்தை கூட சொல்லவில்லை ?*

*பதில்:* சொன்னாலும் நாம் நம்பப் போவதில்லை என்பது அவர்களுக்குத் தெரியும் என்பதால்தான்.

*கேள்வி 5: இத்தனைக்கும் பிறகு எப்படி மக்களைத் தேர்தலில் சந்திக்க தெருத்தெருவாக இனி வருவார்கள் ?*

*பதில்:* ஒரு லட்சத்து 76 ஆயிரம் கோடி ரூபாய்களில் ஒரு துளியை கவர்களில் கொடுத்தால் மக்களுக்குப் போதுமானது என்று அவர்கள் நம்புவதனால்தான்.

இந்தக் கட்டுரையை எப்படி முடிக்க ? கண்கள் பனித்தன. நெஞ்சம் இனித்தது என்றா?

## இந்த வாரப் பூச்செண்டு

ஸ்பெக்ட்ரம் ஊழலை ஆரம்பம் முதல் தொடர்ந்து விடாபிடியாக அம்பலப்படுத்தி வந்திருக்கும் பயனீர் ஆங்கில ஏட்டின் செய்தியாலர் கோபிகிருஷ்ணனுக்கு இ.வாபூ.

*கல்கி 27.11.2010*

# இரு விஷங்கள்....

## விஷம் 1

தன் மீது வைக்கப்படும் குற்றச்சாட்டுக்கு நேரடியாக பதில் சொல்ல முடியாத போதெல்லாம் ஆரியதிராவிட பகை, பார்ப்பன சதி என்ற பிரசாரங்களில் இறங்கும் தன் வழக்கப்படி வேலூர் கோட்டை மைதானப் பேச்சிலும், சமீப கால அறிக்கைகளிலும் கருணாநிதி அதே உத்தியை மறுபடியும் கையில் எடுத்துக் கொண்டிருக்கிறார். இவையெல்லாம் விஷ(ம)ப் பேச்சு என்பதில் சந்தேகமே இல்லை.

அவர் ஆரியர்கள் என்று கருதும் பிராமணர்கள் பலரின் உதவியோடும் கூட்டோடும்தான் ஆட்சி நடத்திக் கொண்டிருக்கிறார். 'போகாதே போகாதே என் கணவா, பொல்லாத சொப்பனம் நானும் கண்டேன்' என்று புலம்பியும், தன்னை விட்டுப் போனால் காங்கிரசுக்கு அதிக இழப்பு என்று மிரட்டியும் அவர் கூடவே வைத்துக் கொண்டிருக்க விரும்பும் காங்கிரசின் தலைமை காஷ்மீர் பிராமணர்களின் வாரிசுதான். கருணாநிதி குடும்பத்தின் அத்தனை தொழில்களிலும் பிராமணர்களின் பங்கு கணிசமாக இருக்கிறது. புதிய வருணாசிரமத்தில் உச்சியில் உட்கார்ந்திருக்கும் புதிய பார்ப்பனர் கருணாநிதிதான்.

எனவே அவர் காலாவதியாகிப் போன உத்தியை உதறிவிட்டு நேர்மையாக பிரச்சினையை எதிர்கொள்ள முன்வேண்டும். 'ராசா தலித் என்பதனால் பாராளுமன்றத்தில் இவ்வளவு எதிர்ப்புக் கூச்சல். இதே டி.டி.கிருஷ்ணமாச்சாரியாக இருந்தபோது அவர் ராஜினாமா செய்த அடுத்த நாளே அமைதியாகிவிட்டார்கள்' என்று (சின்னக் குத்தூசி பாணியில் சொல்வதானால்) விஷ(ம)த்தைக் கக்கியிருக்கிறார் கருணாநிதி.

டி.டி.கே விவகாரம் என்ன ? ராசா விவகாரம் என்ன

என்று பார்ப்போம். 1957ல் முந்த்ரா என்ற தொழிலதிபரின் பங்குகளை அரசுக்குச் சொந்தமான எல்.ஐ.சி நிறுவனம் வாங்கி நஷ்டமடைந்தது என்பதுதான் புகார். பங்குகளை வாங்க உத்தரவிட்டவர் நிதித்துறை செயலாளர் எச்.எம் பட்டேல். நிதி அமைச்சராக டி.டி.கே.இருந்தார். எல்.ஐ.சி இழந்தது ஒன்றரை கோடி ரூபாய். பதிலுக்கு காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு முந்த்ரா இரண்டரை லட்சம் ரூபாய் கொடுத்ததாகச் சொல்லப்பட்டது. கான்பூரில் முந்த்ராவின் மில்லை மூடினால் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை இழப்பார்கள். அதை மூடக் கூடாது என்று நிபந்தனை விதித்ததை முந்த்ரா ஏற்றுக் கொண்டார்.

முதலீட்டுக்குழு ஒப்புதல் இல்லாமல் முந்த்ராவின் பங்குகளை எல்.ஐ.சி வாங்கிய முறைகேட்டை அம்பலப்படுத்தியது எதிர்க்கட்சிகள் அல்ல. பிரதமராக இருந்த நேருவின் மருமகனும் இந்திராவின் கணவரும் ஆளுங்கட்சி எம்.பியுமான பெரோஸ் காந்திதான். எதிர்க்கட்சிகள் அவரோடு சேர்ந்துகொண்டன.

நேரு உடனடியாக மும்பை உயர்நீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதி எம்.சி.சாக்ளாவை விசாரணை கமிஷனாக நியமித்தார். பங்குகளை வாங்க உத்தரவிட்டது நிதிச் செயலாளர்தான் என். ் அதற்கான தார்மிகப் பொறுப்பு நிதி அமைச்சருடையது என்றும் சாக்ளா முடிவு செய்தார். தான் ' லுக் இண்ட்டு திஸ் மேட்டர்' என்று சொன்னதாக டி.டி.கேவும், அதை பங்குகள் வாங்கச் சொன்னதாகப் புரிந்துகொண்டதாக பட்டேலும் சாட்சியத்தில் சொல்லியிருந்தார்கள். டி.டி.கே ராஜினாமா செய்தபோது நேரு உங்களுக்கு இதில் தொடர்பில்லை என்றாலும் நீங்கள் தார்மிக அடிப்படையில் விலகுகிறீர்கள் என்பதைப் புரிந்துகொள்கிறேன் என்று சொன்னார்.

டிசம்பர் 16, 1957ல் பெரோஸ் காந்தி புகார் எழுப்பினார். ஜனவரி முதல் வாரத்தில் சாக்ளா கமிஷன் பகிரங்க விசாரணையைத் தொடங்கியது. நூற்றுக்கணக்கான பொதுமக்கள் முன்னிலையில் 11 நாட்கள் விசாரித்த உடனே சாக்ளா அறிக்கை கொடுத்தார். அமைச்சர் ராஜினாமா செய்தார். எல்லாமே ஒரு மாதத்துக்குள் முடிந்துவிட்டது.முந்த்ரா போலிப்பங்குகளை விற்றதற்காக சிறையில் அடைக்கப்பட்டார்.

கருணாநிதி அவர்களே, அப்புறம் எதற்காகத் தொடர்ந்து அவையில் யாரும் கூச்சல் எழுப்ப வேண்டும் ?

ஸ்பெக்ட்ரம் ஊழல் விவகாரம் வெளிவந்து ஒரு வருடத்துக்கு மேல் ஆகிறது. நேரு ஒரே வாரத்தில் ஓய்வு பெற்ற உயர் நீதிமன்ற நீதிபதியை விசாரிக்க நியமித்தது போல மன்மோகன்சிங் ஏதாவது

நியமித்தாரா ? கனிமொழி ராசா டேப் பதிவுகள் அம்பலமாகி பல மாதங்கள் ஆகிவிட்டன. கருணாநிதி அதைப் பற்றி இன்னும் வாயையே திறக்கவில்லை. என்ன செய்வது ? பதிவு செய்த மெஷின் பார்ப்பான் கண்டுபிடித்த மெஷின் என்று சொல்ல முடியாதே.

பிரதமரின் மருமகனே அரசின் முறைகேட்டை வெளிப்படுத்தும் சூழல் நேரு காலத்தில் இருந்தது. ராசாவின் ஊழலை அவர் கட்சியையே சேர்ந்த எந்த தி.மு.க காரனாவது வெளிப்படுத்தும் வாய்ப்பு இருக்கிறதா ?கருணாநிதி காலத்தில் யாராவது எந்த ஊழலையாவது வெளிப்படுத்தினால் அவரால் கம்யூனிட்டி சர்ட்டிஃபிகேட் ஆராய்ச்சி மட்டும்தான் நடத்த முடியும்.

முந்த்ராவின் பங்குகளை எல்.ஐ.சியை வாங்கச் செய்து நஷ்டமடைந்தது தவறு என்று மட்டும்தான் சாக்ளா சொன்னார். அதில் யாருக்கும் பணம் கை மாறியதாக எந்த ஆதாரமும் இல்லை என்றார். விவான் போஸ் குழுதான் கட்சிக்கு பணம் தரப்பட்டதாக சொன்னது. நேரு தன் உளவுத் துறையை விசாரிக்கச் செய்தார். அமைச்சர், அதிகாரிகள் யாரும் பணம் பெறவில்லை என்று உளவுத் துறை கூறியது.

தவிர முந்த்ரா ஒரு மோசடிப் பேர்வழி என்பது முன்பே நேரு. டி.டி.கே பட்டேல் எல்லாருக்கும் தெரியும். முந்த்ரா பங்கு மார்க்கெட்டில் செய்துவரும் நடவடிக்கைகள் பற்றி பல குறிப்புகளை டி.டி.கேவும் நேருவும் கோப்புகளில் முன்பே பதிவு செய்திருக்கிறார்கள். முந்த்ரா கம்பெனி திவாலானால் பங்கு மார்க்கெட்டில் சிக்கலும் முந்த்ராவுக்கு கடன் கொடுத்த வங்கிகளுக்கு சிக்கலும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு வேலை இழப்பும் வரும் என்பதால், தற்காலிகத் தீர்வாக முந்த்ரா பங்குகளை எல்.ஐ.சி வாங்குவதென்ற முடிவை நேரு அரசு எடுக்க வேண்டியிருந்தது. அது உண்மையில் பொருளாதார நெருக்கடி பற்றிய ஜட்ஜ்மெண்ட் எரர்தானே தவிர ஊழல் அல்ல.

ராசா செய்தது அப்பட்டமான மோசடி. ஸ்பெக்ட்ரம் விற்பனை விதிகளை, தேதிகளை மாற்றி அமைத்தது, அனுபவமில்லாத கம்பெனிகளுக்கு லைசன்ஸ் கொடுத்தது, அவர்கள் அதை விற்று பல கோடி சம்பாதித்தது, நீரா ராடியாவுடன் பேரங்களில் ஈடுபட்டது, பிரதமர் சொன்னதைக் கேட்காதது எல்லாம் ஒரு சாதாரண பாராளுமன்றக் கூட்டுக் குழுவால் கூட விசாரிக்க முடியாமல் கருணாநிதி வகையறாக்களால் வருடக்கணக்கில் தடுக்கப் பட்டு வருகிறது. இதைக் கேள்வி கேட்டால் விஷத்தைக் கக்குகிறார் கருணாநிதி. பக்தவத்சலம் சொன்னது போல விஷக் கிருமிகள் பரவிவிட்டன. அவர் கருணாநிதி வகையறாக்களைத்தான்

குறிப்பிட்டிருக்க வேண்டும். தேர்தலின் போது சரியான மருந்து அடிக்கத் தவறினால் நாம்தான் மாண்டு போவோம்.

### விஷம் 2

மருந்து என்று நினைத்து விஷத்தைப் பயன்படுத்துவது அரசியலில் மட்டுமல்ல விவசாயத்திலும் ஆபத்தானதுதான். கேரளத்தின் காசர்கோடு மாவட்டம் இந்தியாவின் கேன்சர் தலைநகரமாக மாறிவருவதற்குக் காரணம் எண்டோசல்பான் என்ற பூச்சி மருந்து விஷம்.

சுமார் 25 வருடங்களாக காசர் கோடு மாவட்டத்தில் முந்திரி, தேயிலை, காபி தோட்டங்களில் விமானம் மூலம் எண்டோசல்பான் தெளிக்கப்பட்டு வந்ததன் விளைவாக இன்று மாவட்டத்தில் பத்து கிராமங்கள் முற்றிலும் புற்று நோய் பாதிககப்பட்டவையாகிவிட்டன. தோல் நோய்கள், கண்பார்வை இழத்தல், மூளை வளர்ச்சி குன்றுதல் என்று பல நோய்கள் குழந்தைகளையும் பெரியவர்களையும் தாக்குகின்றன என்று அகமதாபாத் சூழல் ஆய்வு நிலையம் காசர்கோட்டில் செய்த ஆய்வில் கண்டறிந்தது. 123 வீடுகளில் சாம்பிள் சர்வே செய்தபோது 93 வீடுகளில் புற்று நோய என்ற அளவுக்கு தாக்கம் மோசமாக இருக்கிறது. ஒரே வருடத்தில் சுமார் 500 பேர் இறந்திருக்கிறார்கள்.

இப்போது உயர் நீதிமன்ற உத்தரவையடுத்து கேரள அரசு எண்டோசல்பானை மாநிலம் முழுவதும் தடை செய்துவிட்டது. ஆனால் இந்திய அரசு தடை செய்ய மறுக்கிறது. அது மட்டுமல்ல உலக அளவில் எண்டோசல்பானை தடை செய்யும் முயற்சியையும் எதிர்க்கிறது !

ஏற்கனவே அமெரிக்கா, பிரிட்டன், ஜெர்மனி, ஸ்வீடன், நெதர்லாந்து, சிங்கப்பூர், சிரியா, ஆகியவை தடை செய்துவிட்டன. ஆஸ்திரேலியா, ஜப்பான், ஸ்ரீலங்கா முதலிய பல நாடுகளில் கடும் கட்டுப்பாடுகள் உள்ளன. இந்தியாவும் முழுத்தடை விதிக்கக் கோரி மேதா பட்கர் தலைமையில் சென்ற வாரம் நாடாளுமன்றம் நோக்கி பேரணி நடத்தப்பட்டது.

சில உடனடி லாபங்களுக்காக நம்மை தொலை நோக்கில் பலி கொடுக்கும் முட்டாள்தனத்தை நாம் அரசியல், விவசாயம் என்று எல்லா துறைகளிலும் செய்துகொண்டிருக்கிறோம். சமூகத்தில் சில பூச்சிகளைக் கொல்வதற்கு, களைகளை அழிப்பதற்கு திராவிட இயக்கம் நமக்கு ஒரு காலத்தில் தேவைப்பட்டது. இன்று அதுவே ஒரு எண்டோசல்பானாகிவிட்ட நிலையில் அவசரமான மறு பரிசீலனைகள் தேவைப்படுகின்றன.

## இந்த வாரப் பூச்செண்டு

வீடு வீடாகச் சென்று ஒவ்வொருவருக்கும் சர்க்கரை, ரத்த அழுத்தநோய்கள உள்ளனவா என்று சோதிக்கும் திட்டத்தை தொடங்கியிருப்பதற்காக தமிழக அரசுக்கு இ.வா.பூ.

## இந்த வாரக் கவலை

*புதிய பீஹார் சட்டசபையில் கிரிமினல் எம்.எல்.ஏக்கள் 59 சதவிகிதம்! பழைய சபையில் 35 சதவிகிதம்தான். 85 பேர் மீது கொலைக்குற்றங்கள் உள்ளன. இப்போது 47 கோடீஸ்வர எம்.எல்.ஏக்கள். முன்பு வெறும் 8 பேர்தான் கோடீஸ்வரர்கள்.*

***கல்கி 4.12.2010***

# தனிமையிலே 'இனிமை' காணமுடியுமா?

ஒரு லட்சத்து 76 ஆயிரத்து 356 கோடி ரூபாய் முறைகேட்டை ஆ.ராசாவால் தனியாக செய்திருக்க முடியாது என்றுதான் நான் நினைக்கிறேன். முதலமைச்சர் கலைஞர் கருணாநிதியும் அப்படித்தான் நினைக்கிறார் என்று இப்போது தெரியவந்திருப்பது எனக்குப் புல்லரிக்கிறது. இப்படி ஓர் ஒப்புதல் வாக்குமூலத்தை இதற்கு முன்பு யாரும் கொடுத்ததில்லை.

'இளைஞன்'பட விழாவில் பேசிய கருணாநிதி, ஊமைப்பட காலத்தில் பகாசூரன் வதைக் காட்சிகளை தான் பார்த்தபோது எப்படி அசுரனைப் பற்றி மிகைப்படுத்தப்பட்ட வர்ணனைகள் சொல்லப்பட்டன என்று விவரித்துவிட்டு, அதே போல ஒரு தனி நபர் ஒரு லட்சத்து 76 ஆயிரத்து 356 கோடி ரூபாய்களை தனியாக அபகரித்திருக்க முடியுமா என்று சிந்திக்காமல் படித்தவர்களும் நம்புகிறார்களே என்று கேட்டிருக்கிறார்.

அடுத்தபடி அவர் சொன்னதைத்தான் ஆங்கிலத்தில் உளவியலில் ஃப்ராய்டியன் ஸ்லிப் என்பார்கள். தன்னையறியாமலே அடிமனதில் இருக்கும் உண்மையை உளறிவிடுவதுதான் அது. "எதை வேண்டுமானாலும் சொல்வார்கள். ஆனால் இன்றைக்கு ஒரு மனிதன் அந்தக் காரியத்தைச் செய்கிறான் என்றால் அவன் விஞ் ஞான ரீதியாகத்தான் செய்யமுடியும்". எந்திரன் படத்தில் ரஜினி எப்படி ரோபோவாக வந்து இந்தக் காரியங்களைச் செய்கிறாரோ, அதைப் போல செய்ய முடியுமே தவிர, "தனியாக ஒரு மனிதன் அப்படிச் செய்யமுடியாது என்பதை அறிவுப்பூர்வமாக இன்றைக்கு உணர்கிறோம்" என்கிறார் கருணாநிதி.

புராண பகாசூரன் வேலைகளை இன்று விஞ்ஞானப்பூர்வமாக செய்ய முடியும் என்று கருணாநிதி சொன்னால் சரியாகத்தான் இருக்கும். ஏனென்றால் விஞ்ஞானப்பூர்வமாக ஊழல்கள் செய்பவர் என்று 35 வருடங்களுக்கு முன்பே நீதிபதி சர்க்காரியாவால் வர்ணிக்கப்பட்டவர் அவர்.

ராசாவோடு ஸ்பெக்ட்ரம் முறைகேட்டில் சம்பந்தப்பட்டவர்கள் யார் யாராக இருக்கும் என்று யூகிக்கும் வசதியை நமக்கு நீரா ராடியா டேப்கள் அளிக்கின்றன. அவற்றைப் பற்றி ஒருபோதும் கருணாநிதி ஒரு வார்த்தை கூட சொல்லப்போவதே இல்லை.

தி.மு.க சம்பந்தப்பட்ட முறைகேடு ஸ்பெக்ட்ரம் என்பது மட்டும் அல்ல. பல ஊழல்களில் அது ஒன்று. மிகப் பெரும் தொகைளும், மிகப் பெரிய சூழ்ச்சிகளும் சம்பந்தப்பட்டிருப்பதால் அதைப் பற்றி அதிகம் பேசுகிறோம்.

ஆ.ராசாவும் டி.ஆர்.பாலுவும் தொடர்புடைய இன்னொரு மிகப் பெரும் முறைகேடு ஒன்றை தெஹல்கா இதழ் அமபலப்படுத்தியிருக்கிறது. ராசா டெலிகாம் அமைச்சராவதற்கு முன்பு சுற்றுச் சூழல் அமைச்சராக இருந்தார். அவருக்கு முன்பு அந்தப் பொறுப்பில் பாலு இருந்தார். இருவர் கீழுமாக ஏழு வருடங்கள் அந்த அமைச்சகம் இருந்திருக்கிறது.

புதிய தொழில் திட்டங்களுக்கான விண்ணப்பங்கள் வரும்போது அவற்றால் ஏற்படக்கூடிய சுற்றுச் சூழல் பாதிப்பு பற்றி மதிப்பிட்டுவிட்டு அனுமதி தருவதும்/மறுப்பதும் அமைச்சகத்தின் முக்கியப் பணிகளில் ஒன்று. அதற்கு முன்பு 20 வருடங்களில் 4 ஆயிரம் தொழில் திட்டங்களுக்கு அனுமதி தரப்பட்டது. ஆனால் பாலு, ராசா இருந்த சமயத்தில் மாதம் 100 திட்டங்களுக்கு க்ளியரன்ஸ். இரண்டே வருடங்களில் 2000 திட்டங்களுக்கு ஒப்புதல்.

ராசாவின் டெலிகாம் செயலாளராக இருந்து இபோது விசாரிக்கப்படும் ஆர்.கே.சந்தோலியா முதலில் அவருடன் சுற்றுச்சூழல் துறையில் இருந்தவர். ராசா நீரா ராடியா நட்பு அப்போதுதான் ஆரம்பம். நாட்டின் இன்னொரு மூலையில் இருக்கும் ராசாத்தி அம்மாள், அவர் ஆடிட்டர் ரத்தினம் ஆகியோரின் நட்பு எல்லாம் ராடியாவுக்கு ஏற்படுவதற்கான வித்து சுற்றுச் சூழல் துறையில் தொடங்குகிறது.

பாலு ராசா ஆட்சியில் சுற்றுச் சூழல் பாதிப்பு அறிக்கைகள் தருவதில் பெரும் முறைகேடுகள் நடந்திருப்பதாக சூழல் பாதுகாப்பு இயக்கங்கள் கூறுகின்றன. சூழல் பாதுகாப்பை மதிப்பிடுவதற்கான குழு உறுப்பினர்களாக தமிழ் நாட்டிலிருந்து

தனக்கு வேண்டியவர்களையே ராசா நியமித்ததாகக் குற்றம் சாட்டப்படுகிறது.

பாலு காலத்தில் ஒவ்வொரு தொழிலுக்கும் நடத்தைக் கோட்பாடுகள் வகுக்கப்பட்டன. இவற்றை வகுப்பதில் தொழில் அதிபர்களுக்கு சாதகமாக பல முறைகேடுகளை பாலு செய்திருப்பதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. நடத்தைக் கோட்பாட்டை மீறினால் தண்டனை எதுவும் இல்லை. அது சுயக் கட்டுப்பாட்டுக் கோட்பாடு அவ்வளவுதான். ஸ்பெக்ட்ரம் முறைகேட்டை விடப் பல மடங்கு அதிகமான பாதிப்பை சுற்றுச்சூழல் துறையில் நாட்டுக்கு தி.மு.க அமைச்சர்கள் ஏற்படுத்தியிருப்பதாக தெஹல்கா குற்றம் சாட்டியிருக்கிறது.

மன்மோகன்சிங் இரண்டாம் முறை பிரதமரானபோது பாலு,ராசா இருவரையும் அமைச்சரவையில் சேர்க்க விரும்பவில்லை என்று கூறப்பட்டது. இது தயாநிதி மாறனின் விஷமப் பிரசாரம் என்று நீரா ராடியாவிடம் கனிமொழி சொல்கிறார். மாறனையும் பாலுவையும்தான் மன்மோகன் விரும்பவில்லை என்பது அவர் தரப்பு வாதம்.

ஆனால் பிரதமர் மன்மோகன்சிங்கால் எதுவும் செய்ய முடிவில்லை. அவரால அதிகபட்சம் செய்ய முடிந்ததெல்லாம் பாலுவை அடுத்த முறை அமைச்சரவையில் சேர்க்காமல் விட்டதுதான். ராசா ஒரு வழியாக விலகியதும் அந்தத் துறையை எந்த தி.மு.க காரரிடமும் ஒப்படைக்காமல் தன் கட்சிக்காரரிடமே கொடுக்க முடிந்ததுதான்.

காங்கிரசும் தி.மு.கவும் கூட்டணியில் இருந்தாலும், காங்கிரசால் தன் முதலமைச்சர் மீது நடவடிக்கை எடுப்பது போல, தி.மு.க அமைச்சர்கள் மீது நடவடிக்கை எடுக்க முடிவதில்லை. காரணம் கருணாநிதி சொன்னதாகத்தான் இருக்க முடியும். "யாரும் தனி மனிதனாக அவ்வளவு பெரிய தொகையை எல்லாம் அபகரித்துவிட முடியாது" என்பது எவ்வளவு ஆழ்ந்த அனுபவத்தின் விளைவாக உதிர்ந்த பொன்மொழியாக இருக்க வேண்டும் ! இந்தப் பகுத்தறிவு முடிவிலிருந்துதான் கூட்டணி தர்மம் என்ற கோட்பாடே உருவாகியிருக்க முடியும்.

கூட்டணி தர்மம் என்ற ஒன்று இல்லாவிட்டால், காங்கிரஸ் மகாராஷ்டிரத்தில் தன் முதலமைச்சரை ஆதர்ஷ் வீட்டு ஒதுக்கீடு ஊழலுக்காக விலகவைத்தது போல, தமிழகத்தில் கருணாநிதியை வீட்டு வசதி வாரிய ஊழலுக்காக விலகச் சொல்லலாம். ம்ஹூம் முடியாது. கருணாநிதி கூட்டணி தர்மத்தில் ஆழ்ந்த நம்பிக்கையுள்ளவர். அதனால்தான் தமிழக வீட்டு வசதி வாரிய

ஒதுக்கீடு முறைகேட்டில் காங்கிரஸ் எம்.எல்.ஏக்களுக்கும் உரிய பங்கு கொடுத்துவிடுகிறார்.சென்னையில் சொந்த வீடு இருக்கும் காங்கிரஸ் பெண் எம்.எல்.ஏவுக்கு விதிகளை மீறி வீட்டு வசதி வாரிய நிலம் ஒதுக்கப்படுகிறது.

தகவலறியும் உரிமைச் சட்டத்தின் கீழ் சமூக ஆர்வலர் கோபாலகிருஷ்ணன் வெளிக் கொணர்ந்திருக்கும் தகவல்கள் அதிர்ச்சியூட்டுகின்றன........என்று சொல்ல மாட்டேன். இந்த ஆட்சியில் இப்படியெல்லாம் நடக்காமல் இருந்தால்தான் நமக்கு அதிர்ச்சியாக இருக்கும் என்ற நிலை எப்போதோ வந்துவிட்டது.

கருணாநிதி ஆட்சியில் சமூக சேவகர்களின் எண்ணிக்கை ஒரேயடியாக எகிறிவிட்டது. அண்ணா அறிவாலயத்தில் வேலை செய்யும் ஒருவர் சமூக சேவகராம். உடனே வீடு ஒதுக்கீடு. ஓர் அமைச்சரின் மருமகள், பேத்தி எல்லாரும் சமூக சேவகர்கள்! சட்டமன்ற தி.மு.க கொறடாவின் மனைவி சமூக சேவகி ! முதல்வரின் செயலாளர் மகள் சமூக சேவகி ! ஐ.ஏ.எஸ் அதிகாரியின் மகன், ஐ.பி.எஸ் அதிகாரியின் மனைவி, மகள் எல்லாரும் சமூக சேவகர்கள் !! முதலமைச்சருக்கு செக்யூரிட்டி வேலை செய்தால் அவர்கள் "அப்பழுக்கற்ற அரசு ஊழியர்கள்"!

இப்படி கோடிக்கணக்கான ரூபாய்கள் மதிப்புள்ள வீட்டு மனை, வீடுகளை கருணாநிதியின் அரசு தனக்கு வேண்டியவர்களுக்கு சுண்டல் மாதிரி விநியோகித்திருக்கிறது. வீட்டு வசதி வாரியத்தின் வீடு, மனைகளில் 40 சதவிகிதம், இப்படி வாரி இறைக்கப்பட்டிருக்கின்றன. இத்துடன் ஒப்பிட்டால் மும்பையின் ஆதர்ஷ் வீடு ஒதுக்கீடு ஊழல் ஜுஜுபி.

ஆனால் தான் ஏழையாகப் பிறந்து ஏழையாக வளர்ந்து, ஏழைகளோடே பழகி ஏழைகளுக்காகவே வாழ்ந்துகொண்டிருப்பவன் என்று கூசாமல் பேசுகிறார் கருணாநிதி. சொத்துக் கணக்கு கேட்டால், உடனே தான் ஒன்றும் ஏழையாகப் பிறக்கவில்லை என்றும் அந்த காலத்திலேயே பக்கத்து ஊர் பள்ளியில் சேர்த்து படிக்க வைக்கும் வசதியுடன் பிறந்ததாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்.

கருணாநிதியின் சமீப பேச்சுகள் ஒரு பக்கம் சிரிப்பையும் இன்னொரு பக்கம் எரிச்சலையும் ஏற்படுத்துகின்றன. அவருடைய மொத்த சொத்து மதிப்பு வெறும் ஆறு கோடி ரூபாய்தானாம். அப்படியானால் எப்படி அவர் மகன் அழகிரியின் சொத்து மதிப்பு 13 கோடியாக ஆயிற்று ? ஸ்டாலினின் சொத்து மதிப்பு 13 கோடியாயிற்று ? இருவரும் படித்த காலத்திலிருந்து ஒரு வேலை கூட பார்த்ததில்லை. எங்கேயும் பெரிய சம்பளம் வாங்கியதில்லை.

என்ன தொழில் செய்தார்கள் ? முதலீடுகள் எங்கிருந்து வந்தன? கனிமொழிக்கு சொத்து மதிப்பு எப்படி 8 கோடி 45 லட்சம் ஆயிற்று ? அவர் பார்த்த வேலை, வாங்கிய சம்பளம் என்ன? பாட்சா, அண்ணாமலை, சிவாஜி, எந்திரன் வசனகர்த்தாக்களுக்கு தருவதை விட பல மடங்கு அதிகமாக வசனகர்த்தா கருணாநிதிக்கு 50 லட்சம் சம்பளம் தரும் அறிவாளிகள் இருக்கிறார்கள். கனிமொழியின் கவிதைக்கு 5 லட்சம் யாராவது தருகிறார்களா என்ன ? கருணாநிதியின் பேரன்கள் எல்லாம் கல்லூரியிலிருந்து வந்த உடனே கோடிக் கணக்கான ரூபாய் முதலீட்டில் வரிசையாக சினிமா எடுத்துக் கொண்டே இருக்கிறார்கள்... எப்படி ?

கருணாநிதி எழுதவேண்டிய அடுத்த புத்தகம்: நூறே நாட்களில் கோடீஸ்வரனாவது எப்படி ? தனியே தன்னந்தனியே ஒரு கோடீஸ்வரக் குடும்பத்தை உருவாக்கிய அந்த சாதனை ரகசியத்தை மட்டும் தமிழக மக்களுக்கு அவர் தெரிவித்துவிட்டால், உலகம் அழியும்வரை அவருக்கு நன்றி விஸ்வாசத்தோடு அத்தனை தமிழர்களும் இருப்பார்கள்.

## இந்த வாரப் பூச்செண்டு

சென்னை மாநகராட்சி மேயர் மா.சுப்ரமணியனுக்கும் துணை முதல்வர் மு.க.ஸ்டாலினுக்கும் இ.வா.பூ.

சூளைமேடு மாநகராட்சிப் பள்ளியில் ப்ளஸ் டு புகைப்படப் படிப்பை மூடுவதைக் கைவிடக் கோரி நான் எழுதிய கல்கி கட்டுரையைப் படித்ததும் ஸ்டாலின், மேயருக்கு போன் செய்தார். மேயர் எனக்கு போன் செய்தார். படிப்பு தொடரும் என்று அறிவிக்கப்பட்டது. நேரில் பள்ளிக்குச் சென்று ஆய்வு செய்த மேயர், கம்ப்யூட்டர் பிரிண்ட்டர், கேமரா வாங்கித்தர உத்தரவிட்டார். முன்னாள் இந்நாள் மாணவர்களின் நிரந்தரப் புகைப்படக் காட்சியை எல்லா மாநகராட்சிப் பள்ளிகளிலும் நிறுவவும் உத்தரவிட்டிருக்கிறார். அடுத்த ஆண்டிலிருந்து நகராட்சி நிகழ்ச்சிகளைப் படம் எடுக்கும் வேலையை சூளைமேடு மாணவர்களுக்குக் கொடுக்கவும் நடவடிக்கை எடுப்பதாக என்னிடம் தெரிவித்திருக்கிறார். நன்றி...

## இந்த வாரத் திட்டு

சாகித்ய அகாதமி சென்னைப் பிரிவை இங்கே இயங்கவிடாமல் துரத்தியடிக்கும் தமிழக அரசுக்கு இ.வா.தி.

*கல்கி 11.12.2010*

# ‘டெலி’நோக்குப் பார்வை

**ஸ்**பெக்ட்ரம் புகழ் ஆ.ராசா, அவரது நெருங்கிய உறவினர்கள், நண்பர்கள், அதிகாரிகள் வீடுகளில் இந்த மாதம் சி.பி.ஐ நடத்திய ரெய்ட் நிஜமாகவே உண்மைகளைத் தோண்டுவதற்கு நடந்ததா, அல்லது அடிக்கற மாதிரி அடி, அழுகிற மாதிரி அழுகிறேன் என்ற கண் துடைப்பு ஏற்பாடா என்ற சந்தேகத்தை எதிர்க்கட்சிகள் எழுப்பியிருக்கின்றன.

இரண்டு வருடங்களுக்கு முன்பே செய்திருக்கவேண்டிய ரெய்டுகளை இப்போது செய்தால் என்ன சிக்கும் என்ற நியாயமான கேள்வி எழுகிறது. தமிழில் ராசா எழுதி வைத்த சங்கேதக் குறிப்புகள் உள்ள டயரி சி.பி.ஐயிடம் சிக்கியிருப்பதாக உறுதியாகாத செய்திகள் சொல்கின்றன. அப்படி ஒரு டயரியை இத்தனை காலம் ராசா தன் வீட்டிலேயே வைத்திருந்தது உண்மையென்றால் தன்மீது யாரும் கைவைக்க முடியாது என்று அவருக்கு இருந்த தன்னம்பிக்கையையும் அரசியல் செல்வாக்கையும்தான் அது காட்டும். அல்லது இப்போது ரெய்டில் என்னை மாட்டினால், நீங்களும் அழிவீர்கள் என்று இன்னும் மாட்டாதவர்களை மிரட்டுவதற்காக வேண்டுமென்றே டயரியை சிக்க வைத்திருக்கவேண்டும்.

இந்த ஊழலில் கடைசியில் உண்மை வெளியாகி அயோக்கியர்கள் எல்லாரும் பிடிபட்டு, சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டு தேசத்தின் பணம் மீட்கப்படுமா என்பது இன்னும் கேள்விக் குறிதான். இதுவரை நடந்துள்ளவை கூட உச்ச நீதி மன்றத்தின் உத்தரவுகளினாலேயே நடந்துள்ளன.,

இரு வருடங்களாக ராசா தொடர்பான முறைகேடுகளை பயனீர் ஆங்கில ஏட்டில் நிருபர் கோபிகிருஷ்ணன் விவரமாக எழுதி வந்திருக்கிறார். தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் அவற்றைக் கண்டுகொள்ளவே இல்லை. அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

**டிசம்பர் 11,2008 :**

ராசா 2004ல் சுற்றுச் சூழல் அமைச்சராகப் பொறுப்பேற்ற நான்கு மாதங்கள் கழித்து உருவான நிறுவனம்தான் கிரீன் ஹவுஸ் ப்ரமோட்ட்டர்ஸ். இதன் முதலீடு வெறும் ஒரு லட்சம் ரூபாய்கள். ராசாவின் நண்பர் சாதிக் பாஷா நிர்வாக இயக்குநர். பாஷாவின் மனைவி ,ராசாவின் சகோதரர் கலியபெருமாள், மருமகன் பரமேஷ் குமார், ராசாவின் மூத்த சகோதரர் ராமசந்திரனின் மகன் ராம் கணேஷ், மருமகள், உறவுமுறையினர் பலரும் இதில் இயக்குநர்கள். கம்பெனி தொடங்கி 14 மாதங்களில் அதன் முதலீடு மூன்று கோடி ஆகிவிட்டது. ராசாவின் மனைவி பரமேஸ்வரி பிப்ரவரி 2007ல் இயக்குநராக்கப்பட்டார். நிறுவனம் அமைச்சர் ராசாவின் அதிகாரப்பூர்வமான வீட்டு முகவரியிலிருதே இயங்கி வருகிறது. விதிகளின்படி ராசா இந்தத் தகவல்களை பிரதமரிடம் தெரிவிக்கவே இல்லை. அமைச்சர் சிவராஜ் பட்டீலின் மகன் சம்பந்தப்பட்ட நிறுவனம் அவர் முகவரியில் இயங்கிவருவது பற்றி செய்தி வெளியானதும் ராசா திடுக்கிட்டார். அதையடுத்து ராசாவின் மனைவியின் பங்குகள் ராசாவின் மருமகனாகிய அரசு வழக்கறிஞரின் மனைவி மலர்விழிக்கு மாற்றப்பட்டன.

திடீரென்று நான்கே வருடங்களில் தி.நகர் கனரா வங்கிக் கிளை கணக்கில் இந்தக் கம்பெனிக்கு 150 கோடி ரூபாய் வரவு மத்திய கிழக்கு நாடுகள், ஹாங்காங், சிங்கப்பூர் நாடுகளிலிருந்து வந்தது. கம்பெனி சிங்கப்பூரிலும் கிளை தொடங்கியது.

கிரீன்ஹவுஸ் கம்பெனி தொடங்கி சில மாதங்களிலேயே இன்னொரு கம்பெனி தொடங்கப்பட்டது. இதிலும் ராசாவின் மனைவியும் இதர உறவினர்களும் முக்கியஸ்தர்களும் இயக்குநர்கள். இந்த முறையும் விதிப்படி பிரதமருக்கு ராசா தகவல் தெரிவிக்கவில்லை.இந்தக் கம்பெனியும் நில பேர வர்த்தகத்தில் ஈடுபட்டது. முதல் வருடத்திலேயே இதில் 755 கோடி ரூபாய்கள் புரண்டன!

**டிசம்பர் 16,2008:**

அந்தக் கம்பெனியின் பெயர் ஈக்வஸ் எஸ்டேட்ஸ். என்ன தயாரித்தார்கள், என்ன விற்றார்கள், என்ன சேவை வழங்கினார்கள் எங்கிருந்து இவ்வளவு பணம் வந்தது என்ற விவரங்கள் பதிவாளருக்கு 23 ஏசி படிவத்தில் சட்டப்படி தெரிவிக்கப் படவில்லை.

அலைக்கற்றை 2ஜி லைசன்சை சர்ச்சைகுரிய விதத்தில் பெற்ற

ஸ்வான் டெலிகாம், கிரீன்ஹவுஸ் கம்பெனியில் ஆயிரம் கோடி ரூபாய் விலையில் 49 சதவிகிதப் பங்குகளை வாங்கப்போவதாகக் கூறப்படுகிறது. இது பற்றி பயனீர் நிருபர் போனில் கேட்டபோது யார் முதலீடு செய்யப் போகிறார்கள் என்று தெரிவிக்க முடியாது என்று சாதிக் பாஷா, கம்பெனி ஆலோசகர் கெவின்,ஸ்வான் டெலிகாம் கம்பெனியின் நிர்வாக இயக்குநர் ஷாஹித் பல்வா மூவரும் மறுத்துவிட்டனர். ஸ்வான் கம்பெனி அக்டோபரில் 13 வட்டங்களுக்கான லைசன்ஸை 1537 கோடி ரூபாய்களுக்கு வாங்கிய சில வாரங்களிலேயே தன் 45 சதவிகிதப் பங்குகளை ஐக்கிய அரபுக் குடியரசு டெலிகாம் கம்பெனியான எடிசலாட்டுக்கு 4500 கோடி ரூபாய்க்கு விற்றிருக்கிறது.

இன்னொரு நில பேர கம்பெனியான யூனிடெக்கும் 22 வட்டங்களுக்கான லைசன்சை 1651 கோடிக்கு வாங்கிய சில வாரங்களில் தன் கம்பெனியின் 60 சத விகித பங்குகளை நார்வே கம்பெனியான டெலினாருக்கு 6120 கோடிக்கு விற்றுவிட்டது. டெலினார் பாகிஸ்தானிலும் வங்க தேசத்திலும் இயங்கும் கம்பெனி. ராசா டெலிகாம் மந்திரியான இரு வருடங்களில் பல நில பேர கம்பெனிகள் டெலிகாம் துறைக்கு வரத்தொடங்கின. விதிகள் பல மீறப்பட்டன. இது பற்றி பிரதமரிடமே பழைய டெலிகாம் கம்பெனிகள் புகார் செய்தன. டெலிகாம் துறையில் ஏகபோகத்தை நீக்கவே தான் இப்படி செய்வதாக ராசா கூறினார். தனக்கும் கிரீன்ஹவுஸ் கம்பெனிக்கும் தொடர்பில்லை என்று மறுத்தார். தன் மனைவி இயக்குநர்(சட்டம்) என்ற பொறுப்பையே வகித்ததாகத் தெரிவித்தார். அவருக்கு கம்பெனியில் பங்கு இல்லை என்று சாதிக் பாஷா கூறினார்.

**டிசம்பர் 18,2008:**

ஸ்பெக்ட்ரம் லைசன்ஸ் முறைகேட்டில் அமைச்சர் ராசாவின் ராஜினாமாகோரிப் பெரும் சர்ச்சை உள்ளது. இப்போது அவர் அரசின் பி.எஸ்.என்.எல் கம்பெனிக்கு சொந்தமான அலைக்கற்றையை தனக்கு வேண்டிய ஸ்வான் கம்பெனிக்கு ஏறத்தாழ இலவசமாகத் தர வழி செய்துள்ளார். வட்டங்களுக்கிடையிலான உலாவும் வசதிக்கான ஒப்பந்தம் என்ற பெயரில் ஸ்வானுக்கு பி.எச்.என். எல்லின் சேவை வசதி தரப்பட்டுள்ளது. செப்டம்பர் 13 அன்று போடப்பட்ட இந்த ஒப்ந்தத்தில் ஸ்வானுக்கு எந்த கட்டணமும் விதிக்கப்படவில்லை. பி.எஸ்.என் எல் தலைவர் கோயல், கட்டணம் பின்னர் பார்த்துக் கொள்ளப்படும் என்றார். இந்த ஒப்பந்தத்தைக் காட்டித்தான் ஸ்வான் தன் பங்குகளை எடிசலாட்டுக்கு விற்றிருக்கிறது. இந்த ஒப்பந்தத்தை எதிர்த்த பி.எஸ்.என்.எல் அதிகாரிகள் குஷ்வாஹாவும் ஜாவும் இடம் மாற்றப்பட்டுள்ளனர்.

## ஜனவரி 12,2009

ராசா சுற்றுச்சூழல் அமைச்சராக இருந்தபோது அவரது உறவினர் ஸ்ரீதர் அதே அமைச்சகத்தில் டெபுடி டைரக்டர் பதவிக்கு நியமிக்கப்பட்டார். கோவை ஷெல்ட்டர்ஸ் கம்பெனியில் 15 சத பங்குகளுடன் தான் இயக்குநராக இருப்பதை அவரும் ராசாவும் பிரதமரிடம் மறைத்துவிட்டனர். ஜனவரி 2007ல் தொடங்கிய இந்த கம்பெனியின் தலைவர் ராசாவின் பெரம்பலூர் நண்பரான டாக்டர் சி.கிருஷ்ணமூர்த்தி.

தற்போது திருவள்ளுவர் பல்கலைக்கழக துணை வேந்தராக இருக்கும் கண்ணனிடம் பி.எச்.டி செய்த ஸ்ரீதர் அவரிடம் ஐந்தாண்டுகள் பணி செய்ததாக பொய் சான்றிதழ் கொடுத்துஅரசுப் பதவியைப் பெற்றுள்ளார். ராசாவின் மருமகள்கள் ஆனந்தபுவனேஸ்வரி, சந்தானலஷ்மி ஆகியோருக்கும் கோவை கம்பெனியில் தலா 15 சத விகித பங்கு உள்ளது. கம்பெனியின் தலைவர் கிருஷ்ணமூர்த்தியின் கட்டிடத்தில்தான் ராசா வக்கீலாக இருந்தபோது ஆபீஸ் வைத்திருந்தார். இந்த கம்பெனிகள் எல்லாம் ராசா அமைச்சரானதும் தொடங்கப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

## ஜனவரி 29,2009:

வெறும் ஒரு லட்ச ரூபாய் மட்டுமே முதலீட்டில் நான்கு மாதங்களுக்கு முன்பு தொடங்கப்பட்ட ஜெனெக்ஸ் எக்சிம் வென்ச்சர்ஸ் என்ற தமிழ்நாட்டு கம்பெனிக்கு ஸ்பெக்ட்ரம் லைசன்ஸ் உள்ள ஸ்வான் கம்பெனியின் 380 கோடி ரூபாய் பங்குகள் தரப்பட்டுள்ளன.

கீழக்கரையை சேர்ந்தவர்களான முகமது ஹாசன், அகமது ஷகிர் இதன் இயக்குநர்கள் ஸ்வான் போர்டில் எக்சிம் சார்பாக இருப்பவர் சையத் சலாவுதின். அகமத் சையத் சலாவுதின் துபாயில் இருக்கும் தமிழர் சையத் முகமது சலாவுதீனின் மகன். சையதின் ஈ.டி.ஏ அஸ்கான் ஸ்டார் குழுமம் தமிழ்நாட்டில் பல நில பேர கம்பெனிகளை தி.மு.க ஆட்சிக்கு வந்தபின்னர், ராசா சுற்றுச்சூழல் அமைச்சரானதும் தொடங்கியது. தமிழ்நாட்டில் 3750 கோடி ரூபாய் மதிப்பில் காஞ்சிபுரம் அருகே 500 ஏக்கரில் ஐ.டி மண்டலம் தொடங்க அரசுடன் ஈ.டி.ஏ மே 2007ல் ஒப்பந்தம் போட்டது. இந்த நிகழ்ச்சியில் முதல்வர் கருணாநிதி கலந்துகொண்டார். இவ்வளவு பெரிய கம்பெனி ஏன் வெறும் ஒரு லட்ச ரூபாய் முதலீடு உள்ள ஜெனெக்சைக் கொண்டு ஸ்வான் நிர்வாகத்தில் நுழையவேண்டுமென்பது மர்மமாக இருக்கிறது. ஸ்வானின் 10 சத பங்கை வாங்க ஜெனெக்சுக்கு எங்கிருந்து வருவாய் என்று கேட்டால் பதில் தர மறுத்துவிட்டார்கள். முன்னதாக கிரீன்ஹவுஸ்

கம்பெனியில் பங்கு வாங்க ஸ்வான் முற்பட்டதை பயனீர் அம்பலப்படுத்தியதும் அது கைவிடப்பட்டது.

## மார்ச் 5 2009

அமைச்சர் ராசாவின் நண்பர்களின் கம்பெனிக்கு பி.எஸ்.என். எல் கம்பெனியின் வைமேக்ஸ் சேவைகள் குறைந்த விலைக்குத் தரப்பட்டுள்ளன. வெல்காம் கம்யூனிகேஷன்ஸ் என்ற கம்பெனிக்கு வருவாயில் 75 சதவிகிதம்; பி.எஸ்.என்.எல்லுக்கு 25 சதவிகிதம் என்பது ஒப்பந்தம். செல்போனுக்கும் கணினிகளுக்கும் வயர்லெஸ் இண்ட்டர்நெட் சேவை தருவதே வைமாக்ஸ். நவம்பர் 2008ல் விண்ணப்பித்த வெல்காம் கம்பெனிக்கு 2006ல் 10 லட்சம் முதலீடு. இது 2008ல் 10 கோடி ஆனது. ராசாவின் பெரம்பலூர் நண்பர் செல்வராஜு என்பவரிடம் 15 சத பங்குகள். இவர் இன்னொரு நண்பர் கிருஷ்ணமூர்த்திக்கு சொந்தமான கல்குவாரியில் இருந்து கல் சப்ளை செய்யும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்.டத்தோ விஜயகுமார் ரத்னவேலு, குணசேகரன் தியாகராஜன் என்ற மலேசியத் தமிழர்கள் இயக்குநர்கள்.

மேலே உள்ள செய்திகள் எல்லாம் 2008-2009ல் வெளியானவை. அப்போது ரெய்ட் செய்யாமல் இப்போது செய்தால் என்ன சிக்கும் என்பது சி.பி.ஐக்கே வெளிச்சம்.

நீரா ராடியா டேப்புகளில் இருந்து துல்லியமாகத் தெரியவரும் உண்மை தனக்கு அமைச்சர் பதவி கிடைக்காவிட்டாலும்,. ராசாவுக்கு டெலிகாம் அமைச்சர் பொறுப்பை பெற்றுத் தந்தே தீரவேண்டுமென்று கனிமொழி கடுமையாகப் பாடுபட்டிருக்கிறார். தற்கொலை செய்வேன் என்றே மிரட்டியதாக ஒரு டேப்பில் சொல்லப்பட்டிருக்கிறது.

நம் அரசியல்வாதிகளுக்கு தொலைநோக்கு பார்வை கிடையாது என்று யார் சொன்னது ? அவர்களுக்கு உண்டு. சி.பி.ஐக்கும் நமக்கும்தான் அதெல்லாம் கிடையாது.

## இந்த வாரத் திட்டு

இலங்கையில் தமிழ் தேசிய கீதத்தை நீக்கியதற்காக ராஜபக்ஷே அரசுக்கு இ.வா.தி.

## இந்த வாரத் தகவல்

வேண்டியவர்களுக்கு கோடிக்கணக்கான ரூபாய் வீடுகளை ஒதுக்கிய தி.மு.க அரசு ஒலிம்பிக்கில் வெண்கலப்பதக்கமும் அர்ஜுனா விருதும் பெற்ற தமிழக குத்துச்சண்டை வீரர் தேவராஜனை பல மாதம் அலையவிட்டு 1998ல் ஒதுக்கிய வீடு - உதிரும் நிலையில் வாரிய வீடு

*கல்கி 18.12.2010*

# 2010ன் நாயகன் விருதும் காமெடியன் விருதும்

கடந்து முடியும் 2010ம் ஆண்டில் உலகத்தையே கலக்கிய,கலக்கிக் கொண்டிருக்கிற ஒரே மனிதர் என்றால் அது ஜூலியன் அசாஞ்சேதான். எனவே அவருக்கே 2010 நாயகன் விருது.

ஜூலியன் யார் ? அரசாங்கங்களின் அராஜகங்களை அம்பலமாக்கத் துடிக்கும் ஒவ்வொரு சமூகப் போராளிக்கும் 39 வயதாகும் ஜூலியன் ஒரு ரோல் மாடல். அவர் 2006ல் தொடங்கிய 'விக்கிலீக்ஸ் இணையதளம் நான்காண்டுகளாக அம்பலப்படுத்திவரும் உலக அரசு ரகசியங்கள் எல்லா நாட்டு அரசாங்கங்களையும் தர்மசங்கடத்தில் ஆழ்த்தி வருகின்றன. மக்களுக்கு நியாயமான விஷயங்கள் நடக்க வேண்டுமானால், ஜனநாயகம் தழைக்க வேண்டும். அதற்கான அடிப்படைத் தேவை ஒளிவு மறைவற்ற பகிரங்கமான நிர்வாகம். அதை செய்யத் தவறும் அரசுகள்தான் ஜனநாயகத்துக்கும் மக்களுக்கும் எதிரிகள். எனவே அவற்றை அம்பலப்படுத்த வேண்டும். சுருக்கமாக இதுதான் ஜூலியனின் கொள்கை.

ஜூலியன் முதன்மை ஆசிரியர் பொறுப்பில் இருக்கும் விக்கிலீக்ஸ் இதுவரை அம்பலப்படுத்திய விஷயங்கள் பல. சோமாலியாவில் ஒரு லோக்கல் தலைவர் ஆள் தூக்கி வேலைகளுக்காக அடியாட்களை அனுப்பக் கேட்டு எழுதிய கடிதத்தை விக்கிலீக்ஸ் வெளியிட்டது. கென்யாவில் நடக்கும் அரசு ஊழல்கள் அடுத்த லீக்.

ஸ்விட்சர்லாந்து, ஐஸ்லாந்து நாடுகளின் முக்கிய வங்கிகளில் நடந்த ஊழல்கள் வெளிப்படுத்தப்பட்டன. நெதர்லாந்திலிருந்து டிரஃபிகுரா என்ற கம்பெனி விஷக் கழிவுகளைக் கப்பலில் ஏற்றி எந்த நாடும் அதை

அனுமதிக்காத நிலையில் ஆப்பிரிக்க நாடான ஐவரியில் அபிட்ஜான் துறைமுகத்தில் கொண்டு இறக்கியது. அந்த நகரின் பல பகுதிகளில் இந்தக் கழிவுகள் கொட்டப்பட்டன. இவற்றால் பாதிக்கப்பட்டு 30 ஆயிரம் பேருக்கு கடும் உடல் நலக் கோளாறுகள் ஏற்பட்டன. ஒரு லட்சம் பேருக்கு மருத்துவ சிகிச்சை தேவைப்பட்டது. தான் பொறுப்பில்லை என்று சொன்ன கம்பெனி கடைசியில் நஷ்ட ஈடாக 19 கோடி டாலர்கள் கொடுத்தது. கழிவுகளின் விஷத்தன்மை பற்றி ஆராய குழு நியமித்தது. மிண்ட்டன் அறிக்கை எனப்படும் இந்தக் குழுவின் அறிக்கையை விக்கிலீக்ஸ் அமபலப்படுத்தியது.

சர்ச் ஆஃப் சயண்டாலஜி என்ற ஒரு கிறித்துவ அமைப்பு ரகசிய இயக்கமாகவும் பகிரங்க மிஷனரியாகவும் இயங்கிய அமைப்பாகும். வருடத்துக்கு 50 கோடி டாலர் சம்பாதிக்கும் இந்த அமைப்புக்கு போதைப் பொருள் உட்பட நிறைய வணிகங்கள் உள்ளன. உறுப்பினர்கள் கடத்தல், மர்ம மரணம் எல்லாம் நடந்தன. அமெரிக்க அரசின் பல துறைகளில் இதன் உறுப்பினர்கள் ஊடுருவியிருப்பதாக அமெரிக்க அரசே நடவடிக்கை எடுத்தது. இந்த அமைப்பின் ரகசிய ஆவணங்களை விக்கி லீக்ஸ் வெளியிட்டது.

ஜூலியன் அதிரடியாக வெளியிட்ட ஆவணங்களில் ஆப்கானிஸ்தான், இராக் யுத்தங்களில் அமெரிக்க ராணுவத்தின் நடவடிக்கைகள் பற்றிய ரகசியக் குறிப்புகள் முக்கியமானவை. இராக்கில் பாக்தாத் நகரில் ராய்ட்டர் செய்தி நிறுவன நிருபர்கள் இருவர் அமெரிக்க ராணுவத்தின் வான் வழி தாக்குதலில் கொல்லப்பட்டதன் ராணுவ வீடியோவை ஜூலியன் வெளியிட்டது பெரும் அதிர்ச்சியை அமெரிக்காவுக்குக் கொடுத்தது. கௌண்டனாமா பேயிலிருக்கும் அமெரிக்க ராணுவ சித்ரவதை முகாமின் ஆவனங்களையும் ஜூலியன் அம்பலப்படுத்தினார்.

இந்த வருடம் ஜூலியனும் விக்கிலீக்சும் நடத்திய அதிரடித் தாக்குதல் உலகம் முழுவதும் இருக்கும் அமெரிக்க தூதரகங்கள் அந்தந்த நாடுகள் பற்றி தங்கள் அமெரிக்க மேலிடத்துக்கு அனுப்பி வந்த ரகசிய செய்திகளை வெளியிட்டதாகும். அமெரிக்கா உள்ளொன்று வைத்து புறமொன்று பேசிவருவதை இந்த ஆவணங்கள் நன்றாகவே அம்பலப்படுத்திவிட்டன. இந்தியா, பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், இரான், இராக் எல்லாரைப் பற்றியும் அமெரிக்கா வெளியில் சொல்வதற்கும் ரகசியமாக வைத்திருக்கும் கருத்துக்கும் சம்பந்தமே இல்லை.

ஒவ்வொரு நாட்டு உள் அரசியலிலும் அமெரிக்கா தலையிடுவதை ஆவணங்கள் காட்டிக் கொடுத்துள்ளன. இந்தியாவில் மூன்றாவது அணி ஆட்சிக்கு வருவது ஆபத்து;

பி.ஜே.பி, காங்கிரஸ் இருவருமே நமக்குச் சாதகமானவர்கள் என்று டெல்லியிலிருந்து அமெரிக்கத் தூதர் தேர்தல் சமயத்தில் கூறியிருக்கிறார். ராகுல் காந்தி, சோனியா, பிரகாஷ் காரத் என்று பலரைப் பற்றியும் கருத்துகளும் சொல்லியிருக்கிறார்.

ஜூலியனும் விக்கிலீக்கும் பெரும் ஸ்தாபனங்கள் அல்ல. மொத்தம் ஐந்து பேர்தான் இதில் முழு நேர ஊழியர்கள். எண்ணற்ற ஆதரவாளர்கள். விக்கிலீக்சின் இணைய தளத்தை ஒரு நாட்டிலிருந்து செயல்படவிடாமல் தடுத்தால் இன்னொரு நாட்டில் இருந்து உடனடியாக இயங்கக் கூடிய அளவுக்குத் தயார் நிலையில் எப்போதும் விக்கிலீக்ஸ் இருந்து வருகிறது.

ஜூலியனையும் விக்கிலீக்சையும் முடக்க அமெரிக்கா உள்ளிட்ட பல பெரிய நாடுகள் கடும் முயற்சி செய்கின்றன. இணைய தளத்துக்கான சர்வரை ரத்து செய்வது, யாரும் விக்கிலீக்சுக்கு இணைய வழியே பணம் நன்கொடை செலுத்த விடாமல் தடுப்பது என்று எடுத்த நடவடிக்கைகள் எதுவும் பயன் தரவில்லை.

கடைசியாக ஜூலியனை ஸ்வீடனில் செக்ஸ் விவகாரத்தில் சிக்க வைத்து லண்டனில் கைது செய்தார்கள். ஏதோ பயங்கரவாதியைத் தேடுவது போல உடனே ஜூலியன் வாண்ட்டட் பட்டியலில் சேர்க்கப்பட்டு இண்ட்டர்போல் மூலம் எல்லா நாடுகளும் உஷார்படுத்தப்பட்டன. ஆனால் அவரைத் தேடிக் கண்டுபிடிக்க முடியவில்லை.ஜூலியன் எப்போதும் ஒரு இடத்திலேயே தங்காமல் ஊர் ஊராக நாடு நாடாக மாறிக் கொண்டே இருப்பவர். உலக அரசுகளை அம்பலப்படுத்தும் ஆவணங்களைத் திரட்டித் தொகுத்து வெளிப்படுத்துவதென்றால் சும்மாவா ? பல முறை விமான நிலையங்களிலேயே நாளைக் கழித்திருக்கிறார். கடைசியில் ஜூலியன் தானாகவே லண்டன் போலீசில் சரணடைந்தார்.

ஸ்வீடனில் ஒரு கருத்தரங்கிற்காக சென்றிருந்தபோது ஜூலியன் அண்ணா, சோபியா என்ற இரு பெண்களுடன் செக்ஸ் உறவு கொண்டார். அண்ணா வீட்டில்தான் ஜூலியன் தங்கி இருந்தார். சோபியா தானாகவே அவரைத் தேடி வந்து தன் வீட்டுக்கு அழைத்துப் போனவர். எல்லாம் இரு தரப்பும் விரும்பி நடந்தவைதான். ஆனால் ஜூலியன் ஆணுறையைப் பயன்படுத்தவில்லை. ஸ்வீடன் நாட்டு சட்டப்படி பெண் ஆணுறையுடன் தான் உறவு கொள்வேன் என்று சொல்லும்போது அதன்படி ஆண் நடந்துகொள்ளவில்லையென்றால் அது பாலியல் வன்முறைக் குற்றமாகும். இதற்கு நான்காண்டு சிறை தண்டனை வரை உண்டு.

ஜூலியனுடன் உறவு வைத்த அண்ணா ஏற்கனவே ஸ்வீடன்

தூதரக அலுவலராககியூபா நாட்டில் இருந்த போது, காஸ்ட்ரோவுக்கு எதிராக அமெரிக்க சி.ஐ.ஏ பண உதவியுடன் வேலை செய்த தன்னார்வ அமைப்புடன் தொடர்பில் இருந்தவர். அதற்காக வெளியேற்றப்பட்டவர். தான் விரும்பியே ஜூலியனுடன் உறவு கொண்டதை வெளிப்படுத்தும் தன் டிவிட்டர் பதிவுகளையெல்லாம் அண்ணா அழித்துவிட்டார் எனவே அமெரிக்கா திட்டமிட்டுத்தான் அவரை ஜூலீயனின் படுக்கையறைக்கு அனுப்பியிருக்கிறது என்று கருதப்படுகிறது. ஜூலியன் விடை பெற்றுச் சென்று சில நாட்கள் கழித்துத்தான் இரு பெண்களும் சந்தித்துப் பேசி போலீசில் புகார் தந்தார்கள்.

ஜூலியனை ஸ்வீடனுக்கு அனுப்பக்கூடாது. அப்படி அனுப்பினாலும் அங்கிருந்து அமெரிக்காவிடம் ஒப்படைக்கக்கூடாது என்று அவரது வழக்கறிஞர்கள் இப்போது போராடி வருகிறார்கள். இப்போது ஜாமீனில் வெளியே வந்திருக்கும் ஜூலியன் உள்ளே இருந்தபோது கூட விக்கிலீக்சைத் தடை செய்ய முடியவில்லை. அடுத்தடுத்து அமெரிக்க அரசு ஆவணங்களை வெளியிட்டபடிதான் இருந்தது. ஜூலியனோ, விக்கிலீக்சோ, அவர்களுடைய ஆதரவாளர்களோ எதற்கும் அசருவதாக இல்லை. ஜூலியனுக்கு ஆதரவாக ஐரோப்பா முழுவதும் பேரணிகள் நடக்கின்றன. பிரேசில், ரஷ்ய நாட்டு அதிபர்கள் ஆதரவுக் குரல் கொடுத்திருக்கிறார்கள்.

இத்தனை பரபரப்பை ஏற்படுத்தியிருக்கும் ஜூலியன் சாதாரண குடும்பத்திலிருந்து வந்தவர். ஆஸ்திரேலியாவின் குயினிஸ்லாந்து மாநிலத்தில் பிறந்த ஜூலியனுக்கு அப்பா யாரென்று தெரியாது. அம்மா கிறிஸ்டீன் ஒரு பொம்மலாட்டக் கலைஞர். ஜூலிக்கு ஒரு வயதானபோது கிறிஸ்டி மறுமணம் செய்தார். ஒரு தம்பி பிறந்தான். இந்தத் திருமணமும் முறிந்தது. தன் இரு குழந்தைகளை தன்னிடமிருந்து முன்னாள் கணவர்கள் பிரித்துவிடக் கூடாது என்பதற்காக கிறிஸ்டி ஊர் ஊராக ஓடி ரகசியமாக வாழ்ந்தார். தலைமறைவு வாழ்க்கை அப்போதே ஜூலிக்குப் பழகிவிட்டது. ஜூலியின் திருமணமும் முறிந்துவிட்டது. ஒரு மகன் இருக்கிறான்.

தன் 16வது வயதிலேயே கம்ப்யூட்டர் நிபுணராக திகழ்ந்தார் ஜூலியன். எந்த இணைய தளத்தின் ரகசிய பூட்டையும் உடைத்துத் திறந்து உள்ளே செல்லும் ஹேக்கிங் கலையில் அவர் ஒரு மேதையானார். ஹேக்கிங் பற்றி இரு நூல்கள் எழுதியிருக்கிறார். ஹேக் செய்பவர் எந்தக் கணிணியிலும் நுழையலாம். ஆனால் அதைப் பாழ்படுத்தக் கூடாது. தகவல்களை சிதைக்கக்கூடாது. பார்த்துவிட்டு வந்துவிட வேண்டும் என்பது ஜூலியின் அறக் கோட்பாடு. கணிதம், இயற்பியல் எல்லாம் பல்கலைக்கழகங்களில்

படித்தபோதும் அவர் டிகிரி முடிக்கவில்லை. விக்கிலீக்ஸ் தொடங்கியபின்னர் ஜூலியனுக்கு உலகம் முழுவதும் பல விருதுகள் வந்து குவிந்தன.

பெரும் யானையைக் கூட சிறு அங்குசம் ஆட்டி வைக்க முடியும் என்பது போல உலக அரசுகளை ஆட்டி வைத்திருக்கும் விக்கி லீக்சின் ஜூலியன்தான் 2010ன் உலக நாயகன்.

**2010ன் காமெடியன் விருது:**

இந்த வருடத்தின் சிறந்த காமெடி நடிகர், காமெடி வசனகர்த்தா, பஞ்ச் டயலாக் புலி, எல்லா விருதுகளும் மானமிகு (மாண்புமிகு வரும் போகும் என்று வீரமணி சொல்லியிருக்கிறார்!) கலைஞர் கருணாநிதி அவர்களுக்கே வழங்கப்படுகின்றன. "நான் எப்போதும் கம்யூனிஸ்ட்தான்", "நான் ஏழையாகப் பிறந்து ஏழைகளோடு வளர்ந்து, ஏழைகளுக்காக வாழ்பவன்", "ராசா தலித் என்பதால் ஊழல் குற்றம் சுமத்துகிறார்கள்" "அவமரியாதைகளைத் தாங்கிக் கொள்ளும் சுயமரியாதைக்காரன்" , " இரு பெண்கள் ( நீரா ராடியா, பூங்கோதை) பேசிக் கொள்கிறார்கள். அதைப் பற்றி உங்களுக்கென்ன?" "ராசாவுக்கு டெலிகாம் வேண்டுமென்று யாரும் யாரிடமும் கேட்கவில்லை" போன்ற எண்ணற்ற மறக்கமுடியாத நகைச்சுவை வசனங்களை 2010ல் உதிர்த்திருக்கும் கருணாநிதி, 2011ல் நவரச நாயகனாகப் பரிணமிக்கும் வாய்ப்பு பலமாக இருக்கிறது என்பதை நேயர்களுக்கு சொல்லிக் கொள்கிறேன்.

**நகைச்சுவை ஆறுதல் விருது:**

காங்கிரஸ் ஒருபோதும் ஊழலை சகித்துக் கொள்ளாது என்று அறிவித்திருப்பதற்காக மன்மோகன்சிங்குக்கும் சோனியாவுக்கும் பகிர்ந்து வழங்கப்படுகிறது.

**இ.வா.பூச்செண்டு:**

தாமதமாகவேனும் சாகித்ய அகாதமி விருது தரப்பட்டிருக்கும் எழுத்தாளர் நாஞ்சில் நாடனுக்கு இ.வா.பூ.

**இ.வா.திட்டு:**

வெங்காயம் முதல் அடிப்படைப் பொருட்கள் எல்லாம் விலை உயர்ந்திருப்பதைப் பொருட்படுத்தாமல் இருக்கும் மத்திய மாநில அரசுகளுக்கு இ.வா.தி.

*கல்கி 25.12.2010*

# வந்தார்..கண்டார்..வென்றார் ?

**ரா**குல் காந்தி சென்ற வாரம் சென்னையில் சில அறிவுஜீவிகளை சந்தித்து உரையாடியபோது ஒரு பத்திரிகையாளர் இடைமறித்து 'அரசாங்கமே மது விற்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்? விற்கலாமா கூடாதா ?' என்று கேட்டதற்கு, கூடாது என்று ராகுல் காந்தி பதில் சொன்னதாக, ஜூனியர் விகடனிலும் தினமணியிலும் செய்தி வந்திருக்கிறது. பெயர் குறிப்பிடப்படாத அந்த பத்திரிகையாளர் நான்தான்.

சென்னைக்கு வரும்போது ராகுல் காந்தியை நான் சந்திக்க வேண்டும் என்று என் சிநேகிதி ஜோதிமணி விரும்பினார். அழைத்தால் நான் எல்லா முக்கிய அரசியல் தலைவர்களையும் நிச்சயம் சந்திப்பேன். நேரில் காணும் அவர்களின் நடை உடை பாவனை, மொழி தொனி ஆகியவற்றிலிருந்து அவர்களைப் பற்றி ஓரளவு எடை போட முடியும் என்பதால் அழைத்தால் நான் தயங்குவதில்லை.

அரசியலுக்கு அப்பாற்பட்டு, கட்சி சார்புகளுக்கு அப்பாற்பட்டு தமிழகத்தில் இயங்கக்கூடிய சிந்தனையாளர்கள், படைப்பாளிகள் ஆகியோரை ராகுல் சந்திக்க விரும்புகிறார் என்று ஜோதி தெரிவித்தார். 'இந்திரா' என்ற பெயரில் சிறுகதைகள் எழுதிவரும் ஜோதியை பல வருடங்களாக எனக்குப் பழக்கம். ஜோதி கல்லூரிப் படிப்பை முடித்து எழுத்தாளராகத் தொடங்கிய சமயத்தில் பெண்கள், குழந்தைகள் பிரச்சினைகள் பற்றி இளம் எழுத்தாளர்களை அக்கறைப்படுத்துவதற்கான பயிலரங்கம் ஒன்றை மீனா சாமிநாதனின் அமைப்புக்காக நானும் நண்பர் 'மா'வும் நடத்தினோம். அதில் பங்கேற்றவர்களில் எழுத்தாளர் பாஸ்கர் சக்தியும் ஜோதியும் எங்கள் நெருங்கிய சிநேகிதர்களாகிவிட்டார்கள்.

சமூகத்துக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்ற ஆழமான அக்கறை உடைய ஜோதி, படிப்பை முடித்ததுமே முழு நேர அரசியலில் இறங்கிவிட்டார். கரூர் அருகே தன் கிராமப் பஞ் சாயத்து தேர்தலில் போட்டியிட்டு தமிழ் மாநில காங்கிரஸ் சார்பில் கவுன்சிலரானார். அங்கே பல வருடங்களாக தலித் குடியிருப்பு பகுதிகளுக்குக் குடிநீர் கிடைக்காமல் இருந்த பிரச்சினையைப் போராடித் தீர்த்தார். த.மா,க காங்கிரசுடன் இணைந்ததும், இளைஞர் காங்கிரசில் பொறுப்புகள் பெற்று, இப்போது அனைத்திந்திய இளைஞர் காங்கிரசின் பொதுச் செயலாளர்களில் ஒருவராக இருக்கிறார். அரசியலுக்கு அப்பாற்பட்டு ஜோதியின் நண்பர் வட்டம் விரிவானது.

ஜோதியும் ராகுல் காந்தியின் உள்வட்டத்தில் இருக்கும் இன்னொருவரும் என்னை சந்தித்து யாரையெல்லாம் அழைக்கலாம் என்று யோசனை கேட்டார்கள். நாற்பது வயதுக்குக் கீழே உள்ள எழுத்தாளர்கள், படைப்பாளிகள், கலைஞர்கள், ஓவியர்கள், தொண்டு நிறுவன ஆர்வலர்கள் ஆகியோரை மட்டும் அழைக்கலாமென்றேன். பின்னர் வயது வரம்பைக் கைவிட்டுவிட்டு ஒரு பட்டியல் தயாரித்தார்கள்.ஜெயமோகன், எஸ்.ராமகிருஷ்ணன், சாரு நிவேதிதா, நாஞ்சில் நாடன், மனுஷ்யபுத்திரன், காலச்சுவடு கண்ணன், பாலா, சிம்புதேவன், வசந்தபாலன், பாண்டிராஜ், சுசீந்திரன், கரு.பழனியப்பன், ராதாமோகன், நடிகர் நாசர், ஓவியர்கள் மருது, விஸ்வம், நம்மாழ்வார், டாக்டர் ஜீவானந்தம், வசந்தி தேவி, ஆ.இரா. வெங்கடாசலபதி, ஹென்ரி டிபானே என்று என் பரிந்துரை நீண்டது. ஜோதியைப் போலவே வேறு கட்சிப்பொறுப்பாளர்களும் பட்டியல்கள் தயாரித்துக் கொண்டிருந்ததாகக் கேள்விப்பட்டேன்.

சந்திப்பு தினத்தன்று ஓட்டல் கன்னிமாராவில் கடும் சோதனைகளைத் தாண்டி அரங்கத்தில் நுழைந்தபோது, என் பட்டியலில் மிகச் சிலரே அங்கிருந்தனர். தமிழ்நாட்டின் அத்தனை முக்கியமான தொண்டு நிறுவனப் பிரதிநிதிகளும் அங்கிருந்தது ஆறுதலாக இருந்தது. எதிர்பாராதவர்களாக சினிமா துறையிலிருந்து தயாரிப்பாளர்கள் பிரதிநிதிகள் நடிக நடிகையர் சுமார் 30 பேர் வந்திருந்தனர். போலி ஆர்வலர்கள் சிலரும் வந்திருந்தார்கள். இறுதிப் பட்டியல் பலரும் சேர்ந்து குழப்பிய கதம்பம் என்று பின்னர் ஜோதி தெரிவித்தார்.

எல்லா வி.ஐ.பிகளையும் போலவே ராகுல் காந்தியும் ஒரு மணி நேரம் தாமதமாகக் கூட்டத்துக்கு வந்தார். இது சம்பிரதாயமான கூட்டம் அல்ல என்று கூறிவிட்டு, தான் உரை எதுவும் நிகழ்த்தாமல், எல்லாரும் கேள்விகள் கேட்கலாம் என்றார். அரசியலுக்கு அப்பாற்பட்ட கூட்டம் என்பதால், அரசியலை தவிர்த்துவிடச்

சொன்னார். எனவே நான் ஸ்பெக்ட்ரம் பற்றிக் கேட்கவில்லை. பெரும்பாலான நேரம் குடிபோதைப் பிரச்சினை, விவசாய விளை நிலப் பிரச்சினை, சினிமா துறை தொடர்பான காப்பிரைட் பிரச்சினை, அரசியலுக்குள் நல்லவர்கள் வருவதில் சிக்கல்கள், தன்பால் உறவு கொள்வோர் மீதான அடக்குமுறை சட்டப் பிரச்சினை பற்றியெல்லாம் போய்விட்டது. கடைசியில் இலங்கைத் தமிழர் இன்னல் குறித்துப் பேசும்போது நேரம் முடிந்துவிட்டது.

ராகுலின் கருத்துகளைச் சுருக்கமாகத் தொகுத்துச் சொல்வதென்றால் இவைதான்: குடிப்பழக்கம் என்பது ஒழுக்கப் பிரச்சினை அல்ல. கடுமையான உடல் நலப் பிரச்சினை. இளைஞர்கள் குடிப்பதை பேஷனாகக் கருதுவதும் அரசே மது விற்பதும் தனக்கு உடன்பாடில்லை. தன்பால் உறவோ, எதிர் பால் உறவோ அவரவர் விருப்பம், ஒருவர் ஒழுக்க நெறியை மற்றவர் மீது திணிக்கக் கூடாது. விவசாய விளை நிலங்கள் ஆலைகளாக வீடுகளாக மாறுவதால், உணவு உற்பத்திக்கும் விவசாயிகளுக்கும் கடுமையான பாதிப்பு நிச்சயம் ஏற்படும். இதைத் தடுக்க ஹரியானா பாணியில் விரிவான நிலக் கொள்முதல் சட்டம் விவசாயிகளுக்கு தொலை நோக்கில் உதவும் விதத்தில் தயாராகிவருகிறது. சினிமாக்காரர்கள் பிரச்சினையை டெல்லிக்கு வந்து அமைச்சருடன் பேசித் தீர்க்க வேண்டும். இலங்கைத் தமிழர் பிரச்சினையில் எந்த அளவு முடியுமோ அந்த அளவு அழுத்தத்தை மத்திய அரசு ராஜபக்ஷே அரசின் மீது செலுத்தி வருகிறது. அடுத்த கட்டமாக தானே நேரில் இதில் தலையிட முயற்சிப்பதாக ராகுல் சொன்னார்.

ராகுல் பேசியதில் எனக்கு முக்கியமாகப் பட்டது அவருக்கு இந்திய அரசியல் கட்சிகளுக்கும் மக்களுக்கும் நடுவே இருக்கும் பெரிய இடைவெளி பற்றி நன்றாகத் தெரிந்திருக்கிறது என்பதுதான். காங்கிரஸ் உட்பட எந்தக் கட்சியிலும் உட்கட்சி ஜனநாயகம் இல்லை. ஒரு சாதாரண நல்ல மனிதர் அரசியலுக்குள் நுழையவிடாமல் அத்தனை கட்சிகளும் தடுக்கும் அமைப்பையே வைத்திருக்கின்றன. அதை மாற்றுவதுதான் தன் நோக்கம் என்றார். அதற்கான முயற்சியை இளைஞர் காங்கிரசில் செய்து வருவதாகவும் சொன்னார். எந்த இளைஞரும் அதில் உறுப்பினராகிப் போட்டியிட்டு எந்த பதவிக்கும் வரமுடியும் என்ற நிலையை ஏற்படுத்திவருவதாகக் கூறிய ராகுல், தமிழக, கேரள கட்சித் தேர்தல்களை எதிரிகள் கூட ஒப்புக்கொள்ளும் அளவு நியாயமாக தேர்தல் ஆணையம் போல நடத்தியிருப்பதை சுட்டிக் காட்டினார். இளைஞர் காங்கிரசுக்குள் தேர்தல் மூலம் எல்லாருக்கும் சம வாய்ப்பு என்பதை தான் அரசியலில் இருக்கும் காலம் வரை

உறுதிப்படுத்த தன்னால் முடியும் என்று அறிவித்தார்.

ஆனால், அந்தச் சம வாய்ப்பைப் பெற தேர்தல் மூலம் வரக்கூடியவர்களின் தரத்துக்கு தான் உறுதியளிக்க முடியாமல் இருப்பதாகச் சொன்னார். காரணம், நல்லவர்கள், தரமானவர்கள் வரத் தயங்குவதால், வேறு மாதிரியானவர்கள்தான் வரும் நிலை இருக்கிறது. எனவே தொண்டு நிறுவனங்களில் இருப்பவர்கள் எல்லாம் அரசியலுக்குள் நேரடியாக நுழைய முன்வரவேண்டும் என்று அழைத்தார்.

ராகுல் காந்தியின் சந்திப்பில் என்னைக் கவர்ந்த இன்னொரு அம்சம்,அவர் நிஜமாகவே எல்லாரையும் சமமாகவும், விரோதம் இல்லாமலும் நடத்தியதுதான். ஒரு சிலர் பேசும்போதே சங்கடமான கேள்வி கேட்கப்போகிறேன் என்ற போது எனக்கு எதைப்பற்றியும் சங்கடமில்லை என்றார். இலங்கைத் தமிழர் பிரச்சினையில் அவரது கட்சி ஆட்சி மீது கடும் குற்றச்சாட்டுகளுடன் கேள்வி வைக்கப்பட்டபோது அவர் நிதானமாக பதில் அளித்தார். அரசு என்ன செய்ய வேண்டும் என்று யோசனைகள் கேட்டார். உணர்ச்சிவசப்பட்டு கேள்வி கேட்டவர்களுக்கு உடனடியாக யோசனை சொல்ல முடியவில்லை.

இன்றைய தமிழக அரசியலில் கருணாநிதி, ஜெயலலிதா, ராமதாஸ், என்று பலரிடமும், ராகுலிடம் பேசியது போல பேசவே முடியாது. மிக லேசான சங்கடம் உள்ள கேள்வி கேட்ட அடுத்த நொடியிலேயே கேட்டவரை முறைப்பது, திட்டுவது, மிரட்டுவதுதான் இன்றும் இங்கே நடந்துகொண்டிருக்கிறது. எனவே எந்த நிருபருமே இந்தத் தலைவர்களிடம் சிக்கலான கேள்விகளை நாசூக்காகக் கேட்பதைக் கூட பயந்து தவிர்க்கிறார்கள். ராகுல் இதிலிருந்து மாறுபட்டவராக இருப்பது ஆறுதலாக இருக்கிறது. சரியானவர்களை மட்டுமே சந்திப்புக்கு அழைக்காததும், வந்தவரில் சிலர் ராகுலைப் பேச விடாமல், தாங்களே நீண்ட உரை நிகழ்த்திக் கொண்டிருந்ததும்தான் நிகழ்ச்சியின் பெரும் பலவீனங்கள்.

ராகுல் பேசியதில் பளிச்சிட்ட நேர்மையும் எளிமையும் உறுதியும் அவர் செயல்களில் தொடர்ந்து பிரதிபலிக்குமானால், நிச்சயம் அடுத்த பத்து வருடங்களில் அரசியலில் ஆரோக்கியமான மாற்றங்கள் வரும் வாய்ப்பு உண்டு என்ற நம்பிக்கையுடன் வெளியே வந்தேன். ராகுலைப் பின் தொடரும் நிழலாக தங்கபாலுக்களைப் பார்த்ததும் மறுபடியும் கவலை வந்துவிட்டது.

**இந்த வாரக் கவலை**

அரசு மருத்துவக் கல்லூரிகளில் படிக்கும் சில மாணவர்களை

அண்மையில் சந்தித்துப் பேசியபோது அவர்கள் சொன்னவை அதிர்ச்சியாக இருந்தன. கல்லூரி விடுதிச் சுவர்கள் இற்றுப் போய் இடிந்து விழும் நிலையில் இருக்கின்றன. தண்ணீர் ஒரு நாளில் எந்த நேரத்தில் வரும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. மெஸ் உணவு படு சுமார் ரகம். இந்தச் சூழ்நிலையில்தான் எதிர்கால மருத்துவர்களைத் தயாரித்துக் கொண்டிருக்கிறோம். ஒரே ஆறுதல் ஆசிரியர்கள் சிறப்பாக பாடம் நடத்துகிறார்கள் என்று அந்த மாணவர்கள் சொன்னதுதான்.

சென்ற வாரத்தில் நந்தனம் எம்.சி.ராஜா தலித் விடுதி மாணவர்கள் சாலை மறியலால் சென்னைப் போக்குவரத்தையே ஆறு மணி நேரம் நிலைகுலைய வைத்தார்கள். காரணம் அவர்களுடைய விடுதிநிலை பற்றி கவனம் ஈர்க்கத்தான். அந்த விடுதியிலும் தமிழகமெங்கும் இருக்கும் இதர தலித், பிற்படுத்தப்பட்ட மாணவர் விடுதிகளிலும் வசிக்க வேண்டுமானால், தன்னை மனிதன் என்று உணர்வதை ஒருவர் தற்காலிகமாக நிறுத்திவைத்துக் கொள்ள வேண்டும். அவை மனிதர்களுக்கான இடமே அல்ல. அவ்வளவு கேவலமான முறையில் அவற்றை அரசு வைத்திருக்கிறது.

நம் எதிர்காலமான மாணவர்களை ஒருபக்கம் இப்படி நடத்திக் கொண்டு மறுபக்கம் வெற்று இலவச திட்டங்களுக்காக கோடிக்கணக்கான ரூபாய்களை அள்ளி வீசும் அரசை சமூக விரோதி என்றுதான் சொல்ல வேண்டும். தலித் மாணவர்கள் அடிப்படைகளுக்காகப் போராடிக் கொண்டிருக்கும்போது அவர்களைத் தன் மாநாட்டுக்கு போஸ்டர் ஒட்ட திரண்டு வரும்படி ஒரு தலித் தலைவர் அழைத்துக் கொண்டிருக்கிறார். எப்படி உருப்படும் நம் நாடு ?

### இந்த வாரப் பூச்செண்டு

மறதிநோய் உடையவரை மன நலம் குன்றியவர் என்று வேலையிலிருந்து நீக்கியது தவறானது என்று தமிழக அரசுக்கு கண்டனம் தெரிவித்து அவருக்கு இழப்பீடு தர உத்தரவிட்ட சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிக்கு இ.வா.பூ. மறதி இல்லாவிட்டால் மனிதன் நிம்மதியாக உயிர் வாழவே முடியாது என்று தமிழக முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி பேசியிருப்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

*கல்கி 1.1.2011*

# எத்தனை காலம்தான் ஏமாற்றுவார்......

புது வருடக் கணக்கைத் தொடங்கிவிட்டார் கலைஞர் கருணாநிதி. இந்த வருடத்தின் முதல் பொய் "முதலமைச்சரை விடப் பெருமைக்குரியவர் ஒரு புலவர் என்பதை இன்று நேற்றல்ல என்றைக்குமே நான் மதித்து அந்தத் தமிழுக்குப் பெருமையைத் தரக் கூடியவன்."

பாடலாசிரியர் வைரமுத்துவின் நூல் வெளியீட்டு விழாவில் கலந்துகொள்வதற்காக சென்னை வரும் பிரதமர் மன்மோகன்சிங்கை விமான நிலையத்தில் வரவேற்கவேண்டிய "முதலமைச்சரின் கடமையை" செய்யாமல் வந்துவிட்டதாக கருணாநிதி பேசியிருக்கிறார். இது உண்மையென்றால் அடுத்த நாள் தமிழக அரசு சார்பில் முதல்வர் பிரதமரை சந்திக்கச் செல்லாதது ஏன் என்று அளித்த விளக்க அறிக்கையிலும் இதையேதானே சொல்ல வேண்டும் ? அதில் "முன்கூட்டியே ஒப்புக் கொண்ட நிகழ்ச்சிக்கு செல்லவேண்டியதாயிற்று அங்கே ஒளிவிளக்குகளால் கண்ணில் நீர் கசிந்தது மருத்துவரை சந்தித்துவிட்டு பின்னர்தான் பிரதமரை காண செல்ல முடிந்தது" என்று விளக்கியிருக்கிறார்கள். "பிரதமரை வரவேற்பதை விட புலவரை கௌரவிப்பதே முதன்மையானது என்று முதலமைச்சர் கருதியதால் செல்லவில்லை" என்று தமிழக அரசு அறிக்கையிலும் சொல்ல வேண்டியதுதானே?

கிழிந்து கந்தலாகிக் கொண்டிருக்கும் காங்கிரஸ் தி.மு.க கூட்டணியில் ' கெஞ்சினால் மிஞ்சுவது, மிஞ்சினால் கெஞ்சுவது' என்ற உத்தியை எப்போதும் பிரயோகித்துவரும் கருணாநிதி இப்போதும் அதே வேலையைச் செய்திருக்கிறார். அவ்வளவுதான். காங்கிரசுடன் உறவு எப்படியிருக்கிறது என்று நிருபர்கள்

கேட்டபோது, "எனக்கும் உங்களுக்கும் (பத்திரிகையாளர்களுக்கும்) உள்ள அளவு இருக்கிறது" என்று பதில் சொல்கிறார் கருணாநிதி. அவருக்கும் பத்திரிகையாளர்களுக்கும் உள்ள உறவு எப்படி இருக்கிறது ? சங்கடமான கேள்விகளைத் தப்பித் தவறி ஏதேனும் ஒரு நிருபர் கேட்டால், " யார்யா நீ ?", " உனக்கு என்ன அதைப் பத்தி ?", " உங்க வீட்டுலயா ரெய்டு நடந்துது ?" என்று எரிந்து விழும் உறவுதான் அவருடையது. தானே பதில் சொல்ல விரும்பும் கேள்விகளைக் கேட்பதற்கென்றே நிருபர்களில் ஒரு கோஷ்டியை தயார் செய்து வைத்திருப்பது அவரது உறவின் மறுபக்கம். இதே அணுகுமுறைதான் காங்கிரசுடனும் உள்ளது. ரெய்டு, ஸ்பெக்ட்ரம் போன்ற சங்கடமான பிரச்சினைகளில் தன் எரிச்சலைக் காட்ட பிரதமரைப் புறக்கணிப்பது; தான் விரும்பும் அறிக்கைகளை வெளியிட காங்கிரசுக்குள்ளே ஒரு தி.மு.க காங்கிரஸ் பிரிவை வைத்திருப்பது. இவைதான் அவரது கூட்டணி அணுகுமுறை.

'புலவர்களை எப்போதும் மதிக்கும் 'மன்னன்' நான் என்று கருணாநிதி சொல்லியிருப்பது இன்னொரு பொய். ஜால்ரா அடிக்கும் புலவர்களை மதிப்பது என்று அதை திருத்தி வாசிக்க வேண்டும். வைரமுத்து தன் ஜால்ராவை நிறுத்தினால், அடுத்த நிமிடமே வேண்டாத புலவராகிவிடுவார் என்பது இருவர் மனசாட்சிக்கும் தெரியும். வாலி ஜால்ராவை நிறுத்தின அடுத்த நொடியில் ஆரிய நச்சுப் பாம்பாகிவிடுவார் என்பதும் அவருக்குத் தெரியும்.

ஓரிரு வாரங்கள் முன்புதான் சாகித்ய அகாதமி பரிசு அறிவிக்கப்பட்டிருக்கிறது. பரிசு பெறும் நாஞ்சில் நாடனைப் பாராட்டி கருணாநிதியிடமிருந்து ஒரு அறிக்கை உண்டா? கேரளத்தில் இப்படிப்பட்ட பரிசுகள் அறிவிக்கப்பட்டால், உடனே முதலமைச்சர் எழுத்தாளர் வீடு தேடிப் போய் பாராட்டுகிறார். இங்கே " யாருய்யா அவன் நாஞ்சில் நாடன் ? யாரு ஆளு ? கனி(மொழி) கூப்பிட்டா சங்கமத்துக்கு வரமாட்டேங்கறானாமே?" என்றுதான் இங்கே அரண்மனை உரையாடல்கள் நிகழும் வாய்ப்பிருக்கிறது. நாஞ்சில்நாடன் கிண்டலாகச் சொல்வது போல, பரிசு பெறும் எழுத்தாளன் தானே ஒரு மஞ்சள் சால்வையும் சிவப்பு சால்வையும் வாங்கிக் கொண்டு தலைமைச் செயலகத்துக்குப் போய் பல மணி நேரம் காத்திருந்து ஒரு சால்வையைப் போர்த்தி இன்னொன்றைப் போர்த்தவைத்து, தன் செலவில் படமும் எடுத்து பத்திரிகைகளுக்கு தரவேண்டிய நிலை.

கடந்த ஐம்பது ஆண்டுகளில் சாகித்ய அகாதமி ஏராளமான தமிழ்ப் படைப்புகளை பிற இந்திய மொழிகளிலும் பிற மொழிப் படைப்புகளை தமிழிலும் வெளியிட்டிருக்கிறது. இது போல ஒரே ஒரு

ஆக்கப்பூர்வமான வேலையையாவது தமிழக அரசு செய்ததுண்டா? எழுத்தாளர் படைப்புகளை நாட்டுடைமையாக்குகிறேன் என்ற பெயரில் தகுதியானவர்களுடன் சேர்த்து கும்பலோடு கோவிந்தாவாக எந்தத் தகுதியும் இல்லாத வேண்டப்பட்டவர்களின் படைப்புகளுக்குக் காசு கொடுத்ததுதான் ஒரே சேவை. இயல் இசை நாடக மன்றத்தின் கலைமாமணி விருதுகளை 25 ஆயிரம் ரூபாய் ரேட்டுக்கு விற்றுக் கொண்டிருக்கிறார்கள். எழுத்தாளர் பிரபஞ்சன் வாடகைக்குக் குடியிருக்கும் அரசுக் குடியிருப்பு ஒழுகுகிறது. வேறு வீடு மாற்றிக் கொடுங்கள் என்று மனு போட்டு அலுத்துப் போய்விட்டார் என்று வேதனையுடன் நாஞ்சில் நாடன் ஒரு மேடையில் குறிப்பிட்டார்.

சாகித்ய அகாதமியின் தென் மண்டல அலுவலகம் நான்கு தென் மாநிலங்களுக்குமானது, சென்னையில்தான் பல காலம் இயங்கி வந்தது. தங்களுக்கென்று தனியே நிலம் ஒதுக்கித்தரும்படி தமிழக அரசைக் கேட்டது சாகிதய அகாதமி. புலவர்களை மதிக்கும் அரசு, முரசுக்கட்டிலில் புலவரோடு சேர்த்துக் கோப்புகளையும் தாலாட்டு பாடித் தூங்க வைத்துக் கொண்டிருந்த வேளையில், கர்நாடக அரசு முந்திக் கொண்டது. கன்னட படைப்பாளிகளும் அரசும் கை கோர்த்து நின்றதால், தென் மண்டல அலுவலகமே அங்கே போய்விட்டது. இங்கே எஞ்சியது சாகித்ய அகாடமியின் சென்னை அலுவலகம் எனப்படும் விற்பனை நிலையம்தான். அதற்கும் புலவர்களை மதிக்கும் அரசில் ஆபத்து வந்துவிட்டது. தரமணி உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வளாகத்தில் ஒதுக்கிய இடத்தை காலி செய்யச் சொல்கிறது தமிழக அரசு. சாகித்ய அகாதமிக்கு சென்னையில் அலுவலகம் கூட இல்லாமல் போய்விடும் நிலை.

இலவசங்களை வழங்குவதையே அரசுக் கொள்கையாக வைத்திருக்கும் முதலமைச்சர் இலவசமாக இப்படி வழங்கும் பொய்களுக்கு நாம் தரும் விலை மிகப் பெரியது. ஏழைகள் இருக்கும்வரை இலவசங்கள் தன் ஆட்சியில் தொடரும் என்று மிகுந்த பெருமிதத்துடன் அறிவித்திருக்கிறார் கருணாநிதி. எவ்வளவு காலத்துக்கு ஏழைகள் ஏழைகளாகவே இருப்பார்கள் ? கனிமொழியின் மகன் ஆதித்தன் அரசுக் கட்டிலில் அமரும்வரையா? அதற்கு அப்புறமுமா? தமிழ்நாட்டில் மொத்தம் ஆறு கோடி 65 லட்சம் மக்கள் இருக்கிறார்கள். வறுமைக் கோட்டுக்கு கீழே உள்ளவர்களுக்கு இலவச வேட்டி செல்ல அளிக்கப்படுகிறது. அதன் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? மக்கள் தொகையில் ஏறத்தாழ சரி பாதி. மூன்று கோடி 11 லட்சத்து 23 ஆயிரம் ! ஐந்து முறை கருணாநிதி முதலமைச்சராக இருந்து சாதித்தது

என்ன ? தமிழர்களில் சரி பாதி பேரை வறுமைக் கோட்டுக்குக் கீழேயே வைத்திருப்பதுதானா ?

சுமார் 15 நாட்களுக்கு முன்பு புதுக்கோட்டை மாவட்டம் கொத்தமங்கலம் கிராமத்தில் இலவச டி.வி பெட்டி வழங்கும் நிகழ்ச்சி நடைபெற்றது. மாவட்ட தி.மு.க செயலாளர் தலைமையேற்று டி.வி.பெட்டிகளை வழங்கிக் கொண்டிருந்தார். அரசு விழாவில் ஏன் கட்சியின் மாவ்ட்ட செயலாளர் பெட்டிகளை வழங்குகிறார் என்றெல்லாம் நாம் அசட்டுத்தனமாகக் கேட்கப்போவதில்லை. அங்கே பெட்டி வாங்க வந்த விவசாயி விஜயகுமார் என்பவர் பெட்டியை வாங்கிக் கொண்டு திருப்பி அளித்துவிட்டு கூடவே ஒரு கடிதத்தையும் கொடுத்தார். அந்தக் கடிதம் சாதாரணக் கடிதமல்ல. வர்லாற்றில் இடம் பெற வேண்டிய கடிதம்.

“மனிதனுக்கு டி.வி. என்பது பொழுதுபோக்கு சாதனம்தான். ஆனால் அதைவிட முக்கியமானது உணவு, உடை, உறைவிடம். தமிழகத்தில் மொத்தம் 88 துறைகள் இருக்கின்றன. இவை தன்னிறைவு அடைந்து விட்டனவா? குறிப்பாக, விவசாயிகளைப் பாதிக்கும் மின்சாரத் துறை தன்னிறைவு அடைந்து விட்டதா? துறைகள் எல்லாம் தன்னிறைவு அடைந்த பிறகு மிதமிஞ்சிய பணத்தில் இந்த டி.வி.யை வழங்கியிருந்தால் மகிழ்ச்சியாக இருந்திருக்கும். இதற்கு மட்டும் எங்கிருந்து நிதி வந்தது?இந்தியாவின் முதுகெலும்பான விவசாயிகள்

தமிழகத்தில் அதிகம் வசிக்கிறார்கள். டி.வி. வழங்கும் பணத்தை வைத்து விவசாயிகளுக்குத் தேவையான மின்சாரத்தைக் கொடுத்திருக்கலாம். தமிழகத்திலேயே மிகவும் பின்தங்கிய மாவட்டத்தைக் கண்டறிந்து போதுமான மின்சாரத்தை தடையின்றிக் கொடுத்து அந்த ஒரு மாவட்டத்தையாவது தன்னிறைவு அடையச் செய்திருக்கலாம். இலவசம் என்பது எங்களுக்கு வேண்டாம். தரமான மருத்துவம், கல்வி, மும்முனை மின்சாரம் மற்றும் வேலை வாய்ப்புகளை வழங்கினாலே போதும். அதை வைத்து நாங்களே சம்பாதித்து டி.வி.முதல் கார் வரை அனைத்தையும் வாங்கிக் கொள்வோம். எங்களுக்கு என்ன தேவையோ அதை நாங்களே பூர்த்தி செய்து தன்னிறைவு அடைந்து விடுவோம்.

விலைவாசி உயர்வு, எரிபொருள் விலை உயர்வு, குடிநீர் பற்றாக்குறை, லஞ்சம், ஊழல் என்று ஆயிரக்கணக்கான குறைகள் இருக்கும்போது ஒரு நடமாடும் பிணமாக நான் எப்படி டி.வி. பார்க்க முடியும்? எனவே எனக்கு இந்த டி.வி. வேண்டாம். முதல்வர் கருணாநிதி மீது எனக்கு மிகுந்த மதிப்பும், மரியாதையும், அன்பும் உள்ளது. எனவே,இந்த டி.வி.யை அவருக்கே அன்பளிப்பாகக் கொடுக்க இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்கிறேன்.

அவர் இதை ஏற்றுக் கொள்ளாவிட்டால் என் மனம் மேலும் வேதனைப்படும். அரசு மற்றும் அதிகாரிகள் தங்கள் கடமைகளை சரியாகச் செய்தாலே போதும். இந்தியா வல்லரசாகிவிடும்' என்று அந்தக் கடிதத்தில் விஜயகுமார் சொல்லியிருக்கிறார்.

ஒரு பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் அவர் மேலும் சொல்கிறார் : "சாராயத்தை குடிச்சுட்டு, ஒரு ரூபாய் அரிசியை தின்னுட்டு உழைக்கும் வர்க்கம் சோம்பேறியாகிக் கிட்டிருக்கு. ரொம்ப சீப்பா கணக்குப் போட்டாலும் ஒரு டி.வி. ஆயிரம் ரூபாய்னு வச்சிக்குங்க. தமிழ்நாட்டில் ரெண்டு கோடி குடும்ப அட்டைக்கும் டி.வி. கொடுத்தால் இருபது லட்சம் கோடி செலவாகும்.இதை வைத்து 88 துறைகளையும் தன்னிறைவு அடையச் செய்தாலே போதுமே."

விஜயகுமாரின் கடிதம் கடிதம் அல்ல. செருப்பு. அல்லற்பட்டு ஆற்றாது அழும் ஒருவர் கண்ணீர் விடாமல் ரௌத்ரம் பழகி அரசுக்குக் கொடுத்த சவுக்கடி. கலைஞர் அவர்களே, நீங்கள் முதல்வராக இருக்கும் காலம் வரையில் "நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்". குறைந்தபட்சம் 'நான் ஒரு கம்யூனிஸ்ட்', 'நான் ஏழைகளுக்காகவே வாழ்கிறேன்', 'புலவர்களை மதிக்கும் மன்னன்' மாதிரி பொய்களைச் சொல்லாமல், இருக்கும் காலம் வரை இருந்துவிட்டுப் போங்கள். எங்கள் எரிச்சலாவது குறையும்.

**இந்த வாரப் பூச்செண்டு:**

சென்ற 2009ல் 321 உடல் உறுப்புகள் மட்டுமே தானமாகக் கிடைத்தன. 2010ல் 523 என்று தமிழக அரசின் உறுப்பு மாற்று திட்ட அமைப்பாளர் டாக்டர் அமலோற்பவநாதன் அறிவித்திருக்கிறார். முன்பை விட அதிகமாக உடல் (உறுப்பு) தானம் செய்ய முன்வரும்

**தமிழக மக்களுக்கு இ.வா.பூ**

**இந்த வாரத் திட்டு:**

சி.பி.ஐ ரெய்ட் செய்த தமிழ் மையம் அமைப்புடன் சேர்ந்து சென்னை சங்கமம் திருவிழா நடத்த அரசுப் பணத்தை ஒதுக்கியிருக்கும் தமிழக அரசின் சுற்றுலா துறைக்கு இ.வா.திட்டு. ரெய்டுக்குள்ளான அமைப்பு தொடர்பான வழக்கு விசாரணை முடிந்து குற்றமற்றவர்கள் என்று நிரூபிக்கப்படும்வரை அவற்றுடன் தொடர்பு கொள்ளாமல் ஒதுங்கியிருக்க வேண்டிய தார்மிகக் கடமையை செய்யத் தவறியதற்காக இ.வா.தி.

*கல்கி 8.1.2011*

# படித்துக் கிழிக்கிறோமா ?

முப்பத்தைந்து ஆண்டுகளாக நடந்துகொண்டிருக்கும் சென்னைப் புத்தகத் திருவிழாவுக்கு ஒரு வருடம் கூட தவறாமல் போய்க் கொண்டிருக்கிறேன். சென்ற வருடம் கண்காட்சி தொடங்குவதற்கு முன்தினம் இதய அதிர்ச்சியால் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டேன். சிகிச்சை முடிந்து திரும்பியபோது சந்தையின் கடைசி நாள். மருத்துவரின் சிறப்பு அனுமதி பெற்று கண்காட்சிக்குப் போய் சில மணி நேரங்களை அங்கே மகிழ்வுடன் செலவழித்தேன்.

எட்டு வருடங்களாக அங்கே என் அரங்கு இடம் பெறுகிறது. ஒவ்வோராண்டும் தினசரி தேர்தல் ஒன்றை அதில் நடத்துகிறோம். தினசரி கேட்கும் கேள்விக்கு ஓட்டளித்தால், மறு நாள் அதன் முடிவு வெளியிடப்படும். புத்தகக் கண்காட்சிக்குப் படித்த வகுப்பினரே வருவார்கள் என்பதால், பொது விஷயங்களில் அவர்களுடைய கருத்து என்ன என்று அறிவதே இந்த தேர்தலின் நோக்கம். இதை எழுதும்போது ஆறு நாள் தேர்தல் முடிந்துவிட்டது. இன்னும் ஏழு நாட்கள் பாக்கி உள்ளன.

ஆறு நாட்களிலும் மக்கள் கருத்து எப்படியெப்படி வெளிப்பட்டிருக்கிறது என்று பார்க்கலாம். இந்த முடிவுகளுடன் எல்லாம் நாம் எல்லாரும் இயைந்து போக வேண்டும் என்று அவசியமில்லை. ஆனால் படித்தவர்களில் ஒரு முக்கியமான பகுதியினர் (தானாக முன்வந்து ஓட்டு போடும் மனநிலை உள்ளவர்கள்) என்ன நினைக்கிறார்கள் என்று புரிந்துகொள்ள இது உதவும்.

முதல் நாள் கருத்துக்கணிப்பு: மரண தண்டனை பற்றி மக்கள் என்ன நினைக்கிறார்கள் ? எந்த குற்றத்துக்கும் மரண தண்டனை கூடாது என்று ஓட்டளித்தவர்கள் 28 சத விகிதம் பேர். சில குற்றங்களுக்குத் தரலாம் என்றவர்கள்

58 சதவிகிதம். எல்லா கொலைகளுக்கும் மரண தண்டனை தரவேண்டும் என்றவர்கள் 14 சதவிகிதம்.

உலகத்திலேயே எய்ட்ஸ் நோயாளிகளின் எண்ணிக்கை இந்தியாவில்தான் அதிகம். இந்தியாவில் தமிழகத்துக்குத்தான் முதலிடம். எனவே செக்ஸ் எஜுகேஷன் எனப்படும் உடல் உளநலக்கல்வியைப் பள்ளிக் கூடத்தில் அறிமுகப்படுத்துவது பற்றிக் கேட்கப்பட்டது. தேவை இல்லை என்று ஓட்டளித்தவர்கள் நான்கு சதவிகிதம் பேர். எட்டாம் வகுப்பிலிருந்து தொடங்கலாம் என்றவர்கள் 56 சதவிகிதம் பேர். ப்ளஸ் ஒன் வகுப்பில் ஆரம்பிக்கலாம் என்றவர்கள் 40 சதவிகிதம் பேர்.

ஏழைகள் இருக்கும்வரை இலவசங்கள் தொடரும் என்று அழுத்தந்திருத்தமாக முதலமைச்சர் அறிவித்துள்ள நிலையில், இலவச டி.வி, இலவச அடுப்பு முதலிய திட்டங்கள் எதற்கானவை என்று கேட்டோம். ஆளுங்கட்சியின் நன்மைக்கானவை என்றவர்கள் 38 சத விகிதம் பேர். மக்களுக்கு நன்மையானவை என்றவர்கள் எட்டு சதவிகிதம் பேர். இருவருக்குமே நல்லதல்ல என்றவர்கள் 54 சதவிகிதம் பேர்.

ஸ்பெக்ட்ரம் விவகாரத்தில் அரசுக்கு எந்த இழப்பும் இல்லை,கணக்கு தணிக்கை அதிகாரியின் கணக்கு தப்புக் கணக்கு என்று மத்திய அமைச்சர் கபில் சிபல் அட்டகாசமாக அறிவித்த செய்தி, காலை செய்தித்தாட்களில் வந்த தினத்தன்று, இந்தக் கேள்வி தேர்தலுக்கு வைக்கப்பட்டிருந்தது. ஸ்பெக்ட்ரம் ஊழலில் பயண்டைந்தோர் யார்? ராசா, கனிமொழி, தி.மு.க என்றவர்கள் 19 சதவிகிதம் பேர். ராசா, கனிமொழி, தி.மு,க, மற்றும் காங்கிரஸ் என்றவர்கள் 76 சதவிகிதம் பேர். ஊழலே நடக்கவில்லை என்று வாக்களித்தவர்கள் ஐந்து சதவிகிதம் பேர்.

அடுத்த நாள், அ.இ.அ.தி.மு.கவின் எதிர்காலம் பற்றி கேட்டோம். நிரந்தர எதிர்க்கட்சியாகவே இருந்துவிடும் என்றவர்கள் 21 சத விகிதம் பேர். அடுத்த தேர்தலுக்குப் பின் கரைந்து காணாமற் போய்விடும் என்றவர்கள் 13 சதவிகிதம் பேர். வரும் தேர்தலில் ஆட்சியைப் பிடிக்கும் என்பவர்கள் 66 சதவிகிதம் பேர்.

தமிழகத்தில் மூன்றாவது அணியைப் பற்றியது அடுத்த நாள் கேள்வி. தி.மு.க, அ.இ.அ.தி.மு.க இரண்டுக்கும் மாற்றாக மூன்றாவது அணியை உருவாக்கும் தகுதியும் திறமையும் உடையவர் யார் ? காங்கிரஸ்தான் என்பவர்கள் ஒன்பது சதவிகிதம் பேர். டாக்டர் ராமதாஸ் என்பவர்கள் இரண்டு சதவிகிதம் பேர். விஜய்காந்த் என்பவர்கள் 28 சதவிகிதம் பேர். யாருமே இல்லை என்பவர்கள் 61 சதவிகிதம் பேர்.

அரசியல், திரைப்படம், இலக்கியம், சமூகம், கல்வி தொடர்பாக இன்னும் கேள்விகள் (தேர்தல்கள்) பாக்கி இருக்கின்றன. ஒவ்வொரு புத்தகக் கண்காட்சியின்போதும் நம் சமூகத்தின் கிரீமி லேயரை சந்திக்கிற வாய்ப்பு கிடைக்கிறது. இவர்கள் எப்படி நடந்துகொள்கிறார்கள் என்று பார்ப்பதே ஒரு கற்றல் அனுபவம். முக்கியமான மாற்றமாக ஒன்றை நான் பார்க்கிறேன். பத்தாண்டுகளுக்கு முன்பு பொதுவான படிக்கும் பழக்கம் குறைந்துபோயிருந்தது, அதைப் பற்றிய அக்கறையும் படித்தவர்கள் மத்தியில் பெரிதாக இல்லை. எல்லாருமே டி.வியில் ஆழ்ந்து போயிருந்தார்கள்.

ஒரு சில வருடங்களாக இந்த நிலையில் மாற்றம் இருப்பதை உணர முடிகிறது.தங்கள் குழந்தைகளுக்கு எப்படியாவது வாசிப்புப் பழக்கத்தை ஏற்படுத்திவிடவேண்டுமென்ற துடிப்புள்ள நிறைய இளம் நடுத்தர வயதுப் பெற்றோர்களை புத்தகத் திருவிழாவில் சந்திக்க முடிகிறது. முன்பை விட நிறைய பெண்கள் வருகிறார்கள். குழந்தைகளும் வருகிறார்கள் சுமார் இருபது வருடங்களுக்கு முன்பு கண்காட்சிக்கு வருபவர்களில் பெண்கள், குழந்தைகள் எண்ணிக்கை இருந்ததை விட இப்போது மிக அதிகமாக இருக்கிறது. இது நிச்சயம் ஓர் ஆரோக்கியமான மாற்றம்.

அதே சமயம் படித்தவர்கள் மத்தியில் பொது அக்கறை குறைவாக இருப்பதை தொடர்ந்து பார்க்க முடிகிறது. குப்பைத் தொட்டிகளைத் தேடிப் பிடித்து காகித டம்ளர்களைப் போடுபவர்கள் எண்ணிக்கை இன்னும் குறைவாகத்தான் இருக்கிறது. கேண்டீனில் டோக்கன் வாங்குமிடமானாலும், சிற்றுண்டி வாங்குமிடமானாலும், எந்த ஒழுங்குக்கும் வராமல், வரிசை அமைக்காமல், இடையில் கையை விட்டு முந்திக் கொள்ளும் பழக்கம் கடுமையாகத் தொடர்கிறது. வரிசையாக நில்லுங்களேன் என்று முண்டியடித்தவர்களிடம் ஒரு நாள் சொன்னேன். சலனமே இல்லை. இந்தக் கோளாறுக்கெல்லாம், கருணாநிதியும் ஜெயலலிதாவுமா பொறுப்பு, நாம் தானே பொறுப்பு என்று சத்தமாக சொன்னேன். சலனமே இல்லை. வெளிநாட்டுக்குப் போனால் ஒழுங்காக நடந்துகொள்கிறீர்கள், இங்கே மட்டும் ஏன் இப்படி என்று கேட்டேன். அப்போது கூட்டத்துக்கு வெளியில் இருந்த ஒருவர் “வெளிநாடு இல்ல சார். இங்கயே இருக்கற வெளிநாட்டு பேங்குக்குப் போனா கூட நம்ம ஆள் ஒழுங்கா வரிசையில நிக்கறான்” என்றார். அதற்கும் சலனம் இல்லை.

கழிப்பறைகளில் தாழ் சரியாக இல்லாதது, கை கழுவும் இடம் சேறாக இருப்பது, கேண்டீனில் சர்க்கரையே போடாமல் காபி கொடுப்பது எந்தக் குறையானாலும் உரியவர்களிடம் புகார் செய்து

நிவர்த்தி செய்ய வேண்டுமென்ற அக்கறை படித்தவர்களிடம் குறைவாகவே இருக்கிறது. முணுமுணுத்துக் கொண்டும் புலம்பிக் கொண்டும் போய்விடுகிறார்கள்.படிக்கிறோம். படிக்கிற படிப்பு நம்மை எப்படிப்பட்ட ஆளுமையாக ஆக்குகிறது, படிப்புக்கும் அதற்கும் என்ன தொடர்பு என்ற கேள்வி ஒவ்வொரு புத்தகக் காட்சிக்கும் பின்னரும் என்னிடம் எஞ்சி நிற்கிறது. ஒருவேளை இதையும் தேர்தல் கேள்வியாக வைக்க வேண்டுமோ?

**இந்த வாரப் பூச்செண்டு:**

இந்தியாவுக்கு வெங்காயம் அனுப்பக்கூடாது என்ற எதிர்ப்பை மீறி அனுப்ப முடிவு செய்துள்ள பாகிஸ்தான் அரசுக்கு இ.வா.பூ.

**இந்த வாரக் கேள்வி:**

சி.பி.ஐ ரெய்டு செய்த தமிழ் மையத்துடன் சேர்ந்து தமிழக அரசு சென்னை சங்கமம் விழாவை நடத்தக் கூடாது, மையத்துக்கு அரசு பணம் கொடுக்கக்கூடாது, விளம்பரங்களில் தமிழ் மையம் பெயர் இடம் பெறக் கூடாது, தேவைப்படும் கிராமியக் கலைஞர்களை ஏற்பாடு செய்து தரும் பணிக்கு மட்டுமே மையத்தை அரசு பயன்படுத்தலாம் என்று சென்னை உயர் நீதிமன்றம் இடைக்கால தீர்ப்பில் தெரிவித்திருந்தது. ஆனால், சென்னை முழுவதும் வைக்கப்பட்டிருக்கும் சங்கமம் விழா விளம்பரப் பலகைகள் அனைத்திலும், பத்திரிகை விளம்பரங்களிலும் தமிழ் மையம் பெயர் பெரிதாக உள்ளது. தமிழக அரசின் சுற்றுலா துறை பெயர் சிறியதாக இருக்கிறது. நீதிமன்ற உத்தரவு ஏன் பின்பற்றப்படவில்லை ?

கிராமியக் கலைஞர்களை கண்டுபிடித்து அழைத்துவர மையத்தின் உதவி தேவை என்று அரசு கூறுவது ஏன் ? தனியார் அமைப்பான தமிழ் மையம் ஆரம்பித்து சில வருடங்களே ஆகின்றன ஆனால் தமிழக அரசின் இயல் இசை நாடக மன்றம் 50 ஆண்டுகளுக்கும் மேலாக இயங்கிவருகிறது. கிராமியக் கலைஞர்கள் இதில் பதிவு செய்கின்றனர். கலைமாமணி விருது வழங்குவதும் இந்த அமைப்புதான். ஏன் அரசு தன் அமைப்பைப் பயன்படுத்தி கிராமியக் கலைஞர்களைத் திரட்ட முடியவில்லை ?

**இந்த வாரத் தகவல் 1:**

அவசர உதவிக்கு ஆம்புலன்ஸ் 108 திட்டத்தைப் பற்றிய டி.வி விளம்பரங்கள் தமிழக அரசால், சன் டி.வி, கலைஞர் டி.வி இரண்டிற்கு மட்டுமே தரப்பட்டுள்ளன. இதற்காக அரசு இதுவரை அளித்துள்ள தொகை ஒரு கோடியே ஒரு லட்சத்து 50 ஆயிரம் ரூபாய்கள். தகவலறியும் உரிமை சட்டத்தின் கீழ் ஆர்வலர் குரோம்பேட்டை சந்தானம் இதை வெளிப்படுத்தியுள்ளார்.

**இந்த வாரத் தகவல் 2:**

உத்தரப் பிரதேச மாநில முதலமைச்சர் மாயாவதியின் பிறந்த நாளை ஜனவரி 15 அன்று மாநில அரசு சுமார் 300 கோடி ரூபாய் செலவில் கொண்டாடவிருக்கிறது. கடும் குளிரினால் பாதிக்கப்பட்டிருக்கும் உ.பியில் இதுவரை 300 பேர் விறைப்பால் இறந்திருக்கிறார்கள்.

**இந்த வாரத் தகவல் 3:**

லண்டனில் இந்திய தூதரகத்தில் இருக்கும் உயர் அதிகாரி அனில் வர்மா தன் மனைவியை அடித்து துன்புறுத்துவதாக ஸ்காட்லாந்து போலீசார் அவரிடம் விசாரித்ததையடுத்து, அவரை இந்திய அரசு திரும்பப் பெற்றுள்ளது.

*கல்கி 15.1.2011*

# தி.மு.க ஆட்சிக்கு வராமல் தடுக்க நீங்கள் என்ன செய்ய வேண்டும் ?

படித்தவர்கள் எல்லாரும் தவறாமல் தேர்தல் தினத்தன்று காலையே போய் தங்கள் ஓட்டுகளைப் பதிவு செய்தால் நிச்சயமாக தி.மு.க காங்கிரஸ் அணி தேர்தலில் தோல்வி அடையும் வாய்ப்பு பலமாக இருக்கிறது என்பதை சென்னைப் புத்தகக் கண்காட்சியில் என் அரங்கில் நடைபெற்ற தேர்தல்கள் காட்டுகின்றன.

விலைவாசி கடும் உயர்வுக்கு யார் பொறுப்பு என்பது ஒரு நாளைய தேர்தல் கேள்வி. காங்கிரஸ்தி.மு.க ஆட்சிகள் என்று சொன்னவர்கள் 62 சதவிகிதம் . பதுக்கல் வியாபாரிகள் என்று கருதியோர் 30 சதவிகிதம். ( பேராசிரியர் அன்பழகன் சொன்னது போல ) யாரும் பொறுப்பு இல்லை. இயற்கைப் பேரழிவு போன்றது என்றவர்கள் எட்டு சதவிகிதம்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் பொறுப்பான எதிர்க்கட்சியாக யாராவது செயல்பட்டிருக்கிறார்களா என்று கேட்டபோது , யாரும் இல்லை என்று 61 சத விகிதம் பேர் வாக்களித்திருக்கிறார்கள். இடதுசாரிகளைக் குறிப்பிட்டவர்கள் 18 சதவிகிதம். அ.இ.அ.தி.மு.கவை சொன்னவர்கள் 14 சதவிகிதம். பா.ம.கவைக் கருதியவர்கள் 7 சதவிகிதம்.

தி.மு.கவுக்குள் சந்தேகத்துக்கு இடமில்லாமல் செல்வாக்குடன் இருப்பவர் மு.க.ஸ்டாலின்தான். கலைஞர் கருணாநிதியின் உண்மையான அரசியல் வாரிசு அவரே என்று 70 சதவிகிதம் பேர் வாக்களித்துள்ளனர். அடுத்த இடத்தில் இருப்பவர் தயாநிதி மாறன். 14 சதவிகித

ஆதரவு. மு.க. அழகிரிக்கும் கனிமொழிக்கும் தலா எட்டு சத விகிதம் பேர் வாக்களித்துள்ளனர்.

நேரடியாகவே ஒரு கேள்வியைக் கேட்டிருந்தோம். வரும் தேர்தலில் எந்த அணியை ஆதரிப்பீர்கள் ? தி.மு.ககாங்கிரஸ் அணியை ஆதரிப்போம் என்று வாக்களித்தவர்கள் வெறும் 13 சதவிகிதம்தான். அ.இ.அ.தி.மு.க, விஜய்காந்த், இடதுசாரிகள், ம.தி.மு.க அணியை ஆதரிப்போம் என்று வாக்களித்தோர் 57 சத விகிதம் பேர். எல்லாரையும் நிராகரிக்கும் 49 ஓ வைப் பயன்படுத்தி ஓட்டு போடுவோம் என்றவர்கள்........ ஆச்சரியமாக,30 சதவிகிதம் பேர் !

எனவே படித்தவர்கள் ஒழுங்காக ஓட்டு போடச் சென்றால், தி.மு.க ஆட்சியை இழக்கும். ( ஒரு பிரபல கல்லூரியின் வருடாந்தர சர்வேயிலும் இதே போல முடிவே வந்திருப்பதாக அறிகிறேன். அந்த சர்வே ஏனோ இன்னும் வெளியிடப்படவில்லை.)

படிக்காதவர்கள் மத்தியில் தி.மு.க ஆட்சியின் இலவசங்கள் எந்த அளவுக்கு செல்வாக்கை செலுத்தும் என்பதே, தி.மு.க இழக்கும் படித்தவர் ஓட்டை சரி செய்ய உதவ முடியும். அதே சமயம் அரசின் மது வியாபாரத்தால் கடுமையாக பாதிக்கபட்டிருக்கும் ஏழைக் குடும்பங்கள் அந்த பாதிப்பை விட இலவசங்களுக்குக் கூடுதல் அழுத்தம் கொடுப்பார்களா என்பதும், ஸ்பெக்ட்ரம் ஊழல், ஒரு குடும்ப ஆட்சி போன்றவை அவர்களுக்கு முக்கிய பிரச்சினைகளாக இருக்குமா என்பதும் தேர்தல் களத்தில் பரிசோதிக்கப்படவேண்டியவை.

ஆளுங் கட்சியும் சரியில்லை, எதிர்க்கட்சியும் சரியில்லை என்ற படித்தவர் மன நிலை, எங்கள் கருத்துக் கணிப்புத் தேர்தலில் அழுத்தமாக வெளிப்பட்டிருக்கிறது. முப்பது சதவிகிதம் பேர் எல்லாரையும் நிராகரிக்கும் 49 ஓவை விரும்புகிறார்கள்.

49 ஓ மட்டும் மின் வாக்குப்பதிவு இயந்திரத்தில் ஒரு பட்டனாக இருந்து, ரகசியமாக அதைப் பதிவு செய்யும் வாய்ப்பு இருக்குமானால், 50 சதவிகிதத்துக்கு மேற்பட்ட வாக்காளர்கள் அதை ஆதரித்து ஒரு அரசியல் நெருக்கடியையே ஏற்படுத்திவிடுவார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. மின் இயந்திரத்தில் 49 ஓ பட்டன் வைக்கக் கோரி போடப்பட்ட பொது நல வழக்கு பி.ஜே.பி, காங்கிரஸ் அரசாங்கங்களால் இழுத்தடிக்கப்பட்டு சுமார் ஏழு வருடமாக உச்ச நீதி மன்றத்தில் முடிவு வராமல் காத்திருக்கிறது.

பகிரங்கமாக வாக்குச் சாவடியில் அதை அதிகாரியிடம் தெரிவித்து பதிவு செய்யும் முறை பலரையும் தயங்க( பயப்பட)

வைக்கிறது. அது தவிர, எப்படி 49 ஓவைப் பதிவு செய்யவேண்டும் என்ற நடைமுறையை சாவடி அதிகாரிகள் பலரும் தெரிந்தோ தெரியாமலோ குழப்பி, வாக்காளரை அதைப் போடவிடாமல் தடுத்துவிடுகிறார்கள். புத்தகக் கண்காட்சியில் என்னை சந்தித்து உரையாடிய பல வாசகர்கள் இந்தப் பிரச்சினையைத் தெரிவித்தார்கள்.

49ஓ போடுவது எளிமையானது. நாம் வாக்குச்சாவடிக்குச் சென்றதும் நம் பெயர் வாக்காளர் பட்டியலில் இருக்கிறதா என்று பார்க்கிறார்கள். இருக்கிறது என்று உறுதியானதும், உடனே நம்மை ஒரு நோட்டில் கையெழுத்திடச் சொல்லுகிறார்கள். கையெழுத்திட்டதும் விரலில் மை வைக்கப்படும். அடுத்து மின் இயந்திரத்தில் பதிவு செய்யச் சொல்வார்கள். அதற்கு பதில் 49 ஓ போடுகிறேன் என்று சொல்லிவிட்டு, முதலில் கையெழுத்திட்ட அதே நோட்டில், அந்தக் கையெழுத்துக்குப் பக்கத்திலேயே 49 ஓ என்று எழுதி, இன்னொரு கையெழுத்திடவேண்டும். அவ்வளவுதான். தனி படிவம் எல்லாம் எதுவும் கிடையாது.

கண்காட்சியில் சந்தித்த வாசகர்களில் பலரும் ஓர் அரசியல் மாற்றம் வந்தே தீரவேண்டும் என்ற ஆர்வமும், ஆனால் அது எப்படி எங்கிருந்து வரும் என்று தெரியாத குழப்பமும், யாராவது வழி நடத்த மாட்டார்களா என்ற எதிர்பார்ப்பும் உடையவர்களாக இருந்தார்கள். "நீ விரும்புகிற மாற்றமாக நீ முதலில் இரு" என்ற காந்தியின் வாசகத்தைத்தான் எல்லாருக்கும் பதிலாகச் சொல்ல வேண்டியிருந்தது.

ஒவ்வொரு தேர்தலிலும் ஓட்டு போடாதவர்கள் சுமார் 30 முதல் 35 சதவிகிதம் பேர். இதில் சுமார் பத்து சதவிகிதம் பேர் முதியோர், உடல்நலம் குன்றியோர் என்றே வைத்துக் கொண்டாலும் ஓட்டு போட வராத மீதி 20, 25 சதவிகிதம் பேர் ஓட்டு போட்டால், அரசியலில் பல மாற்றங்கள் நிகழமுடியும்.

ஓட்டு போட விரும்பும் பல வாசகர்களில் ஒரு வாசகி மிகுந்த ஆதங்கத்துடன் தெரிவித்த தகவல் கவலை தருகிறது. வாக்காளர் பட்டியலில் பெயர் இல்லையென்றால், விண்ணப்பிக்க செல்லும்போது ரேஷன் அட்டையை முகவரிக்கு ஆதாரமாகக் காட்டுகிறார்கள். ஆனால் சென்னை போன்ற பெருநகரில் வீட்டு வாடகை ஒவ்வொரு வருடமும் பிரச்சினையாகிக் கொண்டே போவதால், பக்கத்து தெருவுக்கு வீடு மாற்றியாக வேண்டியிருக்கிறது. அந்த வேகத்தில் ரேஷன் கார்டில் முகவரியை ரேஷன் அலுவலகம் மாற்றித் தருவதில்லை. இந்த முகவரிச் சிக்கலினால் தொடர்ந்து மூன்று முறை விண்ணப்பித்தும் வாக்காளர் பட்டியலில் இணைக்கப் படவில்லை என்று வருத்தப்பட்டார் அந்த வாசகி.

தேர்தல் ஆணையம் வாக்காளரை அடையாளம் காண்பதற்கான வழிமுறையை இன்னும் எளிமையானதாக்கவேண்டும்.

ஊழல் அராஜகத்துக்கெல்லாம் எதிராக ஜனநாயகத்தில் இன்னமும் மக்களிடம் எஞ்சியிருக்கும் ஒரே ஆயுதம் வாக்குச் சீட்டுதான். அதையும் பல விதங்களில் பலவீனப்படுத்த ஊழல் அரசியல் கட்சிகள் முயற்சிக்கின்றன. இருக்கும் ஒரே ஆயுதத்தையும் நாம் இழந்துவிடவோ வீணாக்கவோ கூடாது என்பதுதான் வரப் போகும் தேர்தலின்போது நம் மனதில் நிறுத்த வேண்டிய முக்கியச் செய்தி.

தேர்தலையொட்டி தலைவர்கள் பேச்சுக்களில் விசித்திரமான சில வாக்கியங்கள், கருத்துகள் வெளியாகின்றன. யார் ஆட்சிக்கு வரக்கூடாது என்பதுதான் எங்களுக்கு முக்கியம் என்கிறார் டாக்டர் ராமதாஸ். மக்களுக்கும் அது முக்கியம்தான். ஆனால் அந்த யார் என்று, யாரை அவரோ மக்களோ நினைக்கிறார்கள் என்பதுதான் மர்மம்.

கருணாநிதியை எதிர்த்து ஒரே தொகுதியில் போட்டியிட நான் தயார் என்கிறார் விஜய்காந்த். அதை விட கருணாநிதியும் ஜெயலலிதாவும் ஒரே தொகுதியில் போட்டியிடுவதையே நான் வரவேற்பேன். ஒருவேளை ஜெயலலிதாவும் அப்படி அறிவித்தால், கருணாநிதி வரும் தேர்தலில் போட்டியிடாமல் கூட இருந்து, விஜய்காந்த், ஜெயலலிதா இருவரையும் ஏமாற்றிவிடலாம்.

அவருக்கு வசதியாக மேலவை உருவாக்கப்படுகிறது. அதன் தேர்தலுக்கு இடைக்காலத் தடை விதிக்க உச்ச நீதிமன்றம் மறுத்துவிட்டது. கருணாநிதி மேலவை உறுப்பினராகிவிடலாம். ஜெயலலிதா, விஜய்காந்த், போன்றவர்கள் கூட இதே வழியைப் பின்பற்றலாம். தொகுதிக் கவலை இல்லாமல் எல்லாரும் தேர்தல் பிரசாரம் செய்யப் போகலாம்.

சென்னை சங்கமம் தொடக்க விழாவில் கருணாநிதி வானம் வசப்பட்டுவிட்டது. மானமும் அடுத்து வையமும் நம் வசப்படவேண்டும் என்று பேசியிருக்கிறார். வானம் வசப்படுவதென்றால் என்ன என்று ரொம்ப யோசித்ததில் 2ஜி அலைக்கற்றையைத்தான் சொல்லியிருக்கிறார் என்று புரிந்தது. நீரா ராடியா டேப்புகளால் இழந்த மானமும் மீட்கப்படவேண்டும் என்று அவர் ஆசைப்படுவது நியாயம்தானே.

கருணாநிதி சொல்லும் வையமும் வசப்படுவது என்றால் என்ன என்றுதான் புரியவில்லை. விக்கிலீக்ஸைத்தான் கேட்கவேண்டும். ஸ்விஸ் வங்கி முன்னாள் அதிகாரி ருடால்ஃப் எல்மர் வங்கியில் கறுப்புப்பணத்தை வைத்திருக்கும் ‘வையத் தலைவர்கள்’ பட்டியலை

விக்கிலீக்ஸ் அசாஞ்சேயிடம் கொடுத்திருக்கிறார். அதிலிருக்கும் ஆசியத் தலைவர்கள் பட்டியலில் தமிழ்ப் பெயர்களும் இடம் பெற்று தமிழர்களின் மானம் காப்பாற்றப்படுமா என்பது சில வாரங்களில் தெரிந்துவிடும்.

**இந்த வாரக் கேள்வி:**

சென்னை சங்கமத்தை அரசு செலவில் தமிழக அரசின் சுற்றுலா துறை தான் நடத்த வேண்டும். பணம் கொடுக்கல் வாங்கல்களில் தமிழ் மையம் ஈடுபடுத்தப்படக் கூடாது என்று சென்னை உயர் நீதிமன்றம் உத்தரவிட்டிருந்தது. அப்படியானால் ஏன் கலைஞர் கருணாநிதி சென்னை சங்கமச் செலவுக்கான தன் நன்கொடை ஒரு கோடி ரூபாயை அரசிடம் தராமல் தமிழ் மையத்திடம் கொடுத்திருக்கிறார் ?

**இந்த வாரப் பூச்செண்டு:**

பல மூத்த இலக்கியவாதிகள், கலைஞர்கள், 'அறிவுஜீவிகள்' எல்லாம் கூச்சமும் சுரணையும் இல்லாமல் பங்கேற்கும்போது, "சுயவிளம்பரத்திற்காகவும், அரசியல் பாதுகாப்பிற்காகவும், குற்றச்சாட்டினை மறைப்பதற்காகவும், வருவாய் ஈட்டுவதற்காகவும் கலையையும், இலக்கியத்தையும் பயன்படுத்துவதற்கு எதிராக இந்த ஆண்டு நடைபெறும் சென்னை சங்கமத்தின் கவிதைச் சங்கமத்தில் நான் கலந்து கொள்ளப் போவதில்லை" என்று அறிவித்துப் புறக்கணித்திருக்கும் கவிஞர் வா. மணிகண்டனுக்கு இ.வா.பூ

**இந்த வாரத் திட்டு:**

உச்ச நீதி மன்றத்தின் எந்த உத்தரவையும் மதிக்காமல் தொடர்ந்து ஜல்லிக்கட்டு நிகழ்ச்சிகளை முறைகேடுகளுடன் நடத்துவோர் மீது நடவடிக்கை எடுக்காமல் அவர்களை அனுமதித்து பலரும் சாகவும் காயப்படவும் காரணமாக இருந்து வரும் தமிழக அரசுக்கு இ.வா.தி.

*கல்கி 22.1.2011*

# இரண்டு
# குடும்பக் கவலைகள்

தலைப்புக்கும் தமிழக அரசியலுக்கும் தொடர்பில்லை. சாதாரண மனிதர்களாகிய நம் எல்லார் குடும்பங்களும் கவலைப்பட வேண்டிய இரு கவலைகள் பற்றி இந்த வாரம்.

**கவலை 1:**

என் இளம் நண்பர்கள் தமக்குக் குழந்தை பிறந்ததைச் சொன்னதும் நான் வாழ்த்து சொல்லிவிட்டு அடுத்து மறக்காமல் குழந்தையின் தாயிடம் வற்புறுத்திச் சொல்லும் விஷயம் ஒன்றே ஒன்றுதான். குறைந்தது ஒரு வருட காலத்துக்கு குழந்தைக்குத் தாய்ப்பால் தருவது அவசியம். நேரில் சென்று குழந்தையைப் பார்க்கும் தருணங்களில், தாய்க்கு பரிசாக தாய்ப்பால் சுரப்பை ஊக்குவிக்கும் கால்ஷியம் மாத்திரைகளைப் பரிசாகத் தருவதை ஒரு காலத்தில் பின்பற்றி வந்தேன்.

ஒரு தாய் தன் குழந்தைக்கு ஆயுட்காலம் முழுமைக்குமாகத் தரக்கூடிய ஒரே பரிசு தாய்ப் பால்தான். நோய் எதிர்ப்பு சக்தியை குழந்தைக்கு ஏற்படுத்தித் தர அதை விட சிறந்த வேறொன்று இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.

ஆனால் தாய்ப்பால் தருவதை ஒரு சில வாரங்களிலோ மாதங்களிலோ நிறுத்திவிடும் அவல நிலையைப் பல குடும்பங்களில் அடிக்கடி பார்க்கிறேன். எய்ட்ஸ், பால் ஒவ்வாமை போன்ற தீவிரமான மருத்துவ காரணங்கள் அபூர்வமானவை. மற்றபடி சொல்லப்படும் சமாதானங்கள் அர்த்தமற்றவை. அதில் முக்கியமானது பால் சுரக்கவில்லை என்பது. குழந்தை குடிக்கக் குடிக்கத்தான் பால் சுரக்கும். தாய் ஆரோக்கியமான உணவுகளை

சாப்பிட்டால்தான் பால் சுரக்கும். இளம் தாய்க்கு மகிழ்ச்சியான மனநிலையும், குறைவான வேலை பளுவும் இருப்பது அவசியம்.

குடும்பத்தின் இதர உறுப்பினர்கள் கணவன், மாமனார், மாமியார், இன்னும் ஒரே கூரையின் கீழ் இருக்கக்கூடிய இதர சொந்தங்கள் எல்லாரும் ஒத்துழைத்தால்தான் ஒரு பெண் நிம்மதியாகக் குழந்தைக்கு தாய்ப்பால் தரமுடியும். வெளி வேலைக்குப் போகக்கூடிய பெண்களுக்கு அலுவலகத்தில் குழந்தைக் காப்பகங்கள் தேவைப்படுகின்றன. இவற்றில் எல்லாம் அக்கறை காட்டாத சமூகம், கடைசியில் நோயாளிகள் நிறைந்த சமூகமாகத்தான் முடியும்.

தாய்ப்பால் ஒரு குழந்தைக்கு தடங்கலின்றிக் கிடைப்பதற்கு பெரிய எதிரியாக இருப்பது பேபி ஃபுட் எனப்படும் பால் பவுடர் சமாச்சாரங்கள்தான். எளிதில் கலக்கி புட்டியில் கொடுத்துவிடும் வசதிக்காக இதை குழந்தை பிறந்த சில வாரங்களிலேயே சிலர் ஆரம்பித்துவிடுகிறார்கள். குழந்தைக்கு பேபி ஃபுட்டின் சுவை கிடைத்துவிட்டால், தாய்ப்பால் பிடிக்காமல் போய்விடும். அறுபதுகள் முதல் எழுபதுகள், எண்பதுகள் வரை பல மருத்துவர்கள், கொழு கொழு குழந்தை தேவை என்ற பெற்றோரின் ஆசையைப் பயன்படுத்தும் பேபி ஃபுட் நிறுவனங்களின் ஏஜண்ட்டுகளாகவே வேலை பார்த்தார்கள். இது தவறு என்ற விழிப்பு உணர்ச்சி மருத்துவத்துறையில் இன்று ஆழமாக பதிந்திருக்கிறது.

ஆனால் பேபி ஃபுட் கம்பெனிகள் இன்றும் பல விதங்களில் தாய்ப்பாலுடன் போட்டி போட்டு அதை முறியடிக்க முயன்றுகொண்டே இருக்கின்றன. அவை தம் விளம்பரங்களில் தாய்ப்பாலுக்கு நிகரானது என்றோ, தாய்ப்பாலின் அத்தனை நலங்களும் அடங்கியது என்றோ சொல்வது துளிக் கூட உண்மையல்ல என்பது எல்லாருக்கும் தெரியும். தாய்ப்பாலுக்கு நிகரான எதுவும் இன்னும் மனிதனால் கண்டுபிடிக்கப்படவில்லை.

இந்தச் சூழ்நிலையில் நான்கு இந்திய பல்கலைக்கழகங்களுடன் பேபி ஃபுட் தயாரிக்கும் நெஸ்லே கம்பெனி போட்டிருக்கும் ஒப்பந்தம் கவலை தருகிறது.

கிராமங்களில் இருக்கும் அரசாங்கப்பள்ளிகளில் படிக்கும் வளர் இளம் பருவப் பெண்களுக்கு சத்துணவு பற்றிய அறிவைப் புகட்டுவதற்கான திட்டத்தை இந்த கம்பெனி பஞ்சாப் விவசாயப் பலக்லைக்கழகம், ஹரியானா பால் வள மேம்பாட்டு நிலையம், மைசூர் பல்கலைக்கழகம், உத்தரகண்ட் ஜி.பி.பந்த் விவசாயப் பல்கலைக்கழகம் ஆகிய பொது அமைப்புகளின் உதவியுடன் நிறைவேற்றும் என்பதே ஒப்பந்தம். அடுத்த சில வருடங்களில் தாய்மையை அடையும் வாய்ப்பில் இருக்கும் இளம் பெண்களை

முன்கூட்டியே வசப்படுத்தி பிரசாரம் செய்வதே அசல் நோக்கமாக இருக்க முடியும்.

ஏனென்றால் சத்துணவு பற்றிய விழிப்புணர்வு வகுப்பில் என்ன சொல்லித்தரப் போகிறீர்களென்று கேட்டால், அந்த விவரங்களைத் தர கம்பெனியும் பல்கலைக்கழகங்கங்களும் மறுத்துள்ளன. தகவலறியும் உரிமைச் சட்டத்தின் கீழ் , பள்ளிச் சிறுமிகளுக்கு நடத்தப் போகும் வகுப்புகள் பற்றிய விவரங்களைத்தரும்படி பஞ் சாப் பல்கலைக்கழகத்தை , இந்திய தாய்ப்பால் ஊக்குவிப்பு கூட்டமைப்பு கோரியது. விவரங்களைத் தெரிவிக்கலாமா என்று பல்கலைக்கழகம் நெஸ்லே கம்பெனியின் அனுமதி கேட்டது. அது அனுமதி மறுத்துவிட்டது. ஒப்பந்த விவரங்கள் ரகசியமானவை; அவற்றை வெளியிடமுடியாது என்று பல்கலைக்கழகமும் பதில் சொல்லிவிட்டது. நெஸ்லே கம்பெனியின் அதிகாரிகள், பல்கலைக்கழகத்துக்கு எழுதிய கடிதத்தில் தங்கள் சத்துணவு திட்டம் பற்றிய விவரங்களை வெளியிட்டால் தங்கள் வர்த்தக நலன்கள் பாதிக்கப்படும் என்றும் போட்டியாளர்களுக்கு சாதகம் ஏற்படும் என்றும் தெரிவித்திருக்கிறார்கள். பள்ளிச் சிறுமிகளுக்கு ஊட்டச்சத்து பற்றி வகுப்பு எடுப்பதில் கம்பெனியின் வர்த்தக நலன் எங்கே வருகிறது ?

இந்த திட்டத்துக்காக பல்கலைக் கழகத்துக்கு கம்பெனி தரும் பணம் வெறும் இரண்டரை லட்சம் ரூபாய். ஆனால் தொலை நோக்கில் இதன் விளைவுகள் ஆபத்தானவை. கிராமப்புறங்களில் தாய்ப்பால் பழக்கத்தை குறைத்தால்தான் பேபிஃபுட் விற்பனையை அங்கே அதிகரிக்கமுடியும் என்ற வர்த்தக நோக்கத்துக்காக, சமூக அக்கறை , விழிப்புணர்வு என்ற புதிய ரூட்டுகளை கம்பெனிகள் பயன்படுத்த அனுமதிப்பது மிக மிக ஆபத்தானது.

**கவலை 2:**

இது நம் வீடுகளில் பயன்படுத்தும் காய்கறிகள், கனிகள் பற்றிய கவலை. அவற்றின் விலை உயர்வதைப் பற்றியல்ல. எவ்வளவு மலிவான விலைக்கு விற்றாலும் சரி, நாம் வாங்குவது காய்கனியா,விஷமா என்ற பிரச்சினையைப் பற்றியது இந்தக் கவலை.

டெல்லியைச் சேர்ந்த கன்ஸ்யூமர் வாய்ஸ் என்ற நுகர்வோர் நல அமைப்பு நாடு முழுவதும் விற்கப்படும் காய்கள், பழங்களில் மாதிரிகளை எடுத்து பரிசோதித்தது.

சோதனை முடிவுகள் பயங்கரமாக இருந்தன. இந்தியாவில் எப்போதோ தடைசெய்யப்பட்ட பூச்சி மருந்துகளின் எச்சங்கள் எல்லாம் பல காய், கனிகளில் இருந்தன. அதாவது இந்த

பூச்சிக் கொல்லி விஷங்கள் இன்னமும் பயன்பாட்டில் இருந்துகொண்டிருப்பதை இது காட்டுகிறது.

பூச்சிக் கொல்லி விஷங்களின் எச்சம் எந்த அளவு வரை இருந்தால் மனிதர்களுக்கு ஆபத்தில்லை என்று ஐரோப்பிய யூனியன் வரையறுத்திருக்கிறது. இந்தியாவில் சோதித்த காய் கனிகளில் அந்த அளவு ஐரோப்பாவில் அனுமதித்த அளவை விட 750 மடங்கு அதிகமாக இருக்கிறது. காலிபிளவர், வெண்டைக்காய், கத்தரிக்காய், பாகற்காய், கீரை, உருளைக்கிழங்கு, வாழைப்பழம், ஆப்பிள் ,திராட்சைஎன்று பலவற்றிலும் பூச்சி கொல்லி விஷக்கழிவின் அளவு அதிகமாகவே உள்ளது.

இதைல் பாரதியான்,,க்ளோர்டென், எண்ட்ரின், ஹெப்டகோர் முதலிய இந்த பூச்சிக் கொல்லி விஷ எச்சங்களை காய்கனிகளுடன் சேர்த்து நாம் உட்கொண்டால், நரம்பு நோய்கள்,தோல் நோய்கள், சிறுநீரக பாதிப்பு, புற்று நோய் போன்ற சிக்கல்கள் ஏற்படும் வாய்ப்பு அதிகரிக்கும்.

இது பற்றிய ஒரு பொது நல வழக்கை டெல்லி உயர் நீதி மன்றம் தற்போது விசாரித்து வருகிறது. அரசுக்கு விளக்கம் கோரி நோட்டீஸ்கள் அனுப்பியுள்ளது. இப்படிப்பட்ட பிரச்சினைகளில் நம் கவனம் குவியாமல், மேலெழுந்தவாரியானவற்றில் ஆர்வம் காட்ட நம்மை திசை திருப்பும் வேலையை நம் அரசியல்வாதிகளும் மீடியாக்களும் செய்துவருகின்றன. பேபி பவுடர், பூச்சிமருந்து தயாரிக்கும் நிறுவனங்கள் பிரும்மாண்டமான பன்னாட்டு கம்பெனிகள் என்பதால் செய்திகளி தமக்கு சாதகமாக திரிக்கவும் மறைக்கவும் தங்கள் வணிக செல்வாக்கை அவற்றால் பயன்படுத்த முடிகிறது.

இப்போதைக்கு நமக்குள்ள உடண்டி தீர்வுகள்: ஒவ்வொரு குடும்பமும் தாய்ப்பால் கொடுப்பதில் பிடிவாதம் காட்டும் குடும்பமாக மாற வேண்டும். காய் கனிகளை நன்றாகக் கழுவிவிட்டு, தடித்த தோல்களை நீக்கிவிட்டு சாப்பிடுவதன் மூலம் பூச்சிக் கொல்லிக் கழிவின் விளைவுகளைக் குறைக்கலாம்.

தொலை நோக்குத் தீர்வு: இத்தகைய அடிப்படைப் பிரச்சினைகளில் ஆர்வமுள்ள நேர்மையான அரசியல்வாதிகளையும் மீடியாவையும் நம் குடும்பங்களில் இருந்து உருவாக்க நாம்தான் பாடுபடவேண்டும்.

## இந்த வாரத் திட்டு

கறுப்புப் பணத்தை ஸ்விஸ் முதலிய வெளி நாட்டு வங்கிகளில் வைத்திருப்போர் பெயர்களை இந்திய அரசுக்குத் தெரிந்தாலும் வெளியிட மறுக்கும் பிரதமர் மன்மோகன்சிங்குக்கு இ.வா.தி.

## இந்த வாஃர மகிழ்ச்சி

தலைவர் பதவியா, முதலமைச்சர் பதவியா எதில் மகிழ்ச்சி என்றால் தலைவர் என்பதில்தான் என்ற முடிவை விரைவில் எடுப்பேன் என்று முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி அறிவித்திருப்பது இ.வா.ம. இதைச் செய்யும்படி சுமார் நான்கு வருடங்கள் முன்பே நான் சொன்னபோது கேட்டிருந்தால், ஸ்பெக்ட்ரம் தலைவலிகள் எல்லாம் வராமல் தப்பித்திருக்கலாம்.

## இந்த வாரத் தகவல்

2009ல் ஈழத் தமிழர் பிரச்சினையில் மத்திய அரசின் அலட்சியத்தைக் கண்டித்து தன் எம்.பி. பதவியை ராஜினாமா செய்வதாக முதலமைச்சரிடம் கடிதம் கொடுத்த அன்று கனிமொழி செய்த மற்றொரு காரியம் என்ன தெரியுமா? நீரா ராடியாவிடம் யாருக்கு எந்த இலாகா என்று பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருந்தார்.

***கல்கி 29.1.2011***

# மூன்றெழுத்து..!

"மூன்றெழுத்தில் என் மூச்சிருக்கும். அது முடிந்தபின்னாலும் பேச்சிருக்கும்" என்று ஒரு பிரபலமான எம்.ஜி.ஆர் பாடல் இருக்கிறது. அந்த மூன்றெழுத்து குறிப்பது தி.மு.கவை என்று அப்போது பலர் கருதினார்கள். ஆனால் அப்படி பகிரங்கமாக அரசியல் பாட, தணிக்கைக் குழு அனுமதிக்காது என்பதால்தான், அதை 'கடமை' என்ற மூன்றெழுத்து என்று பாடலாசிரியர் சாமர்த்தியமாக மாற்றி எழுதினார் என்றும் சொல்வார்கள்.

தமிழர் மனதை ஆக்ரமிக்கும் மூன்று மூன்றெழுத்து விஷயங்களைப் பற்றி சென்னைப் புத்தகக் கண்காட்சியில், என் அரங்கில் நடத்திய தினசரி கருத்துக் கணிப்பு தேர்தலில் மக்கள் கருத்தைக் கேட்டிருந்தோம்.

தமிழ்நாட்டை அலைக்கழிக்கும் மூன்று மூன்றெழுத்து விஷயங்களில் முதன்மையானது இன்று , 'செக்ஸ்' என்றே எனக்குத் தோன்றுகிறது. காலை தினசரிகளில் 'கள்ளக் காதல்' செய்திகள் வராத நாளே இல்லை. பெரும்பாலான கொலை நிகழ்வுகள், திருமணத்துக்கு வெளியே இருக்கும் ஆண்பெண் உறவுகளுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

இந்தியாவில் வேறு எந்த மாநிலத்திலும் ஒரு முதலமைச்சர் அதிகாரப்பூர்வமாக மனைவி, துணைவி இருவருடனும் நகர்வலம் வருவதைப் பார்க்கவும் முடியாது. பொது மக்கள் அதை சகஜமானதாக ஏற்றுக் கொண்டிருப்பதையும் காண முடியாது. திருமணத்துக்கு வெளியே ஏற்பட்ட இன்னொரு உறவை, திருமணத்துக்கு பாதிப்பு ஏற்படாமலும், கொலை போன்ற வன்முறைகளில் முடியாமலும், அமைதியான சமரசத்தின் மூலம் தீர்த்துக் கொண்டு மகிழ்ச்சியாக வாழும் சாமர்த்தியம் தமிழர்களால் போற்றப்படுகிறது என்றே இதைப் புரிந்துகொள்கிறேன்.

பெருவாரியான தமிழர்களுக்கு அந்த திறமை இல்லை.

அன்றாட செய்திகளில் காணும் கள்ளக் காதல் சார்ந்த சூழ்ச்சிக் கொலைகள், ஆண்பெண் உறவு தமிழ்ச் சமூகத்தில் பெரும் சிக்கலாக இருப்பதையே உணர்த்துகின்றன.

காமம் சராசரி தமிழருக்கு புனிதமாக இல்லாவிட்டாலும் புதிராகவே இருக்கிறது. காதலும், ஆபாச அசைவுகளுடன் பாட்டு நடனக் காட்சிகளும் இல்லாமல் தமிழ்ப் படம் வருவதென்பது, ஸ்விஸ் வங்கிக் கணக்கு அம்பலமாவதைப் போல அபூர்வமாக இருக்கிறது. பொறுக்கிகள் கதாநாயகர்களாக ஆக்கப்படுவதை தமிழ் ரசிகர்கள் மனமொப்பி வரவேற்கிறார்கள். பெண் உடல் ஆணின் இச்சைக்கு என்றே தயாரிக்கப்பட்டிருக்கிறது என்று சிறு வயதிலிருந்தே நம்பும் மனநிலையை தமிழ் சிறுவர்களின் திரை ரசனை ஊக்குவிக்கிறது. அரசியலிலும் செக்ஸ் சார்ந்த பிரயோகங்கள் தமிழகத்தைப் போல வேறு எந்தப் பகுதியிலும் இல்லை. திருமதியா, திருமதி இல்லையா என்ற சர்ச்சையை இங்கு மட்டுமே பார்க்க முடியும்.

கிராமங்களில் பணி புரியும் பல தொண்டு நிறுவனங்களின் அனுபவங்களிலிருந்து பார்த்தால், படிப்பறிவற்ற ஏழைச் சிறுமி ஒருத்தி உடல் வேட்கையால் திருமணத்துக்கு முன்பே கருவுற்று அதைக் கலைக்கும் சிக்கலுக்கு ஆளாகும் ஆபத்து கடந்த பத்தாண்டுகளில் அதிகரித்தே வந்திருக்கிறது. நகரங்களில் தடுப்பு முறைகள் பற்றிய அறிவு கூடுதலாக இருப்பதால், அத்தகைய சிக்கல்கள் இல்லை எனினும், ஆண்பெண் உறவுகள் பற்றிய குழப்பம் விடலைப்பருவத்தினர் மத்தியில் கடுமையாகவே இருக்கிறது.

ஊடகங்களும் பத்திரிகைகளும் இவற்றைத் தணிப்பதற்கு பதில் கூட்டவே செய்கின்றன. எய்ட்ஸ் பிரசார ரயில் சென்னைக்கு வந்தபோது, சினிமா பகுதியில் ஆபாசப் படங்களையும் குறிப்புகளையும் வெளியிடுவதை வாடிக்கையாக வைத்திருக்கும் ஒரு தினசரி, குடும்பத்துடன் போய் பார்க்க முடியாத ரயில் என்றும் அதில் இருக்கும் உடல் பாக படங்கள் ஆபாசமானவை என்றும் எழுதியது.

இப்படிப்பட்ட சூழலில் ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும் தத்தம் உடல் வளர்ச்சி மாற்றங்களைப் புரிந்துகொள்ளவும், உளச் சிக்கல்களைப் புரிந்துகொள்ளவும், ஆண்பெண் உறவுகளை ஆரோக்கியமாக அணுகப் புரிந்துகொள்ளவும் தேவைப்படும் வாழ்க்கைக் கல்வி எனப்படும் செக்ஸ் கல்வி அவசியமாகிறது.

பள்ளிக் கூடத்தில் செக்ஸ் கல்வியை எந்த வகுப்பில் அறிமுகப்படுத்தலாம் என்று என் புத்தக அரங்கில் நடத்திய

கருத்துக் கணிப்பு தேர்தலில் கேட்டோம். அப்படி ஒரு கல்வியே தேவையில்லை என்று வாக்களித்தவர்கள் வெறும் 4 சதவிகிதம்தான். 96 சதவிகிதம் பேர் கல்வி தேவை என்றே வாக்களித்திருக்கிறார்கள். அதில் 56 சதவிகிதம்பேர் எட்டாம் வகுப்பில் தொடங்கலாம் என்றும் 40 சதவிகிதம் பேர் ப்ளஸ் ஒன்னில் தொடங்கலாம் என்றும் தெரிவித்திருக்கிறார்கள்.

பலருக்கும் இது ஆச்சரியத்தைத் தரக் கூடும் என்றாலும் எனக்கு இதில் ஆச்சரியமில்லை.ஏனென்றால் கடந்த சில வருடங்களாகவே பல பொது இடங்களில் என்னை சந்திக்கும் இளம் பெற்றோர்கள், இளைஞர்கள் பலரும் என்னிடம் என் அரசியல் கருத்துகளைப் பற்றிப் பேசுவதற்கு சமமாக நான் எழுதிய வாழ்க்கைக் கல்வி நூல்களைப் பற்றிப் பேசுகிறார்கள். சக இளைஞர்களுக்கு பரிசு தருவதாகவும் தங்கள் குழந்தைகளுக்கே பரிசாகத் தருவதாகவும் பலரும் தெரிவித்திருக்கிறார்கள். “எங்களால் பேசி புரியவைக்க முடியாததை எல்லாம் அந்தப் புத்தகம் மூலம் சொல்ல முடிகிறது” என்கிறார்கள். வாழ்க்கை/செக்ஸ் கல்விக்கான தேவை நம் சமூகத்தில் கடுமையாக இருப்பதையே அந்த உரையாடல்களும் இந்த புத்தகத் திருவிழா கருத்துக் கணிப்பும் உணர்த்துகின்றன.

தமிழர்களின் உயிர் இருக்கும் இன்னொரு மூன்றெழுத்து சினிமா.

நடிகனின் பட அட்டை மீது குடம் குடமாகப் பாலைக் கொட்டி ஆராதிக்கும் முட்டாள்களை இங்கேதான் அதிகமாகப் பார்க்க முடியும். அடுத்த முதலமைச்சரை தன் தெருவில் தன் ஊரில் தேடிக் கண்டுபிடிக்காமல், கொட்டகைத் திரையில் தேடுபவர்களும் இங்கேதான் அதிகம்.

அண்மைக் காலமாக தமிழ் சினிமாவில் காமத்தை மீறும் விதத்தில் வன்முறை அதீத இடம் பெற்றுவருகிறது. காதலே வன்முறையாகத்தான் படங்களில் நடக்கிறது. அது தவிர, ஒருவரையொருவர் வெட்டிக் கொல்லும் காட்சிகள் கொடூரமான முறையில் காட்சிப்படுத்தப்படுகின்றன. கொல்லுகிற விதம், அதில் இருக்கும் ‘புத்திசாலித்தனம்’, கொல்லப்படும்போது உடல் உறுப்புகள் சிதைக்கப்படும் முறை எல்லாம் விவரமாகக் காட்டப்படுவது அதிகரித்து வருகிறது.

இந்த சூழலில், திரைப்படங்களில் வரும் வன்முறைக் காட்சிகள் இளம் மனங்களை பாதிக்கின்றனவா, இல்லையா என்று கருத்துக் கணிப்பு தேர்தலில் ஒரு நாள் கேட்டோம். பாதிக்கின்றன என்று சொன்னவர்கள் 79 சதவிகிதம் பேர். நிஜ வாழ்க்கையை பிரதிபலிப்பதால் பாதிக்காது என்றவர்கள் 16 சதவிகிதம் பேர்.

பாதிக்குமா, பாதிக்காதா என்று தெரியவில்லை என்றவர்கள் 5 சத விகிதம் பேர். எந்தப் பொறுப்புணர்ச்சியும் இல்லாமல் இயங்கும் சினிமாக்காரர்களும், அவர்களை ஒழுங்குபடுத்த வேண்டிய தணிக்கைக் குழுவும் கவனிக்க வேண்டிய செய்தி இது.

தமிழர்களின் உயிர் உண்மையில் நமது மொழியான மூன்றெழுத்துச் சொல் தமிழ் தான் !

ஆனால் கடந்த முப்பதாண்டுகளாக, பள்ளிக்கூடத்தில் தமிழ்வழிக் கல்வி ஏழைகளுக்கும் தலித்துகளுக்கும் மட்டுமேயானது என்று ஆக்கப்பட்டிருக்கும் கொடுமை நிகழ்ந்திருக்கிறது. ஏழைகளும் தலித்துகளும் செல்லும் அரசுப் பள்ளிகளில் மட்டுமே தமிழில் எல்லாப் பாடங்களும் கற்றுத் தரப்படுகின்றன. இந்தப் பள்ளிகளில் பெருவாரியானவற்றின் தரம் படுமோசமானது. பிரதாம் அமைப்பு அண்மையில் வெளியிட்ட ஆய்வறிக்கையின்படி, தமிழ்நாட்டில் மூன்றாம் வகுப்பு முடித்த குழந்தைகளில் முதல் வகுப்புப் பாடத்தைப் படிக்கத் தெரியாத குழந்தைகள் 70 சதவிகிதத்துக்கும் அதிகம். இதே போல மூன்றாம் வகுப்பில் கழித்தல் கணக்கு தெரியாத குழந்தைகளும் 70 சதவிகிதத்துக்கும் அதிகம். ஐந்தாம் வகுப்பில் இரண்டாம் வகுப்பு பாடத்தைப் படிக்கத் தெரியாத குழந்தைகள் 60 சதவிகிதத்துக்கும் அதிகம். வகுத்தல் கனக்கு தெரியாதவர்கள் 70 சதவிகிதம்.

பலரும் கொண்டாடும் அப்துல் கலாம் உட்பட அறுபதுகளுக்கு முன்னர் தமிழகப் பள்ளிகளில் படித்து சாதனை புரிந்திருக்கும் அனைவரும் தமிழ் மீடியத்தில் படித்தவர்கள்தான். ஆனால் அந்தக் குடும்பங்களின் அடுத்தடுத்த தலைமுறைகள் ஆங்கில மீடியத்துக்குப் போய்விட்டார்கள். மெல்ல தமிழ் மீடியம் என்பது ஏழைகளுக்கானது என்றாக்கப்பட்டுவிட்டது. ஆங்கிலம் நமக்குத் தேவைதான். ஆனால் ஒரு மொழியாக மட்டுமே தேவை. எல்லா பாடங்களையும் தாய் மொழியில் படித்தால்தான் பதியும் என்றும் அவை குறித்து சிந்திக்கும் ஆற்றல் பெருகும் என்றும் உலக அள்வில் பல அறிஞர்கள் சொல்லிவந்திருக்கிறார்கள்.

தமிழில் படித்தவர்களுக்கு 20 சத விகித அரசு வேலைகளை ஒதுக்கீடு செய்யப்போவதாக அண்மையில் தி.மு.க அரசு அறிவித்தது. இது நிச்சயம் வரவேற்கவேண்டிய நடவடிக்கைதான். அதே சமயம் தமிழ் மீடியம் பள்ளிகளான அரசுப் பள்ளிகளின் தரத்தை உயர்த்த அவற்றில்தான் கல்வி அமைச்சர் முதல் கல்வி இயக்குநர்,ஆசிரியர்கள் வரையிலானோரின் குடும்பத்தினர் படித்தாக் வேண்டும் என்ற விதியை ஏற்படுத்த வேண்டும். அப்போதுதான் தரத்தை சரி செய்வார்கள்.

தமிழில் படிப்பது பற்றி மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்று கருத்துக் கணிப்பு நடத்தினோம். எல்லா பாடங்களும் தமிழில் கற்பிக்கப்படவேண்டும். ஆங்கிலத்தை மொழிப் பாடமாகப் படிக்கலாம் என்றவர்கள் 63 சத விகிதம் பேர். எல்லா பாடங்களையும் ஆங்கிலத்தில் கற்பித்து, தமிழை மொழிப் பாடமாக மட்டும் படிக்கலாம் என்றோர் 37 சதவிகிதம். தமிழ் வழிக் கல்விக்கான ஆதரவு கடந்த பத்தாண்டுகளுக்கு முன்பிருந்ததை விடப் பெருகியிருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது.

எங்கள் கருத்துக் கணிப்பு முடிவுகள் எதிர்காலம் பற்றி நம்பிக்கையூட்டுகின்றன, நிகழ்காலம் எப்படி இருந்தபோதும்.

*சூரியக்கதிர் 1.2.2011*

# திருப்பூரைக் காப்பாற்ற என்ன செய்ய வேண்டும் ?

முதலில் இந்த வார...இல்லையில்லை இந்த பத்தாண்டுகளுக்கான பூச்செண்டை சென்னை உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி இக்பால், நீதிபதி சிவஞானம் ஆகியோருக்கு அறிவித்துவிடுகிறேன்.கடந்த இருபதாண்டுகளாக நொய்யல் ஆற்றை சாயக்கழிவுகளால் கெடுத்து நாசமாக்கி, லட்சக்கணக்கான விவசாய நிலங்களையும் விவசாயிகள் வாழ்க்கையையும் வீணாக்கிய திருப்பூர் சாயப்பட்டறைகளை உடனடியாக மூடிவிட்டு, ஒவ்வொரு பட்டறையும் ஒரு சொட்டுக் கழிவையும் வெளியில் அனுப்பாத நிலையை அடைந்தபின்னரே திறக்க அனுமதிக்கப்பட வேண்டும் என்று நீதிபதிகள் பிறப்பித்திருக்கும் உத்தரவு வரலாற்றுச் சிறப்பு மிக்கது.

அது மட்டுமல்ல. சீரோ டிஸ்சார்ஜ் என்று சொல்லிக் கொண்டு சூழலை இதுவரை மாசுபடுத்தி வந்த பட்டறைகளை இத்தனை வருடம் அனுமதித்த தமிழக அரசின் மாசுக் 'கட்டுப்பாட்டு' வாரியத்தின் அதிகாரிகள் பட்டியலைத் தயாரித்து அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க்வேண்டும் என்றும் நீதிபதிகள் அரசுக்கு உத்தரவிட்டிருக்கிறார்கள். இதற்கெதிராக மறு பரிசீலனை மனு போடுவோம் என்று வாரியம் சொல்லியிருப்பது வெட்கக்கேடானது.

இது தேர்தல் நேரமென்பதால், நீதிமன்ற உத்தரவுகளை நடைமுறையில் நீர்த்துப் போகச் செய்து சாயப்பட்டறை அதிபர்களை சந்தோஷப்படுத்தும் முயற்சிகளில் அரசியல் கட்சிகள் இறங்கும் வாய்ப்பு அதிகமாக இருக்கிறது. ஏற்கனவே 'சூழலைக் கெடுத்தவன்தான் இழப்பீட்டைக் கொடுக்க வேண்டும்' என்ற தெளிவான உச்ச நீதிமன்ற தீர்ப்புகளுக்கு முரணாக, தமிழக அரசு பொது மக்களின்

வரிப்பணத்தை, சுற்றுச்சூழலை மாசுபடுத்தியவர்களுக்கு மான்யமாக வழங்கிக் கொண்டிருக்கிறது. இதுவரை 320 கோடி ரூபாய் மக்கள் பணத்தை அளித்திருக்கிறது. இது போதாது, இன்னும் வேண்டும் என்று நதி முழுங்கி சாயக்காரர்கள் கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள். ஆற்றை மட்டுமல்ல, கடலையும் கெடுப்போம் என்று திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறார்கள்.( கல்கி நவம்பர் 2010 ஓ பக்கங்கள்)

உடனடியாக ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் பாதிக்கப்படுவார்கள்; உற்பத்தி பாதிக்கப்படும்; அந்நியச் செலாவணி சம்பாதிப்பது பாதிக்கப்படும் என்ற கூக்கூரல்களை எழுப்பி நீதி மன்ற உத்தரவை நீர்க்கச் செய்யும் வேலைகளில் தொழிலதிபர்கள் இறங்குவார்கள். இந்த மிரட்டல்களுக்கு மக்களோ அரசோ அடிபணியக் கூடாது. தொழிலாளர்கள் பெயரைச் சொல்லி பூச்சாண்டி காட்டி ஏற்கனவே ஆயிரக்கணக்கான விவசாயக் கூலிகளையும் விவசாயிகளையும் கடுமையாக பாதிப்புக்கு உள்ளாக்கியவர்கள் இவர்கள். திருப்பூரில் கோடி கோடியாக சம்பாதித்தாலும், விவசாயத்தை சாகடித்துவிட்டு, டைனிங் டேபிளில் தட்டில் சாயப் பட்டறையின் சோடா உப்பையும் குளோரைடையும் பரிமாறினால் உணவாக யாரும் சாப்பிடமுடியாது. நெல்லும் பருப்பும் உற்பத்தி செய்தே ஆகவேண்டும்.

நீதிபதிகள் இக்பால், சிவஞானம் ஆகியோரின் உத்தரவில் உள்ள முதல் முக்கியமான அம்சம் பற்றி கொஞ்சம் ஆழமாகப் பார்ப்போம். ஒரு சொட்டு கூடக் கழிவை வெளியேற்றாமல் சீரோ டிஸ்சார்ஜ் நிலையை சாதித்தால் மட்டுமே ஒரு சாயப்பட்டறையை திரும்பவும் இயங்க அனுமதிக்கலாம் என்பதே நீதிபதிகளின் உத்தரவு.

இப்போதுள்ள சுத்திகரிப்பு நிலையங்களால் சீரோ டிஸ்சார்ஜ் நிலையை எட்டவைக்க முடியவே முடியாது என்பதே அறிவியல்படியான உண்மை நிலை.சாயக் கழிவுகளில் வரும் நீரை மட்டுமே இவை சுத்தப்படுத்துகின்றன. ரிவர்ஸ் ஆஸ்மாசிஸ் எனப்படும் ஆர்.ஓ நிலையங்கள் இவை. நீரை எடுத்த பிறகு திடக் கழிவுகளை சாக்குப் பைகளில் கட்டி, பட்டறை வளாகத்திலேயே வைத்துக் கொள்ள வேண்டியதுதான். அப்படித்தான் வைத்து வருகிறார்கள்.சோடா உப்பு, குளோரைடுகள், இதர ரசாயனங்களின் திடக்கழிவுகள் இவை.

ஆர்.ஓ முறையில் பயன்படுத்தும் சவ்வுகள் இரு வருடங்களுக்கு மேல் தாக்குப் பிடிக்காதவை. உண்மையில் இவை கடல் நீரில் இருக்கும் உப்பை அகற்றி நல்ல நீராக்கும் வேலைக்கே சாலச் சிறந்தவை. துணிகளுக்கு சாயம் போடும் பட்டறைகளில்,

துணியை வெளுப்பதிலிருந்து ( பிளீச்சிங்), வண்ணம் ஏற்றுவது வரைப் பயன்படுத்தும் பல்வேறு ரசாயனங்களுக்கு உகந்தவையே அல்ல.

இது மாசுக் கட்டுப்பாட்டு வாரியத்துக்கும் பட்டறை அதிபர்களுக்கும் தெரியாதது அல்ல. அதனால்தான் புத்திசாலித்தனமாக நீதிமன்றம் முன்பு வைக்கும் ஆவணங்களில் தொடங்கி, எல்லா இடத்திலும் சீரோ டிஸ்சார்ஜ் என்று சொல்லாமல் சீரோ லிக்விட் டிஸ்சார்ஜ் என்று மட்டும் சொல்லிக் கொள்கிறார்கள். அதாவது திரவக் கழிவு மட்டும் நிறுத்தப்படும். திடக்கழிவு ? கோணிப் பையில் கட்டிக் கட்டி வாரிசுகளுக்கு சொத்தாகக் கொடுத்துவிட்டுப் போக வேண்டியதுதான்.

அப்படியானால் திடக்கழிவையும் வெளிவிடாமல் சுத்திகரிக்கும் முறை இல்லையா? இருக்கிறது என்று தமிழகத்தை சேர்ந்த ஒரு விஞ்ஞானியே பைலட் ப்ளாண்ட் வைத்து செய்து காட்டியிருக்கிறார். தற்போது 77 வயதாகும் டாக்டர் எஸ்.ஆர்.ராமசாமி அமெரிக்காவில் விஞ்ஞான தொழில்நுட்ப ஆலோசகராக இருக்கிறார். தன் உருவாக்கங்களுக்காக ஐந்து அமெரிக்க காப்புரிமைகள் ( பேடண்ட்டுகள்) பெற்றவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகம், கரக்பூர் ஐ.ஐ.டி, லூயிவில்லி பல்கலைக்கழகம், லண்டன் பலகலைக்கழகங்களிலெல்லாம் படித்தவர்.

நேரடி ஆவியாக்கும் முறைப்படி இவர் உருவாக்கியிருக்கும் சுத்திகரிப்பு முறையில் திரவக்கழிவு சுத்தமாகி நல்ல தண்ணீராக்கப்படுகிறது. திடக்கழிவுகளில் இருந்து வண்ணமும், மாசுகளும் நீக்கப்பட்டு, சோடா உப்பும், குளோரைடுகளும் மறுபடியும் பயன்படுத்தத் தயாரான நிலையில் மீட்டெடுக்கப்படுகின்றன. ஒரு சோதனை ஓட்டமாக, கோவை வசுந்தரா, கரூர் கே.பி.ரங்கசாமி ஆகிய தொழில் முனைவர்களின் ஏற்பாட்டில், திருப்பூர் அருகே சுல்தான்பேட்டையில் ஒரு சாயப்பட்டறையில் இந்த நேரடி ஆவியாக்கல் முறை சுத்திகரிப்பை விஞ்ஞானி ராமசாமி செய்து காட்டினார். வெற்றிகரமாக செய்யப்பட்ட இந்த முயற்சியில் தினசரி 10 ஆயிரம் லிட்டர் கழிவு சுத்திகரிக்கப்பட்டது.

இதை நிர்மாணிப்பதற்கு ஆகக்கூடிய செலவு சுமார் 80 லட்சம். ஆனால் இதுவரை போடப்பட்டிருக்கும் ஆர்.ஓ சுத்திகரிப்பு முறையில் இல்லாத ஒரு பெரும் லாபம் இதில் உள்ளது என்று இந்த முனைவர்கள் தெரிவிக்கின்றனர். சோடா உப்பு, குளோரைடுகளை மீட்டெடுப்பதால், ஆண்டுக்கு சுமார் 40 லட்சம் ரூபாய் மிச்சமாகிறது. எனவே சுத்திகரிப்பு நிலையத்தை நிறுவ போட்ட முதலீட்டை இரண்டே வருடங்களில் எடுத்துவிடலாம். அதன்பிறகு சுத்திகரிப்பினால் வருடத்துக்கு 40 லட்ச ரூபாய் லாபம்

கிடைக்கிறது !

ஆனால் ஏற்கனவே ஆர்.ஓ முறையை தமிழக மாசுக் கட்டுப்பாட்டு வாரியம் அங்கீகரித்துவிட்டிருந்தபடியால், மாற்று வழிகளில் அது அக்கறை காட்டவில்லை. தமிழகத்துக்கு வந்து இந்த முயற்சியில் ஈடுபட்ட விஞ்ஞானி ராமசாமியும் சோர்வுற்று திரும்ப அமெரிக்காவுக்குப் போய்விட்டார்.

இப்போது தெளிவான, கறாரான உத்தரவை நீதிபதிகள் பிறப்பித்திருக்கும் நிலையில், இனி வெறுமே சீரோ லிக்விட் டிஸ்சார்ஜ் என்றில்லாமல் சீரோ ஆல் டிஸ்சார்ஜை உறுதிப்படுத்த வேண்டும். அதற்கான தொழில்நுட்பத்தில் ஏன் மாசுக் கட்டுப்பாடு வாரியம் இதுவரை அக்கறை காட்டவில்லை என்று விசாரிக்க வேண்டும். இனி அக்கறை காட்டும்படி உத்தரவிடவேண்டும். தேவைப்பட்டால், நீதிமன்றமே ஓர் உயர்நுட்ப வல்லுநர் குழுவை நியமித்து எந்த தொழில்நுட்பம் உகந்தது என்று குறிப்பிட்ட காலத்துக்குள் பரிந்துரைக்கும்படி உத்தரவிடலாம். விஞ்ஞானி ராமசாமியின் தொழில்நுட்ப முறையை அரசோ, சாயப்பட்டறை உரிமையாளர்களின் சங்கமோ சோதனை ஓட்டமாக நிறுவி, மற்றவர்களுக்கு நம்பிக்கை வரச் செய்து காட்டலாம்.

இதுவரை இருந்த அரைகுறை சுத்திகரிப்பையே பல பட்டறைகள் செய்யாமல் சட்ட விரோதமாக இயங்கி வந்திருக்கின்றன. இனி சுத்திகரிப்பை செய்யத் தொடங்கினால் பழைய தவறுக்கு தண்டனை இல்லாமல் அவர்களை அனுமதித்துவிடலாம் என்பது தவறான முன்னுதாரணமாகிவிடும். அவர்களுக்கு கடுமையான அபராதம் விதித்து அந்த அபராதத்தொகைகள் நொய்யல் மாசினால் பாதிப்புக்குள்ளான விவசாயிகளுக்கு செலவிடப்படவேண்டும்.

எப்படியானாலும் இந்த முறை சீரோ ஆல் டிஸ்சார்ஜ் இல்லாமல் மறுபடியும் சாயப்பட்டறைகளை இயங்க அனுமதிக்கவே கூடாது. ராமேஸ்வரம் மீனவர்களை சிங்களப் படைகள் கொல்கின்றன. தமிழ் விவசாயிகளை தமிழ் தொழிலதிபர்களே சித்ரவதை செய்து கொன்றுகொண்டிருப்பதும் கூடவே நிறுத்தப்படவேண்டும். நம் சுற்றுச்சூழலைக் கெடுக்காமல் பணம் சம்பாதிக்கும் மன நிலை வந்தால்தான் உண்மையில் திருப்பூரைக் காப்பாற்றமுடியும். இல்லாவிட்டால் ஒரு பக்கம் பண மூட்டையும் மறுபக்கம் திடக்கழிவு மூட்டையுமாக அழிவோம்.

**இந்த வார நகைச்சுவை**

கருணாநிதி (டெல்லியில்):தி.மு.க கூட்டணியில் பா.ம.க உள்ளது.

ராமதாஸ் (சென்னையில்): அது பற்றி இன்னும் நாங்கள்

முடிவு செய்யவில்லை.

கருணாநிதி:(டெல்லியில்) அப்படியானால், நாங்களும் அது பற்றி இன்னும் முடிவு செய்யவில்லை.

### இந்த வார பூச்செண்டு

சபரிமலையில் மகரவிளக்கு மனிதர்களால்தான் ஏற்றப்படுகிறது என்று பகுத்தறிவாளர்கள் நீண்ட காலமாக சொல்லி வருவது உண்மைதான் என்று அறிவித்திருப்பதற்காக திருவாங்கூர் தேவஸ்வம் போர்டுக்கு இ.வா.பூ.

### இந்த வார கேள்வி

ஊழல் கண்காணிப்பு ஆணையரை பிரதமர், உள்துறை அமைச்சர், எதிர்க்கட்சித்தலைவர் மூவரும் கொண்ட குழு ஒரு மனதாகத் தேர்வு செய்யவேண்டுமென்று விதி இருக்கும்போது, எப்படி எதிர்க்கட்சித்தலைவர் சுஷ்மா எதிர்த்தபிறகும் தாமசை அரசு நியமித்தது ? சுஷ்மா எதிர்த்தார் என்பதை ப.சிதம்பரமும் ஒப்புக் கொண்டிருக்கிறாரே ?

### இந்த வார சந்தேகம்

ஒருவர் மீதான வழக்கு விசாரணையில் இருக்கும்போது, குறிப்பிட்ட ஊரில் மட்டுமே தங்கியிருந்து தினசரி காவல் நிலையத்துக்கு வந்து கையெழுத்திடவேண்டுமென்ற நடைமுறை நம் ஊரில் இருக்கிறது. இப்படி ஒருவரை அலைக்கழிக்காமல் அவரை சுதந்திரமாக நடமாடவிட்டுவிட்டு, அவர் எங்கிருக்கிறார் என்பதை அதிகாரிகள் தெரிந்துகொள்ள நவீன தொழில்நுட்பமான ரேடியோ காலரை அவரிடம் பொருத்திப் பயன்படுத்தும் அமெரிக்கா செய்வதை மட்டும் தவறு என்று ஏன் சொல்ல வேண்டும் ?

*கல்கி 5.2.2011*

# கேள்விகள் ஓய்வதில்லை....

கலைஞர் கருணாநிதி டெல்லிக்குச் சென்று திரும்பிய மறு நாளே டெல்லியில் ஆ.ராசாவை சி.பி.ஐ கைது செய்தது பற்றி பல வதந்திகள் உலவுகின்றன. கருணாநிதியிடம் முன்கூட்டியே காங்கிரஸ் தரப்பிலிருந்து தகவல் சொல்லித்தான் ராசாவைக் கைது செய்தார்கள் என்றும் ராசாவுக்கும் முன்கூட்டியே கைதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கும்படி கட்சித்தலைமை சொல்லி வைத்திருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது.

இது உண்மையென்றால், சில கேள்விகள் எழுகின்றன. ராசாவை மட்டும் கைது செய்யுங்கள். தொடர்புடைய என் குடும்ப உறுப்பினர்களை தொடவேண்டாம். ராசாவுக்கு நான் சமாதானம் சொல்லிக் கொள்ளுகிறேன். தா.கிருஷ்ணன் வழக்கு, மதுரை தினகரன் ஊழியர் எரிப்பு வழக்கு, ஜயேந்திரர் வழக்கு, அவ்வளவு ஏன், சர்க்காரியா கமிஷன் வழக்குகள் எல்லாவற்றையும் நீர்க்கச் செய்தது போல இதையும் காலப் போக்கில் காலாவதியாக்கிவிடலாம் என்று காங்கிரசுடன் பேரம் பேசப்பட்டதா? அல்லது ஸ்பெக்ட்ரம் ஊழலில் தொடர்புடைய காங்கிரஸ் பிரமுகர்களை நாங்கள் காட்டிக் கொடுக்காமல் இருக்க வேண்டுமானால், உச்ச நீதிமன்றத்துக்காக என்ன கண்துடைப்புக் கைது வேண்டுமானாலும் செய்துகொள்ளுங்கள்; அதற்கு மேல் எதுவும் செய்யாதீர்கள் என்று அரை மிரட்டல், அரை கெஞ்சல் பேரம் நடந்ததா?

கருணாநிதிக்கு ராசாவின் கைது முன்கூட்டித் தெரியாது என்று வைத்துக் கொண்டாலும், சில கேள்விகள் எழத்தான் செய்கின்றன. ராசா தவறு செய்யவில்லை என்று நமக்கெல்லாம் உறுதியாக அறிவிக்கும் தி.மு.கவால்

ஏன் காங்கிரஸ் ஆட்சியின் கீழ் இருக்கும் சி.பி.ஐயை அதையே நம்பவைக்க முடியவில்லை ? கைதுக்குப் பிறகும் காங்கிரசுடன் தி.மு.க உறவை நீடிப்பது ஏன் ?

கைதுக்கு மறு நாள் நடந்த தி.மு.க பொதுக் குழுவில் கருணாநிதி சொல்கிறார்: நம்மையெல்லாம் ஓரளவு கலங்க வைத்திருக்கிறது. அதிர்ச்சியடைய வைத்திருக்கிறது. ஆர்வத்தைக் குறைக்கின்ற நிலைக்கு உள்ளாக்கி இருக்கின்றது.

இப்படிப் பேச ஆரம்பித்தவர், அடுத்து காங்கிரஸ் தி.மு.க கூட்டணி பற்றிப் பேசுகையில் “ சிறிய விஷயங்களை ஒருவருக்கொருவர் பேசித் தீர்த்துக் கொள்ளக் கூடிய விஷயங்களைப் பெரிதுபடுத்திப் பகைமையாக்கிக் கொள்ளவேண்டாம்“ என்று வேண்டுகிறார். மலைப் பொதுக் கூட்டத்தில் மாவலி சக்ரவர்த்தி கதையை சொல்லி தன்னையும் ஏழைகளுக்கு சிறந்த சேவை செய்த ராசாவையும் மாவலியோடு ஒப்பிட்டுக் கொள்கிறார். இந்த மாவலிகளை வீழ்த்த சதி செய்பவர்கள் கருணாநிதியின் பார்வையில் உயர் சாதியினரும் மீடியாவுமாகத் தெரிகிறார்கள். அப்படியானால் அவர்களுடைய சதியை ஏற்று மாவலிக்கு எதிராக நடவடிக்கை எடுக்கும் விஷ்ணு யார் ?கொஞ்சம் இடம் கொடுத்ததும் தலையிலேயே காலை வைத்து அழுத்துவது காங்கிரஸ் ஆட்சிதானே ?

ஏழைகளுக்காகவே சேவை செய்தும் இப்படி இழிவுபடுத்தப்படுவது நமக்கு வழக்கமானதுதான் என்று அங்கலாய்க்கிறார் கருணாநிதி. இழிவுபடுத்துவது இப்போது யார் ? காங்கிரஸ்தானே ? அப்படியானால் இந்த இழிவு, கொடுமைகளை எல்லாம் ஒதுக்கிவிட்டு அவர்களோடு கூட்டணியில் இருந்தாக வேண்டிய கட்டாயம் என்ன?

தனக்கெதிராக நடவடிக்கை எடுக்கும் காங்கிரசிடம் சரணாகதி அடைவது அவருக்குப் புதியதல்ல. 1976ல் நெருக்கடி நிலையின்போது அவர் ஆட்சியை காங்கிரஸ் டிஸ்மிஸ் செய்தது. அவரைத் தவிர அத்தனை தி.மு.க தலைவர்களையும் சிறையில் அடைத்தது. ஸ்டாலினை அடி உதையிலிருந்து காப்பாற்றப் போன சிட்டிபாபு சிறை அதிகாரிகளின் தாக்குதலில் கொல்லப்பட்டார். சிறைக் கொடுமையால், முரசொலி மாறனும் ஆற்காடு வீராசாமியும் நிரந்தரமான உடல் நலிவுக்காளானார்கள்.

ஆனால் அடுத்த நான்கே வருடங்களில் கருணாநிதி இந்திராவுடன் கூட்டு சேர்ந்தார். எம்.ஜி.ஆரை வீழ்த்துவது என்பது வெளியே சொல்லப்பட்ட நோக்கம். (அது நடக்கவில்லை). இந்திரா கருணாநிதி அரசின் ஊழல்களை விசாரிக்க நியமித்த சர்க்காரியா கமிஷன் அம்பலப்படுத்திய ஊழல்கள் தொடர்பான

வழக்குகளிலிருந்து தப்பிப்பதுதான் அசல் நோக்கம்.

இன்றைக்கும் காங்கிரசுடன் விடாப்பிடியாக அவர் கூட்டு சேர்ந்திருப்பதன் நோக்கம், ஸ்பெக்ட்ரம் ஊழலில் ராசாவை பலி கொடுத்தாலும் சரி, தன் வீட்டுக்குள் சட்டத்தின் இரும்புக்கரம் நுழைந்துவிடக்கூடாது என்ற பயம்தான்.

ராசாவுக்கு டெலிகாம் பொறுப்பை வாங்கித்தருவதில் கனிமொழி ஆற்றிய பங்கு நீரா ராடியா டேப்களில் தெளிவாகப் புலப்படுகிறது. எதெதற்கோ தீர்மானம் நிறைவேற்றிய தி.மு.க பொதுக் குழு, கட்சியின் முக்கிய பிரமுகர்கள் கனிமொழி, ராசா, அழகிரி, பூங்கோதை, ராசாத்தி அம்மாள், தயாநிதி மாறன் என்று பலரும் பேசப்படும் நீரா ராடியா டேப்கள் பற்றி கட்சி என்ன கருதுகிறது என்று ஒரு வரி கூட சொல்லவில்லை.

தேர்தலில் ஒன்றுபட்ட தோற்றம் காட்டவேண்டும் என்பதற்காக ஸ்டாலின் வேண்டாவெறுப்பாக ஸ்பெக்ட்ரம் ஊழல் பற்றி மேலெழுந்தவாரியாகப் பேசுகிறார். ஆனால் இதுவரை ராசாவுக்கு முன் டெலிகாம் பொறுப்பு வகித்த தயாநிதி மாறன் பகிரங்கமாக ராசாவை ஆதரித்து எதுவும் பேசவில்லை.

நீரா ராடியா டேப்பில் ராசாவுக்கும் நீராவுக்கும் இடையே நடந்ததாக ஓர் உரையடலில் சொல்லப்படுகிறது.:

*ராசா: ஒரே பிரச்சினை, தயாநிதி மாறன் எனக்கெதிராக ஒரு பிரச்சாரத்தைத் தொடங்கிவிடலாம். அதை நாம் சமாளிக்க வேண்டும். பத்திரிகைகளில் அவர் சொல்வார், திரும்பவும் ஸ்பெக்ட்ரம் கறை படிந்த மந்திரி வருகிறார் என்பார்.*

*நீரா: அதை நாம் சமாளிக்கலாம். கவலை வேண்டாம்.*

ஆக, ராசாவுக்கு எதிராக, ஏழைப் பங்காளன் நவீன மாவலிக்கு எதிராக கறை படிந்த மந்திரி என்ற பிரசாரத்தை 2009லேயே நடத்திய 'உயர் சாதி மீடியா சதி கும்பலில்' ஒருவர் தி.மு.கவிலேயே இருப்பவர்தான் என்று அல்லவா ஆகிறது ? ஏன் இப்போதும் தயாநிதி மாறன் ராசாவை ஆதரித்து எதுவும் பேசுவதில்லை ?

மாறன்களுக்கும் கருணாநிதியின் குடும்பத்துக்கும் தகராறு இருந்த சமயத்தில்தான் கலைஞர் டி.வி தொடங்கப்பட்டது. கலைஞர் டி.வியின் பிரதான உரிமையாளர்கள், தயாளு அம்மாளுவும் கனிமொழியும் ஆவர்.

அந்த டி.விக்கு அப்போது 214 கோடி ரூபாய்கள் 'கடன்' கொடுத்து உதவியது ராசாவின் 'கொள்கை' முடிவுகளால் பயனடைந்து டெலிகாம் லைசன்ஸ் பெற்ற கம்பெனிகளில் ஒன்றாகும் என செய்திகள் வெளியாகின. ஒரு சில மறுப்புகளும்

வெளியாகியுள்ளன.

இவற்றிலெல்லாம் உண்மை வெளிவரவேண்டுமானால், சி.பி.ஐ ராசாவை கைது செய்து விசாரித்தது மட்டும் நிச்சயம் போதாது சி.ஐ.டி காலனி வீட்டுக்குள்ளும் நுழைந்தாக வேண்டிய கட்டாயம் இருக்கிறது. விசாரணை முடிவில் குற்றவாளி என்றால் நடவடிக்கை எடுப்போம் என்று ராசா விஷயத்தில் சொல்லும் கருணாநிதியால் ஏன் இதுவரை நீரா ராடியா டேப்பில் வெளியான விஷயங்கள் பற்றியும் அதே போல சொல்லித் தன் குடும்ப உறுப்பினர்களும் விசாரணையை சந்திக்கத் தயார் என்று அறிவிக்க முடியவில்லை ?

காங்கிரசுடன் அவர் இப்போது விடாப்பிடியாகக் கூட்டணி வைத்திருப்பது , ஜெயலலிதாவை ஆட்சிக்கு வரவிடாமல் தடுக்க மட்டும் அல்ல; சி.பி.ஐயை சி.ஐ.டி காலனி வீட்டுக்கு வர விடாமல் தடுக்கவும்தான், அல்லவா?

கேள்விகள் ஓய்வதில்லை. ஒவ்வொரு பதிலும் புதுக் கேள்வியை உற்பத்தி செய்கிறது.

### இந்த வார திட்டு

உடல்நலம் சரியில்லை என்று சொல்லி சட்டமன்றக் கூட்டத்துக்கு வராமல் இருக்க அனுமதி கோரியதற்காக ஜெயலலிதாவுக்கு இ.வா.தி. தேர்தல் முடியும்வரை அவர் ஏதாவது காரணம் சொல்லி சட்டமன்றத்துக்கு வரப் போவதில்லை என்பது எல்லாருக்கும் தெரிந்ததுதான்.

## இன்னொரு ஸ்பெக்ட்ரம் ஊழல் ?

இந்திய அரசின் விண்வெளி ஆராய்ச்சி நிறுவனமான ஐ.எஸ். ஆர் ஓ , தனியார் கம்பெனியான தேவாஸ் மல்டிமீடியாவுடன் போட்டுள்ல ஒப்பந்தப்படி அரசுக்கு இரண்டு லட்சம் கோடி ரூபாய்கள் இழப்பு ஏற்படும் என்று புது ஊழல் வெளிவந்திருக்கிறது. இழப்பு 100 கோடியா லட்சம் கோடியா என்று அறிவுஜீவிகள் மோதிக் கொள்வார்கள். அசல் பிரச்சினை கவனம் பெறாமல் போய்விடும்.

அசல் பிரச்சினை என்ன? அரசுக்கு சொந்தமான பி.எஸ்.என். எல் கம்பெனிக்கு வெறும் 20 மெகாஹெர்ட்ஸ் அலைக்கற்றை தரும்போது சுமார் 12 ஆயிரம் கோடி வசூலிக்கப்பட்டது. ஆனால் வெளி நாட்டு கம்பெனிகள் பெருமளவு பங்குகளை வைத்திருக்கும் தேவாசுக்கு 70 மெகாஹெர்ட்ஸ் ஒதுக்கீடுக்கு 1150 கோடி ரூபாய்தான் கட்டணம். இது ஏன் ?

தேவாஸ் பயன்படுத்துவதற்காக 2000 கோடி ரூபாய் செலவில்

இரு செயற்கைக் கோள்களை ஐ.எஸ்.ஆர்.ஒ ஏவ ஒப்புக் கொண்டுள்ளது. ஆனால் இதற்காக தேவாஸ் தரும் தொகை வெறும் 174 கோடி ரூபாய்தான். இது ஏன் ?

ஒப்ப்ந்தத்தை மறு பரீசிலனை செய்துவருவதாக ஐ.எஸ்.ஆர்.ஓ அறிவித்திருக்கிறது. பழைய தலைவர் மாதவன் நாயர் காலத்தில் போட்ட ஒப்பந்தத்தை இன்றைய தலைவர் ராதாகிருஷ்ணன் கேள்வி கேட்டுள்ளார். இப்போது தணிக்கை அதிகாரிகளின் தணிக்கை நடப்பதால் விவகாரம் வெளிவந்தது. வராமல் இருந்திருந்தால் ஒப்பந்தம் அப்படியே நிறைவேறியிருக்கும் இல்லையா?

தேவாசின் தலைவர் சந்திரசேகர் முன்பு ஐ.எஸ்.ஆர்.ஓவின் அறிவியல் செயலர் பதவி வகித்தவர். உயர் அரசு அதிகாரிகள் ஓய்வு பெற்றதும் தனியார் நிறுவனத்தில் சேர்ந்து பழைய முதலாளியான அரசு நிறுவனத்தை ஏய்க்க உதவுவது வழக்கமாகி வருகிறது. இதற்கு தடை விதித்தால் என்ன ?

***கல்கி 12.2.2011***

# கருணாநிதி கூடாது.. அடுத்தது யார் ?

**ரா**சாவுடன் ஊழலில் சம்பந்தப்பட்ட அத்தனை பேரையும் கைது செய்து, தேவைப்பட்டால் கருணாநிதியையே கைது செய்து விசாரிக்கும்படி உச்ச நீதிமன்றம் சி.பி.ஐக்கு உத்தரவிட்டாலொழிய ஸ்பெக்ட்ரம் ஊழலில் முழு உண்மைகள் வெளிவரப்போவதே இல்லை என்றே தோன்றுகிறது. காரணம் கருணாநிதி முழுப்பூசணிக்காயை எப்படியாவது சோற்றில் மறைப்பதில் உறுதியாக இருக்கிறார். கடைசியில் இது பூசணிக்காயே இல்லை, சோற்றில் வைத்த ஊறுகாயில் இருந்த எலுமிச்சம்பழம்தான் என்று கூட அவர் சொல்லுவார்.

கருணாநிதிக்கு ரத்தன் டாட்டா நவம்பர் 13,2007 தேதியிட்டுத் தன் கைப்பட கடிதம் எழுதி அனுப்பிய விஷயத்தை எடுத்துக் கொள்வோம். டெலிகாம் துறை ராசா வசம் சென்ற பிறகு ராசா ஸ்பெக்ட்ரம் ஒதுக்கீட்டில் எடுத்த நடவடிக்கைகள் பற்றியது அந்தக் கடிதம். முறைகேடுகள் நடப்பதாக ராசாவை விமர்சித்து செய்திகள் வடபுலத்தில் வெளிவரத்தொடங்கியிருந்தன. ராசாவின் செயல்களால் டாட்டா நிறுவனம் உள்ளிட்ட சில நிறுவனங்கள் பயண்டைவதாகக் குற்றச்சாட்டுகள் எழுந்திருந்தன.

அப்போது டாட்டா கருணாநிதிக்கு அந்தரங்கமான ரகசியக் கடிதம் என்று தலைப்பிட்டு எழுதுகிறார். ராசாவைப் பாராட்டியும், டெலிகாம் துறையில் ஸ்பெக்ட்ரம் ஒதுக்கீட்டில் ராசா எடுத்து வரும் நடவடிக்கைகளைப் பாராட்டியும், இதுவே தேசிய அளவில் தி.மு.கவின் ஒற்றைத் தனிப் பெரும் சாதனையாக அமையும் (என்ன தீர்க்கதரிசனம் !) என்று குறிப்பிட்டும் டாட்டா

எழுதியிருக்கிறார்.

அப்படி ஒரு கடிதம் தனக்கு வரவே இல்லை என்று இப்போது கருணாநிதி அறிக்கை வெளியிட்டிருக்கிறார். கடிதம் எழுதப்பட்ட செய்தி வெளியாகிப் பல மாதங்கள் ஆகின்றன. ஆனால் கருணாநிதி அப்போதெல்லாம் இதை மறுக்காமல் இப்போதுதான் மறுக்கிறார்.

தனக்கு அப்படி ஒரு கடிதம் வரவில்லை என்றும் அந்தக் கடிதத்தை யாரும் கொண்டு வந்து தன்னை சந்திக்கவும் இல்லை என்றும் கருணாநிதி சொல்கிறார். இதில்தான் முடிச்சு இருக்கிறது. ரத்தன் டாட்டாவின் கடிதத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் கடிதத்தை நீரா ராடியா மூலமாக உங்களுக்கு நேரடியாக அனுப்புகிறேன் என்கிறார் டாட்டா.

கடிதம் வரவில்லை;கடிதத்துடன் தன்னை யாரும் சந்திக்கவில்லை என்று கருணாநிதி மறுப்பு அறிக்கை இப்போது வெளியிட்ட மறு நாளே, டாட்டா நிறுவனம் அறிக்கை வெளியிட்டிருக்கிறது. அது கடிதம் எழுதப்பட்டு அனுப்பப்பட்டதை மறுக்கவே இல்லை ! உறுதி செய்திருக்கிறது.

எந்தச் சூழ்நிலையில் ரத்தன் டாட்டா அந்தக் கடிதத்தை எழுதினார் என்று மட்டுமே டாட்டா நிறுவனமான டாட்டா டெலிசர்வீசஸ் விளக்கியிருக்கிறது. டெலிகாம் துறையில் செல்வாக்குடைய சில சுயநல சக்திகள் ஆதிக்கம் செலுத்தியதை முறியடிக்கும் விதத்தில் நல்ல கொள்கை முடிவுகளை ராசா எடுத்ததாகவும் அதைப் பாராட்டியே டாட்டா கடிதம் எழுதினாராம்.

டாட்டா தான் எழுதிய கடிதத்தை நீரா ராடியா மூலமாக அனுப்புவதாக கடிதத்திலேயே குறிப்பிட்டிருக்கிறார். கடிதத்தின் ஒளிநகலை பல வட இந்திய சேனல்களும் பத்திரிகைகளும் வெளியிட்டுவிட்டன. தனக்கு வரவில்லை என்று இத்தனை வருடமாகச் சொல்லாத கருணாநிதி இப்போதுதான் அதை மறுக்கிறார். காரணம் நீரா ராடியா தொடர்பு அவரையே நேரடியாக ஸ்பெக்ட்ரம் ஊழலுடன் தொடர்புபடுத்திவிடும் என்பதுதான். நீரா ராடியா டெலிபோன் உரையாடல் டேப்புகளில் ஏற்கனவே கனிமொழி, ராசத்தி அம்மாள் தொடர்புகள் வெளிப்பட்டிருக்கின்றன..

ராசாவுக்கான டாட்டாவின் பாராட்டுக் கடிதத்தை கருணாநிதியிடம் நீரா ராடியா சேர்ப்பிக்காமல் இருக்க வாய்ப்பே இல்லை. அந்தக் கடிதம் ராசாவுக்கு எதிராக தயாநிதி மாறன் தரப்பினர் கடும் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்த சமயத்தில் எழுதப்பட்டது. எனவே கடிதம் நீரா ராடியாவால் நேரடியாகக் கருணாநிதியிடம் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். அல்லது

ஏற்கனவே நீரா ராடியாவுக்குப் பழக்கமான கனிமொழி அல்லது ராசாத்தி அம்மாள் இருவரில் ஒருவர் மூலமாக அனுப்பியிருக்க வேண்டும். அல்லது ராசாவிடமே நீரா ராடியா கொடுத்து அனுப்பியிருக்கலாம்.அதை கருணாநிதியிடம் சேர்ப்பித்து தனக்கும் கழகத்துக்கும் நல்ல பெயரை சம்பாதிக்கும் அவசியம் ராசாவுக்கு இருந்தது.

ஆனால் கருணாநிதி கடிதம் வரவில்லை என்று மறுக்கிறார். இதுவே எழுபதுகளாக இருந்திருந்தால், அப்படி ஒரு கடிதம் தான் எழுதவே இல்லை என்று டாட்டாவை விட்டே மறுக்கச் செய்திருப்பார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அவருக்கு டாக்டர் பட்டம் அளிக்கப்பட்டதை எதிர்த்து நடந்த மாணவர் போராட்டத்தில் போலீசால் கொல்லப்பட்ட உதயகுமாரின் உடலை தன் மகன் உடல் இல்லை என்று உதயகுமாரின் தந்தையை விட்டே அப்போது சொல்லவைத்ததை ஐம்பது வயதுக்கு மேற்பட்ட பழைய தலைமுறையினர் யாரும் மறந்திருக்கமாட்டார்கள்.

எப்படியும் சி.பி.ஐ விசாரணயில் நீரா ராடியா கலைஞர்டாட்டா கடிதத்தைப் பற்றி சொல்லியிருப்பார் என்று எதிர்பார்க்கலாம். விசாரணைக்கு இப்போது டாட்டா டெலிசர்வீசசின் அதிகாரிகளும் அழைக்கப்பட்டிருக்கின்றனர். அந்த நிறுவனத்துக்கு ராசாவின் ஸ்பெக்ட்ரம் ஒதுக்கீட்டால் லாபம் ஏற்பட்டதாகவும் அதனால் அரசுக்கு பல கோடிகள் இழப்பு என்றும் சி.பி.ஐ இப்போது உச்ச நீதிமன்றத்தில் சொல்லியிருக்கிறது. கலைஞர் டி.விக்கு ஸ்பெக்ட்ரம் முறைகேட்டில் லாபமடைந்த இன்னொரு கம்பெனியின் வழியே பணம் கை மாறியதையும் அது உச்ச நீதி மன்றத்தில் சொல்லியிருக்கிறது.

இத்தனைக்குப் பிறகும் எதுவுமே நடக்கவில்லை என்பது போல மறுப்பு அறிக்கைகள் வெளியிட்டுக் கொண்டிருக்கும் கருணாநிதி எந்த தைரியத்தில் எல்லாவற்றையும் மறுக்கிறார் ? காங்கிரசுடன் இருக்கும் கூட்டு தன்னையும் தன் குடும்பத்தையும் கடைசியில் எப்படியும் காப்பாற்றிவிடும்; உச்ச நீதி மன்றம் இறுதியில் எந்தக் குற்றச்சாட்டும் போதுமான சாட்சியங்களுடன் நிரூபிக்கப்படவில்லை, இருந்த சாட்சிகளும் பிறழ்சாட்சிகளாகிவிட்டனர் என்று வழக்கை முடித்துவிடும் என்றெல்லாம் அவர் நம்பினால் மட்டுமே இது சாத்தியம்.

இன்றைய இந்திய அரசியல் சூழலில் அவருடைய நம்பிக்கையை மூட நம்பிக்கை என்று சொல்ல முடியாதவனாக இருக்கிறேன்.

இந்த சூழல் மாறவேண்டுமானால், அதை மக்கள்தான் மாற்றவேண்டும். அதற்கு மக்களிடம் இருக்கும் ஒரே ஆயுதம்

தேர்தல்தான்.

வரவிருக்கும் தமிழகத் தேர்தலில் தி.மு.க தோற்கடிக்கப்பட்டால்தான், கருணாநிதி வழிகாட்டுதலில் நடந்துகொண்டிருக்கும் பிரும்மாண்டமான ஊழல் கலாச்சாரத்துக்கு ஒரு இடைவேளையாவது விட முடியும் என்பதில் யாருக்கும் சந்தேகம் இல்லை.

ஆனால் தி.மு.கவுக்கு பதிலாக யாரைத் தேர்ந்தெடுப்பது என்ற கேள்வி வரும்போது ஏற்படும் குழப்பம்தான் இன்னமும் தி.மு.கவை காப்பாற்றிக் கொண்டிருக்கிறது. தி.மு.க தோற்கடிக்கப்பட்டால் அ.தி.மு.கதான் ஆட்சிக்கு வரும் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை.

மூன்றாவதாக இங்கே வேறு எவரும் இல்லை. அ.தி.மு.க ஆட்சிக்கு வந்தால் ஸ்பெக்ட்ரம் போல இன்னொரு ஊழல் நடக்காது என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை. தி.மு.க ஆட்சியில் இப்போது ஊராட்சி அலுவலகம் முதல் தலைமைச் செயலகம் வரை வட்டம் தொடங்கி மண்டலங்கள் வரை நடந்துகொண்டிருக்கும் எண்ணற்ற ஊழல்கள், முறைகேடுகள் எல்லாம், எழுபதுகளில் கருணாநிதி ஆட்சியில் ஆரம்பிக்கப்பட்டு, அடுத்தடுத்து எம்.ஜி.ஆர், ஜெயலலிதா, கருணாநிதி ஆட்சிகளில் வளர்த்தெடுக்கப்பட்டு, இன்று தமிழர்களின் வாழ்க்கை முறையாக ஆக்கப்பட்டிருப்பவை.

வெளியூர் பயணத்தின்போது தஞ்சைப் பகுதியில் என்னை சந்தித்த ஒருவரோடு பேசிக் கொண்டிருந்தபோது மனைவி தனியார் பள்ளியில் அரசு ஊதியம் பெறும் ஆசிரியர் வேலை பார்க்கிறார். பத்து லட்சம் கொடுத்து வேலை வாங்கப்பட்டது என்றார். இது பற்றி சென்னையில் நண்பர்களிடம் பேசினேன். அரசு மான்யம் பெறும் தனியார் பள்ளிகள் பெரும்பாலானவற்றில் ஆசிரியர் வேலை எப்போதுமே இப்படி சில லட்சம் ரூபாய்களுக்கு விற்கப்படுவது சாதாரண நடைமுறை என்கிறார்கள். பரவலாக தமிழர்களில் பலர் இத்தகைய ஊழலை எந்த உறுத்தலும் இல்லாமல் செய்பவர்களாக்கப்பட்டுவிட்டார்கள். இந்த ஆசிரியர்கள் என்ன மாதிரி மாணவர்களை உருவாக்கப் போகிறார்கள் என்று எனக்கு கலக்கமாக இருக்கிறது.

ஒவ்வொரு சாதாரண தமிழரையும் ஊழல் பேர்வழியாக மாற்றுவதுதான் கருணாநிதி, எம்.ஜி.ஆர், ஜெயலலிதா ஆட்சிகள் தொடர்ந்து செய்துவந்திருக்கும் சமூக விரோத பண்பாட்டுச் சீரழிவுச் செயல். இதில் யார் யாரை விட விஞ்சியவர் என்ற பட்டிமன்றங்கள் வேண்டுமானால் நடத்தி ஆறுதலடையலாம்.

அடுத்து வரும் எந்த ஆட்சியிலும் இந்த சீரழிவுகள் முற்றிலும் இல்லாமல் போய்விடும் வாய்ப்பே இல்லை.படிப்படியாகக் குறைக்கப்படக் கூடிய ஓர் ஆட்சியை அடுத்து உருவாக்க முடிந்தாலே மக்களுக்கு வெற்றிதான்.

அப்படி ஒரு ஆட்சி அமைய வேண்டுமானால், நாம் என்ன செய்ய வேண்டும் என்று வாசகர்களாகிய நீங்கள் நினைக்கிறீர்கள் என்று அறிய விரும்புகிறேன். வரும் தேர்தலில் நாம் நடைமுறையில் செய்யக்கூடிய யோசனைகளை எழுதி அனுப்புங்கள். இங்கே பகிர்ந்துகொள்வோம்.

இப்போது நம்மைச் சூழ்ந்திருக்கும் இருளில், ஒவ்வொரு தீக்குச்சியும் ஒரு தீப்பந்தம் போன்றது.

## இந்த வாரப் பூச்செண்டு

தங்கள் கிராமத்தில் புதிதாகத் திறக்கப்படும் டாஸ்மாக் மதுக் கடையை மூடக் கோரி சாலை மறியல் நடத்திய மணலி எலந்தனூர் கிராம மக்களுக்கு இ.வா.பூ.

## இந்த வாரத் திட்டு

தமிழக அரசு ஒருபக்கம் எல்லா சாதியினரும் அதற்கான தகுதி பெற்றால் அர்ச்சகராகலாம் என்று சட்டம் கொண்டு வந்துவிட்டு மறுபக்கம் திருவண்ணாமலை கோயிலில் லட்டு பிடிக்கும் வேலை உடபட சில கோயில் வேலைகளுக்கு பிராமணர்கள் மட்டுமே விண்ணப்பிக்கலாம் என்று நிர்ணயித்திருப்பதற்கு இ.வா தி. இதில் தலையிடுவதற்கில்லை என்று சென்னை உயர்நீதிமன்றம் கூறியிருப்பது வேதனையாக இருக்கிறது.

## இந்த வாரக் கேள்வி

டக்ளஸ் தேவானந்தா மீதுள்ள கைது வாரண்ட்டை ரத்து செய்து அவருக்கு முன் ஜாமீன் வழங்கக்கூடாதென்று நீதிமன்றத்தில் இப்போது சொல்லும் தமிழக போலீஸ் ஏன் 17 வருடங்களாக அவரை நாடு கடத்தி தங்களிடம் ஒப்படைக்கும்படி இலங்கை அரசைக் கோரவில்லை ? இப்போதாவது கோருமா?

*கல்கி 19.2.2011*

# நமக்கேற்ற தலைமை எது?

ஒரு மாநில முதலமைச்சர் காரில் போகிறார். சாலையில் சென்றுகொண்டிருக்கும் அவசர உதவி வண்டி ஒன்றின் மீது மோதுவது போல அவர் கார் நெருக்கமாகப் போகிறது. உடனே காவல் துறை அதிகாரி முதல்வர் காரை நிறுத்தி அபராதச் சீட்டு தருகிறார். கோர்ட்டில் வந்து ஆஜராகி பணத்தைக் கட்டாவிட்டால், சம்மன் அனுப்பபடும் என்று முதலமைச்சரை எச்சரிக்கிறார். முதலமைச்சருக்கு எரிச்சலாக இருக்கிறது. தன் கட்சி ஊழியர்கள் கூட்டத்தில் இந்த சமபவத்தைக் குறிப்பிட்டுப் பேசி, அந்த காவல் துறை அதிகாரி ஒரு இடியட் என்று திட்டுகிறார். கூட்டத்தைப் படம் பிடித்த ஒரு டி.வி.சேனல் இதை ஒளிபரப்பிவிடுகிறது. முதலமைச்சருக்கு பெரும் கண்டனங்கள் குவிகின்றன.

முதல்வர் உடனே காவல் அதிகாரியை சந்தித்து தான் இடியட் என்று கூறியதற்கு மன்னிப்பு கேட்டுக் கொள்கிறார். தான் செய்தது ஒரு தவறன முன்னுதாரணம். இனி அப்படி செய்ய மாட்டேன் என்று சொல்கிறார். கோர்ட்டிலும் போய் அபராதத் தொகையைக் கட்டுகிறார்.

இதெல்லாம் சென்ற வாரம் நிஜ வாழ்க்கையில் நடந்தவை என்றால் நமக்கு நிச்சயம் பிரமிப்பாகவும் நம்ப முடியாமலும்தான் இருக்கும். ஆனால் அத்தனையும் நடந்தன. அமெரிக்காவில் ஒஹையோ மாநிலத்தின் குடியரசுக் கட்சியைச் சேர்ந்த முதலமைச்சர் ( அங்கே கவர்னர் என்று பெயர்) ஜான் காசிச், காவல் அதிகாரி ராப் பாரெட்டிடம் மன்னிப்பு கேட்டிருக்கிறார். அபராதமாக 85 டாலர் கட்டியிருக்கிறார். இது போல ஒரு நிகழ்ச்சி எந்த நாளிலாவது நம் ஊரில் நடக்கும் வாய்ப்பு இருக்கிறதா என்று யோசிக்கும்போது ஏக்கமாகவும் வருத்தமாகவும் இருக்கிறது.

இன்று காலையில் வாக்கிங் சென்றபோது குப்பை லாரி டிரைவருடன் ஒரு பள்ளிக்கூட ஊழியர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தப் பள்ளிக்கு மாணவர்களை இறக்கி விட நிறைய கார்கள் வருவதால், குப்பை லாரி அந்த சாலை வழியே அப்போது வந்திருக்கக்கூடாது என்று சொல்லி அவமரியாதையான வார்த்தைகளால் லாரி டிரைவரை திட்டினார்கள். அவரும் திட்டினார். கார்களில் வந்த சில படித்த பொதுமக்களும் பள்ளி ஊழியர் சார்பாக குப்பை லாரி டிரைவருடன் சண்டையிட்டார்கள். அசல் பிரச்சினை குப்பை லாரி அல்ல. அந்தப் பள்ளிக்கூடம்தான் என்பது அந்தப் பகுதியில் வசிக்கும் எனக்குத் தெரியும். எங்கள் தெரு முழுக்க எல்லா பக்கங்களிலும் கார்களை நிறுத்தி வைத்து குடியிருப்போருக்கு தொல்லை ஏற்படுத்துவதை தினமும் இரு வேளையிலும் அனுபவிக்கிறோம்.

பள்ளியின் மைதானத்துக்குள் கார்கள் சென்று மாணவர்களை இறக்கிவிட்டு வர அந்த பள்ளி நிர்வாகம் அனுமதிப்பதில்லை. நடுச் சாலையிலேயே கார்கள் நின்று மாணவர்களை இறக்கிவிடுகின்றன. ஒரு காருக்கு அதற்கு எவ்வளவு நேரம் ஆகிறதோ அதே நேரம்தான் குப்பை லாரிக்கும் ஓரத்தில் இருக்கும் குப்பை தொட்டியை எடுத்துத் தனக்குள் கவிழ்த்துக் கொண்டு போவதற்கும் ஆகப் போகிறது. குப்பையில் பெரும் குப்பை அந்தப் பள்ளி உற்பத்தி செய்திருப்பதுதான்.

பள்ளிக்குக் கார்கள் வரும் நேரத்தில் குப்பை லாரி வரக்கூடாது என்று வாதிடும் சிலருக்கு, முதலில் ஏன் மாணவர்கள் பள்ளிக்கு சைக்கிள்களிலும், பஸ்களிலும் வராமல், கார்களில் கொண்டு வந்துவிடப்பட வேண்டும் என்ற கேள்வி உறைப்பதே இல்லை.

கார்களுக்கு முன்னுரிமை தரும் மனப்பான்மை, குப்பை லாரியை சகிக்காத மனோபாவம், பள்ளிக்கு எதிரில் இருக்கும் மொத்த சாலையும் தங்கள் தனிச் சொத்து என்பது போன்ற திமிரான கண்ணோட்டம் எல்லாம் கோலோச்சுகின்றன. சில ஊழல் முறைகேடுகளில் சிக்கினாலும் அவை செய்திகளாகாமல் தடுக்கும் அளவுக்குப் பள்ளி நிர்வாகத்துக்கு உயர் மட்டங்களில் இருக்கும் தனிப்பட்ட செல்வாக்கு இந்த மமதை மனோநிலைக்குப் பின்னால் இருக்கிறது.

சாதாரண, நடுத்தர வகுப்பினர் மட்டத்திலேயே இருக்கும் இப்படிப்பட்ட அதிகார மனோநிலையின் பிரும்மாண்ட வடிவங்களாகவே நம் தலைவர்களும் இருக்கிறார்கள். அதிகாரம் செலுத்தினால்தான் நாம் அவர்களை மதிக்கிறோம். பெரும் பதவியில் இருந்துகொண்டு அதிகாரம் செய்யாமல், எளிமையாகவும் இயல்பாகவும் ஒருவர் நடந்துகொண்டால்,

அவரை இளிச்சவாயனாகக் கருதுகிறோம். நம்முடைய இந்த மனநிலைகளுக்கேற்ற தலைவர்கள்தான் நமக்குக் கிட்டுவார்கள். அதனால்தான் மோசமான ஒரு தலைவருக்கு பதிலாக நமக்கு கிடைக்கூடிய மாற்றுத் தலைவர்களும் அதே போல மோசமான தரத்திலேயே இருக்கிறார்கள்.

இந்த அரசியல் எந்த அளவுக்கு நம்மை சீரழித்துவிட்டதென்றால், அண்மையில் ஒரு லயன்ஸ் சங்க மாநாடு நடந்தபோது பார்த்தேன். அதன் பிரமுகர்கள் படம் போட்ட பிளெக்ஸ் போர்டுகள் ஸ்டாலினுக்கும் திருமாவளவனுக்கும் தெரு நெடுக வைக்கப்படுவது போல் வைக்கப்பட்டன. அரங்கத்தில் வாழ்த்தப்பட்ட பிரமுகருக்கு மலர்க் கிரீடம் சூட்டப்பட்டது. ரத்த தானம், கண் தானம் போன்ற சமூக சேவைகளில் ஈடுபடும் அமைப்புகளும் இதே சீரழிவுக் கலாசாரத்தைப் பின்பற்றக் கூடியவையாக மாற்றப்படுவதுதான் நம்முடைய மோசமான அரசியல் நம் மீது செலுத்தும் பலமான பாதிப்பின் அடையாளம்.

விடுதலைப்புலிகள் தலைவர் பிரபாகரனின் தாயார் பார்வதி அம்மாளின் இறுதிச்சடங்கில் கலந்துகொள்ளச் சென்ற விடுதலைச் சிறுத்தைகள் தலைவர் திருமாவளவன் கொழும்பு விமான நிலையத்தில் திருப்பி அனுப்பப் பட்ட செய்தி மட்டுமே நம் கவனத்துக்கு வருகிறது. அவரை இறுதிச்சடங்கில் பங்கேற்க அனுமதித்திருக்கவேண்டும். அவர் அதில் பங்கேற்பதால் யாருக்கும் எந்த தீமையும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. தடுத்தது ராஜபக்ஷே அரசின் முட்டாள்தனம் என்பதுதான் என் கருத்து.

அதே சமயம் கொழும்புவுக்கு விமானம் ஏறும் முன்னால் சென்னையில் நடந்த ஒரு நிகழ்ச்சி நம் கவனத்துக்கு கொண்டு வரப்படுவதில்லை. திருமாவளவனின் பாஸ்போர்ட் காணாமற்போய்விட்டதாகக் கூறப்படுகிறது. மாற்று பாஸ்போர்ட் வாங்க, இலங்கை புறப்படுவதற்கு சில நேரங்கள் முன்னர் சாஸ்திரி பவன் பாஸ்போர்ட் அலுவலகத்துக்கு அவர் ஆதரவாளர்கள் புடை சூழ ஏராளமான கார்களில் சென்று இறங்கினார். அலுவலக நேரம் முடிந்துவிட்டது. ஆனால் அவருக்கு பாஸ்போர்ட் வழங்கப்பட்டது. இப்படிப்பட்ட சலுகை ஒரு சாதாரண மனிதனுக்கு ஒருபோதும் எந்த அரசு அலுவலகத்திலும் கிடைக்கவே கிடைக்காது. பத்துப் பதினைந்து கார்களில் கொடி பறக்க ஆதரவாளர்களின் முழக்கங்கள் ஒலிக்க வரும் செல்வாக்கு இருந்தால் மட்டுமே இத்தகைய விதி மீறல்கள் சாத்தியம். ஒரு திருமா அல்ல, ஒவ்வொரு அரசியல் பிரமுகரும் அப்படிப்பட்டவர்களாகவே இங்கே வார்க்கப்பட்டிருக்கிறார்கள்.

அமெரிக்காவிலோ, வேறு மேலை ஜனநாயக நாட்டிலோ

இதெல்லாம் நடக்கவே நடக்காது. நடக்கவிடமாட்டார்கள். சின்ன அத்துமீறல்களை ஜான் காசிச் போன்றவர்கள் செய்தால் கூட உடனடியாக எதிர்ப்புக் குரல்கள் ஓங்கி ஒலிக்கின்றன. மக்கள் சக்திக்கும் நியாயத்துக்கும் அடி பணியவேண்டியிருக்கிறது.

இங்கே படித்த வர்க்கம் எல்லா முறைகேடுகளுக்கும் உடந்தையாகத் துணை போகிறது. மயிரைப் பிளக்கும் வாதங்கள் மூலம் ஊழல்களை நியாயப்படுத்த இங்கே அறிவுஜீவிகள் இருக்கிறார்கள். பள்ளிக்கூட நிர்வாகத்தின் ஆணவம் பற்றியோ, பாஸ்போர்ட் அலுவலக சம்பவம் பற்றியோ படித்த வர்க்கம் முணுமுணுப்பது கூட கிடையாது. வாய்ப்பு கிடைத்தால் நீரா ராடியாவாக ஆவதற்கு தயாரான மன நிலையிலேயே மெத்தப் படித்த பலரும் இருக்கிறார்கள். மாட்டினால் ராசாக்கள் மட்டும்தானே மாட்டுவார்கள்.

இதையெல்லாம் ஏன் எழுதுகிறீர்கள், வேண்டாமே. கருணாநிதி, ஜெயலலிதா பற்றி பிளந்து கட்டுங்க போதும். இதெல்லாம் எதுக்கு என்று சொல்கிற படித்த மேதாவிகளை சந்திக்கும்போது மிகுந்த அயர்வுதான் ஏற்படுகிறது.

நமக்குத் தலைமையேற்க காமராஜ்களும் கக்கன்களும் கிடைக்கமாட்டார்கள். காவலன் விஜய்தான் நம் தகுதிக்கேற்றத் தலைமை.

### இந்த வாரத் திட்டு

ஸ்பெக்ட்ரம் பற்றி விசாரிக்க இப்போது ஒப்புக் கொள்ளுகிற கூட்டுப் பாராளுமன்றக் குழு நியமனத்துக்கு இரண்டு மாதங்கள் முன்பே ஒப்புக் கொண்டிருந்தால் அவையின் நேரமும், பணச் செலவும் எவ்வளவு மிச்சமாகியிருக்கும். வறட்டு பிடிவாதம் காட்டிய மன்மோகன் சோனியா காங்கிரஸ் அரசுக்கு இ.வா.தி,

### படித்ததில் பிடித்தது

தேர்தல் கூட்டணி என்பது எங்கள் வாக்குகள் உங்களுக்கு; உங்கள் வாக்குகள் எங்களுக்கு என்பதாகும். எங்கள் கொள்கைகள் உங்களுக்கு, உங்கள் கொள்கைகள் எங்களுக்கு என்பதல்ல.

தொல்.திருமாவளவன்.

***கல்கி 26.2.2011***

# ஏன் தொடங்கினார் எம்.ஜி.ஆர் ?

அ.தி.மு.க பிரமுகர் சேகர் பாபு தி.மு.கவில் தன் ஆதரவாளர்களுடன் இணைந்த பொதுக் கூட்டத்தில் பேசும்போது கலைஞர் கருணாநிதி, " எம்.ஜி.ஆர் என்ன நோக்கத்துக்காக அ.தி.முகவைத் தொடங்கினாரோ அதிலிருந்து அது விலகிப் போய்விட்டது. இதை தாமதமாக உணர்ந்தாலும், உறுதியானமுடிவு எடுத்து இப்போது சேகர்பாபு அதிலிருந்து விலகி நம்மிடம் வந்திருக்கிறார்" என்று பேசியிருக்கிறார்.

இப்படி விசித்திரமான கருத்துகளை வரலாறு தெரியாத ஒரு தலைமுறையைக் குழப்பும் விதத்தில் விதைப்பது கருணாநிதி தொடர்ந்து பின்பற்றிவரும் சாமர்த்தியமான உத்தி.

என்ன நோக்கத்துக்காக எம்.ஜி.ஆர் அ.தி.மு.கவைத் தொடங்கினார், அதிலிருந்து எப்படி அ.தி.மு.க விலகிவிட்டது என்பதை மட்டும் கருணாநிதி எச்சரிக்கையாக சொல்லாமல் விட்டுவிட்டார். அது என்ன என்று தெரியாதவர்கள், எம்.ஜி.ஆர் ஏதோ உன்னதமான சமூக கொள்கைகளை தூக்கிப் பிடிக்க கட்சி தொடங்கியதாகவும் அதிலிருந்து அந்தக் கட்சி விலகிவிட்டதாகவும் அந்த மேன்மையான கொள்கைகளை எல்லாம் தொடர்ந்து நிறைவேற்றுவது தி.மு.கதான் என்றும் மயக்கம் கொள்ளவைப்பதே கருணாநிதியின் நோக்கம்.

உண்மையில் ஏன் எம்.ஜி.ஆர் 38 வருடங்.களுக்கு முன்னால் அ.தி.மு.கவைத் தொடங்கினார் என்ற காரணங்கள் இப்போது 55 வயதைக் கடந்தவர்களுக்கு மட்டுமே நினைவில் இருக்கும் வாய்ப்பு இருக்கிறது. அடுத்தடுத்த தலைமுறைகளைக் குழப்புவதற்காகவே

கருணாநிதி இப்படி பேசியிருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை.

கருணாநிதி என்ற தீய சக்தியை அரசியலிலிருந்து அகற்றவும், அண்ணா உருவாக்கிய தி.மு.கவின் அசல் நோக்கங்களைக் காப்பாற்றவும்தான் எம்.ஜி.ஆர் அ.தி.மு.கவைத் தொடங்கினார் என்பதை 1972லிருந்து 1987ல் அவர் இறக்கும்வரை எம்.ஜி.ஆர் பல முறைத் திரும்பத் திரும்ப சொல்லி வந்திருக்கிறார். எம்.ஜி.ஆர் இறக்கும்வரையில் கருணாநிதியால் ஒரு தேர்தலிலும் வெற்றிபெற்று ஆட்சியைப் பிடிக்கவேமுடியவில்லை என்பதும் இன்னொரு முக்கிய வரலாற்றுச் செய்தி.

1972ல் எம்.ஜி.ஆர் கம்யூனிஸ்ட் கட்சியினரின் உதவியுடன் கருணாநிதிக்கும் அவரது ஆட்சிக்கும் எதிராக ஊழல் குற்றச்சாட்டுகளை ஆளுநரிடம் அளித்தார். அவற்றுக்கெல்லாம் சட்டமன்றத்தில் கருணாநிதி அளித்த மழுப்பலான பதில்களை அன்றைய மத்திய காங்கிரஸ் அரசு ஏற்கவில்லை. பிரதமர் இந்திரா காந்தி நீதிபதி சர்க்காரியா கமிஷனை நியமித்து ஊழல் குற்றச்சாட்டுகளை விசாரிக்கச் செய்தார். சர்க்காரியா கருணாநிதி அரசு ஊழல்களைச் செய்திருப்பதாக தெளிவாக அறிவித்தது. அதன் அடிப்படையில் கருணாநிதி மீதும் அவரது சகாக்கள் மீதும் வழக்குகள் தொடரப்பட்டன.

அந்த வழக்குகளைத் திரும்பப் பெற செய்ய, கருணாநிதி படாத பாடு பட்டார். அப்போது அவரது கூட்டாளியாக இருந்த ஜனதா கட்சி ஆட்சியின் பிரதமர் மொரார்ஜி தேசாய் வழக்குகளை திரும்பப் பெற மறுத்துவிட்டார். மறுபடியும் வழக்கு போட்ட இந்திரா காந்தி காலிலேயே விழுந்துதான் கருணாநிதி அந்த வழக்குகளைத் தொடர விடாமல் தப்பிக்க முடிந்தது. இந்த சரித்திரமெல்லாம் நன்றாகத் தெரிந்த காங்கிரஸ்காரர்கள்தான் ப.சிதம்பரமும், தங்கபாலுவும்.

1980ல் தி.மு.க காங்கிரஸ் கூட்டணி உருவாக்கப்பட்டு எம்.பி.தேர்தலில் ஜெயித்தபின்னர், எம்.ஜி.ஆர் அரசைக் கலைக்கும்படி இந்திராவை கருணாநிதிதான் வற்புறுத்தினார். 356ம் பிரிவின் கீழ் மாநில அரசைக் கலைக்கும் உரிமை மத்திய அரசுக்கு இருக்கக்கூடாது என்று தி.மு.க அரசு கலைக்கப்படும்போதெல்லாம் சத்தம் போடும் கருணாநிதி அதே 356ஐ எம்.ஜி.ஆருக்கு எதிராகப் பயன்படுத்தத் தயங்கவே இல்லை.

ஆனால் எம்.ஜி.ஆர் ஆட்சிக் கலைப்புக்குப் பின் நடந்த சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க காங்கிரஸ் அணி படு தோல்வி அடைந்தது. அதன்பின்னர் காங்கிரஸ் அ.தி.மு.க பக்கம் போய்விட்டது. அடுத்த 13 வருடங்கள் அ.தி.மு.கவுடன்

தானிருந்தது.

அப்போது சர்க்காரியா கமிஷன் தொடர்பான ஊழல் வழக்குகளிலிருந்து தப்பிக்க காங்கிரசிடம் சரணாகதி அடைந்த கருணாநிதி இப்போது ஸ்பெக்ட்ரம் ஊழல் வழக்கில் தன் குடும்பத்தினரும் மாட்டிவிடாமல் தடுப்பதற்கு காங்கிரசிடம் சரணாகதி அடையும் நிலையில் இருக்கிறார்.

அதிக இடங்கள் தேவை, ஜெயித்தால் கூட்டணி ஆட்சி; ஆட்சியில் காங்கிரசுக்கும் பங்கு; துணை முதல்வர் பதவி உண்டு என்ற கோரிக்கைகளை இப்போது காங்கிரஸ் வலியுறுத்தி பேரம் பேசிக் கொண்டிருக்கிறதல்லவா. இதே பேரத்தை 1980லும் பேசியது. அப்போது அத்தனை கோரிக்கைகளையும் ஒப்புக் கொண்டு, காங்கிரசுடன் சேர்ந்து குறைந்த பட்சப் பொது திட்டம் என்ற பெயரில் ஒரு கூட்டு தேர்தல் அறிக்கையையும் கருணாநிதி வெளியிட்டார். கூட்டணி ஜெயித்தால் முதல்வர் பதவியும் தி.மு.கவுக்கு இல்லாமற் போய்விடுமோ என்ற அளவுக்கு தி.மு.கவினருக்கு பயம் இருந்தது.

இந்திராவே பகிரங்கமாக, நாங்கள் ஜெயித்தால் கருணாநிதிதான் முதல்வர் என்று அறிவித்தார். ஆனாலும் ஜெயிக்கவில்லை, காரணம் எமெர்ஜென்சி ஒடுக்குமுறைகளில் அல்லற்பட்டிருந்த தி.மு.க தொண்டர்கள் காங்கிரஸ் உறவை விரும்பவில்லை. எம்.ஜி.ஆரை வைத்து தி.முகவை உடைத்த நாம் ஏன் திரும்ப தி.மு.கவுக்கு உயிர் தரவேண்டும் என்ற அதிருப்தி காங்கிரசாருக்கு இருந்தது. ஒரே அணியில் இருந்து கொண்டு விரோத மனநிலையில் வேலை செய்தார்கள். எம்.ஜி.ஆர் அரசை டிஸ்மிஸ் செய்தது அவருக்குப் பெரும் அனுதாபத்தையும் ஏற்படுத்தியிருந்தது. தி.மு.க காங்கிரஸ் கூட்டணி படு தோல்வியடைந்தது.

இப்போதும் அதே போன்ற சூழ்நிலைகள் நிலவுகின்றன. கூட்டணி என்றும் பாராமல் ராசாவைக் கைது செய்து காங்கிரஸ் ஆட்சி சிறையில் அடைத்திருப்பது தி.மு.கவினர் மத்தியில் வெறுப்பை ஏற்படுத்தியிருக்கிறது. ஒழுக்க சீலர் என்ற பிம்பத்துடன் வலம் வந்த மன்மோகன் ஆட்சிக்கு பெருங்களங்கத்தை ஏற்படுத்திய ஸ்பெக்ட்ரம் ஊழலை முன்னின்று நடத்தியிருக்கும் தி.முகவை நாம் ஏன் தாங்கிப் பிடிக்க வேண்டும் என்ற எரிச்சல் காங்கிரசாரிடம் இருக்கிறது.

வீரமணி விடுக்கும் வீராப்பான அறிக்கையின் அடிப்படையில் காங்கிரசை உதறிவிட்டு வரும் நிலையில் நிச்சயம் தி.மு.க இல்லை. காங்கிரசைப் பொறுத்த மட்டில் கூடுதலாக பத்து சீட் கொடுக்க தி.மு.க முன் வந்தாலும் கூட லாபம்தான். தேர்தலுக்குப்

பின் இழுபறி நிலை ஏற்பட்டால், அ.தி.மு.கவுடன் கூட்டு சேரவும் காங்கிரஸ் தயங்கப்போவதில்லை. தி.மு.க இப்போது குடும்பச் சண்டையாலும் ஸ்பெக்ட்ரம் நெருப்பாலும் எரிகிற வீடு. அதில் பிடுங்கின வரை லாபம் என்பதே காங்கிரசின் அணுகுமுறை.

தி.மு.கவுக்கு இருக்கும் ஒரே நம்பிக்கை தருமம் தலை காக்கும் என்பதுதான். அரசு கஜானாவிலிருந்து அள்ளி அள்ளி வீசி இலவசம் என்ற பெயரில் செய்திருக்கும் தான தர்மங்கள், இனி தேர்தல்நேரத்தில் செய்யப்போகும் தர்மங்கள் எல்லாம்தான் தங்களைக் கரையேற்றும் என்று அது நம்பிக் கொண்டிருக்கிறது.

எப்படிப் பார்த்தாலும், எந்த நோக்கத்துக்காக எம்.ஜி.ஆர். அ.தி.மு.கவைத்தொடங்கினாரோ அந்த நோக்கம் இன்னும் முழுமையாக நிறைவேறவில்லை. இந்தத் தேர்தல்தான் அதை இறுதியாகத் தீர்மானிக்கப் போகிறது. எம்.ஜி.ஆரின் கனவை ஜெயலலிதா சாதிப்பாரா, அல்லது எம்.ஜி.ஆரின் கனவு கனவாகவே போய்விடுமா என்பது தீர்மானிக்கப்படும்.

### இந்த வார சந்தேகம்

பிரபலமான ஒரு தனியார் பல்கலைக்கழகத்தின் அதிபர் ஜாதி சங்கம் தொடங்கி, அடுத்துக் கட்சி ஆரம்பித்து அரசியலில் 'குதித்ததும்' சினிமா நடிகர்கள் போல ஆகிவிட்டார். அவர் கட்சி நடத்தும் விவசாயிகள் மாநாட்டுக்காக, கீழ்ப் பாய்ச்சி வேட்டி கட்டி துண்டு போட்டு கையில் மண்வெட்டியுடன் போஸ் கொடுத்த படத்துடன் தமிழகமெங்கும் போஸ்டர் ஒட்டியிருக்கிறார். கட்சி சார்பில் மகளிர் மாநாடு நடத்தினால் புடவை கட்டிக் கொண்டு போஸ் கொடுப்பாரோ ?

### இந்த வாரக் கேள்வி

மத்திய அரசின் வரவு செலவு திட்டத்தில் கல்விக்கு 52 ஆயிரம் கோடி ரூபாய்கள். சுகாதாரத்துக்கு 26 ஆயிரம் கோடி. விளையாட்டுக்கு வெறும் 1121 கோடி. ஆனால் ராணுவத்துக்கு மட்டும் ஒரு லட்சத்து 64 ஆயிரத்து 415கோடிகள். அரசு வருவாயில் 11 சதவிகிதம் வருமான வரியிலிருந்து வருகிறதாம். ராணுவ செலவும் அரசின் செலவில் 11 சதவிகிதம். ராணுவ செலவை சரி பாதியாகக் குறைத்து கல்வி, சுகாதார ஒதுக்கீட்டையெல்லாம் இரண்டு மடங்காக்கும் பட்ஜெட் எப்போது வரப் போகிறது ?

### இந்த வாரப் பூச்செண்டு

சென்னை உயர்நீதி மன்றத்துக்கும் சென்னை மாநகர காவல் துறையினருக்கும் இ.வா.பூ. பஸ் தினம் என்ற பெயரில்

சென்னையில் சில கல்லூரி மாணவர்கள் செய்து வரும் அராஜகங்களுக்கு முற்றுப் புள்ளி வைக்கும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இதற்கு முழு ஒத்துழைப்பைத் தரும் பொறுப்பு கல்லூரி முதல்வர்களுக்கும் போக்குவரத்து ஊழியர்களுக்கும் உள்ளது.

*கல்கி 5.3.2011*

# மானமிகு கலைஞர் கருணாநிதி சரணாகதி

**த**ன்னுடைய 75 வருடப் பொதுவாழ்க்கையின் இறுதியில் இத்தனை பெரிய அவமானத்தை கலைஞர் கருணாநிதி சந்தித்திருப்பது பரிதாபமாகத்தான் இருக்கிறது. அரசியல் சாணக்கியர், ராஜதந்திரி என்றெல்லாம் புகழப்பட்டவரின் அரசியல் கணக்கு அவர் பேரன் வயதில் இருக்கும் ராகுல் காந்தியிடம் அடி வாங்கியிருக்கிறது.

எப்போதும் கண்ணியமாக நடந்துகொள்கிற கூட்டணித் தலைவரான சோனியாவிடம் இதுவரை மிரட்டியே காரியம் சாதித்து வந்த கருணாநிதிக்கு, இனி அந்த மிரட்டலகள் வேலை செய்யாது என்பது எப்படி புரியாமல் போயிற்று என்றுதான் புரியவில்லை. எத்தனை மந்திரி பதவி வேண்டும், யார் யாருக்கு எந்த இலாகா ஒதுக்கப்படவேண்டும் என்பதையெல்லாம் ஒவ்வொரு முறையும் காங்கிரசை மிரட்டியே சாதித்து வந்திருக்கிறது தி.மு.க. இந்த முறை முடியவில்லை.

அறுபது இடம் வரையில் தர ஒப்புக் கொண்டோம். அதற்குப் பின்னர் இன்னும் மூன்று கேட்டால் எப்படி நியாயம் ? அதுவும் எந்தெந்த தொகுதி என்பதை அவர்களே முடிவு செய்யவேண்டுமென்று சொன்னால் எப்படி என்று ஒரு புலம்பல் அறிக்கை வெளியிட்டுவிட்டு அமைச்சரவையிலிருந்து விலகுகிறோம் என்று மிரட்டல் ஆயுதத்தைக் கருணாநிதி கையில் எடுத்தபோது, பழைய காங்கிரசாக இருந்திருந்தால் நிச்சயம் பயந்திருக்கும்.

இந்த முறை காங்கிரஸ் தி.முகவின் மிரட்டல்களுக்கு பயப்படப் போவதில்லை என்பதற்கான அறிகுறிகள் தெளிவாக இருந்தன. ஆனால் அவை எதுவும் அரசியல்

சாணக்கியரான கருணாநிதிக்கு உறைக்கவே இல்லை. முதல் கட்டப் பேச்சு வார்த்தைகளுக்கு வந்த காங்கிரஸ் குழுவில் தி.மு.. கவுக்கு ஜால்ரா போடும் தங்கபாலுவை விட ப.சிதம்பரத்துக்கே முக்கியத்துவமும் அதிகாரமும் இருந்ததை நடத்திய பேச்சிலேயே தி.மு.க உணர்ந்திருக்க வேண்டும். டெல்லிக்குச் சென்று சோனியாவிடம் தகவல்களைப் பரிமாறும்போதும், தங்கபாலு, குலாம் நபி ஆசாத் போன்ற தி.மு.க ஆதரவு நபர்கள் பின் தள்ளப்பட்டனர். முன்பிருந்திராத அளவு ஒவ்வொரு கட்டத்திலும் ராகுல் காந்தியின் பங்களிப்பு இந்த முறை அதிகரித்திருந்ததையும் தி.மு.க கவனிக்கத் தவறிவிட்டது.

எல்லாவற்றுக்கும் மேலாக கருணாநிதியின் தி.மு.க மத்திய அமைச்சர்கள் ராஜினாமா மிரட்டல் அறிவிப்பு வெளியானபிறகு டெல்லி காங்கிரஸ் தலைமையிடமிருந்து துளிக் கூட சலனமே இல்லை. பழைய நிலையில் காங்கிரஸ் இருந்திருந்தால், அடுத்த விமானத்தில் குலாம் நபி ஆசாத் சென்னை வந்திருப்பார். பிரணாப் சென்னை வருகிறார், ஆசாத் சென்னை வருகிறார் என்று தி.மு.க தரப்பிலிருந்து பல்வேறு தொலைக்காட்சி சேனல் நிருபர்களிடம் சொல்லி செய்தி வரவழைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் காங்கிரசிடமிருந்து எந்த அசைவும் இல்லை.

பிரதமரை சந்திக்க அழகிரி, தயாநிதி முதலியோர் நேரம் கேட்டதும், பிரதமர் அலுவலகம் நேரம் ஒதுக்கிவிட்டது. அதற்கு என்ன அர்த்தம் என்று தி.மு.கவுக்கு அப்போதுதான் உறைத்தது. நீங்கள் வந்து ராஜினாமா கடிதங்களைக் கொடுத்துவிட்டுப் போகலாம் என்பதுதான் அதன் அர்த்தம். ராஜினாமா செய்வோம் என்று மிரட்டிக் கொண்டிருப்பது வேறு. கடிதத்தைக் கொண்டு போய் தருவது வேறு. எனவே தி.மு.க தரப்பிலிருந்து பிரணாப் முகர்ஜி மூலம் சமரசத்துக்கு கடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது

சோனியாவை அழகிரியும் தயாநிதி மாறனும் சந்தித்தபோது எல்லாம் மிகத் தெளிவாக தி.மு.கவுக்கு புரிந்தது. முன்பு போல இனி காங்கிரசை மிரட்ட முடியாது. ஆட்சி கவிழ்ந்தாலும் சரி, எனக்குக் கவலையில்லை. ஏழாண்டுகளாக உங்களிடம் கண்ணியமாக நடந்து கொண்டிருக்கிறோம். ஆனால் நீங்கள் இப்போது எங்களை மிரட்டுவதை சகிக்க முடியாது என்று சோனியா தெளிவாக சொல்லிவிட்டார். மிரட்டலுக்கெல்லாம் இனி பயப்படமாட்டோம் என்று டெல்லியில் இருக்கும் காங்கிரஸ் தலைமை சொன்ன அடுத்த நிமிடமே வாலைச் சுருட்டிக் கொண்டு காங்கிரஸ் சொன்னதற்கெல்லாம் ஒப்புக் கொண்டுவிட்டது தி.மு.க.

வீரமணி வர்ணிப்பில் மானமிகு கலைஞர் கருணாநிதியாக

இருந்தவர் இப்போது அவமானமிகு கலைஞர் சரணாகதியாகிவிட்டார்.

தன் வழக்கமான வார்த்தை விளையாட்டுகளின் மூலம் தன் முகத்தில் கரி பூசப்பட்டதை மறைக்க முயற்சிக்கிறார் கலைஞர் சரணாகதி. காங்கிரசுக்கு 63 சீட்டுகள் கொடுத்ததை 63 நாயன்மார்களுடன் ஒப்பிட்டு அவமானத்திலிருந்து பத்திரிகையாளர்களின் கவனத்தை திருப்ப முயற்சிக்கிறார்.

'விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடனும் தோழமை உணர்வுடனும்' இந்த முடிவு எடுக்கப்பட்டதாக இப்போது சொல்கிறார். ஏன் இந்த மனப்பான்மையும் உணர்வும் மூன்று தினங்கள் முன்னால் இல்லாமல் இப்போது முளைத்தன என்பதை அவரால் விளக்க முடியாது. தேவையில்லாமல் பத்திரிகைகள் விஷமம் செய்தன என்று குற்றம் சாட்டுகிறார். உண்மையில் பத்திரிகைகளும் சேனல்களும் தி.மு.க பிரமுகர்கள் ஆஃப் தி ரிகார்ட் என்று சொல்லி வரவழைக்க முயன்ற பொய்ச் செய்திகளையெல்லாம் தெரிவித்துக் கொண்டிருந்தன என்பதுதான் உண்மை. காங்கிரஸ் தரப்பிலிருந்து எதுவும் வரவில்லை.

தி.மு.க மிரட்டல் ஆயுதத்தைக் கையில் எடுப்பதற்கு முன்னால் காங்கிரஸ் என்ன கேட்டதோ அதையேதான் இப்போது தந்திருக்கிறது. மொத்தம் 63 தொகுதிகள். எந்தெந்த தொகுதிகள் என்பதையும் காங்கிரஸ் தேர்வு செய்யலாம். ஆட்சியில் பங்கு பற்றி பகிரங்க அறிவிப்பு இல்லாவிட்டாலும், அதற்கும் உடன்பட்டே ஆகும் நிலை. போட்டியிடும் 121 தொகுதிகளில் 118 தொகுதிகளில் தி.மு.க வென்றால் மட்டுமே தனித்து ஆட்சி அமைக்க முடியும். அதற்கு நிச்சயம் வாய்ப்பு இல்லை. எனவே ஆட்சி அமைத்தால், காங்கிரஸ் உள்ளிட்ட எல்லா கூட்டணிக் கட்சிகளுக்குமே ஆட்சியில் பங்கு தரவேண்டிய கட்டாயம் இருக்கிறது.

தி.மு.கவின் மிரட்டல்கள் இந்த முறை புஸ்வாணமானதற்குக் காரணம் என்ன ?

கலைஞர் சரணாகதியின் வீட்டுக் கதவையே சி.பி.ஐ தட்டும் நிலைக்குக் கொண்டு வந்த ஸ்பெக்ட்ரம் ஊழல்தான். தி.மு.கவின் அரசியல் வாழ்க்கையை கி.மு. கி.பி போல ஸ்.மு., ஸ்.பி என்று பிரித்துப் பார்க்கலாம். ராசா பதவி நீக்கப்பட்டதை முதலில் சகிக்க வேண்டியிருந்தது. அந்த இடத்தில் இன்னொரு தி.மு.க அமைச்சர் நியமிக்கப்படாததை சகிக்க வேண்டியிருந்தது. ராசா கைது செய்யப்பட்டதைப் பொறுத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. ஈழத் தமிழர் பிரச்சினைக்கெல்லாம் கூட அதிகபட்சம் சில மணி நேர உண்ணாவிரதம்தான். அப்போதெல்லாம் பிரயோகிக்காத

ராஜினாமா மிரட்டலை இப்போது தி.மு.க தலைவர் பயன்படுத்திப் பார்க்கக் காரணம் என்ன ?

அடுத்து சி.பி.ஐ விசாரிக்க வேண்டியவர்கள் பட்டியலில் ஸ்பெக்ட்ரம் ஊழல் பணத்தை மும்பை கம்பெனியிடமிருந்து கடனாகப் பெற்ற கலைஞர் டி.வியின் இயக்குநர்களான தயாளு அம்மாளுவும் கனிமொழியும் இருக்கிறார்கள். இந்த நெருக்கடிச் சூழலில் தொகுதிப் பங்கீட்டை பேரமாக்கி குடும்பத்தைக் காப்பாற்ற தி.மு.க தலைவர் செய்த முயற்சிகள் விபரீதமாகிவிட்டன.எல்லாம் நலமாக முடிந்துவிட்டது எனக்கு மகிழ்ச்சிதான் என்று கலைஞர் சரணாகதி சொன்னாலும், விளைவுகள் என்ன ?

சராசரி தி.மு.க தொண்டன் தன் தலைவர் மீதும் சரி, காங்கிரஸ் மீதும் சரி கடும் எரிச்சலில் இருக்கிறான் என்பதுதான் நிஜம். தன் குடும்ப நலனுக்காக கட்சியைத் தலைவர் காங்கிரசிடம் விற்றுவிட்டார். ஈசன் சிறுத்தொண்ட நாயனாரிடம் பிள்ளைக் கறி கேட்டது போல காங்கிரஸ் கேட்டது. சொந்தப் பிள்ளையைக் காப்பாற்ற, கழகம் என் குடும்பம் என்று சொல்லிவந்த தலைவர், கழகக் குடும்பத்தைக் கறி சமைத்துக் காங்கிரசுக்குப் பரிமாறிவிட்டார். 44 வருடங்களாக எங்களை அண்டிப் பிழைத்த கட்சி எங்களை இப்போது மிரட்டுவதா என்று கொதிப்படைந்திருக்கும் தி.மு.க தொண்டன் நிச்சயம் 63 தொகுதிகளில் காங்கிரசின் வெற்றிக்காக அரும்பாடெல்லாம் படப் போவதே இல்லை.

மறுபக்கம், காங்கிரஸ் கட்சிக்குள் ஏழாண்டு காலமாக இருக்கிற அதிருப்தி இப்போது 63 சீட் அறிவித்ததால் தீர்ந்துவிடவில்லை. ஸ்பெக்ட்ரம் ஊழலினால் தமிழ்நாட்டில் மட்டும்தான் தி.மு.கவுக்கு இழப்பு. காங்கிரசுக்கோ அனைத்திந்திய அளவில் ஒவ்வொரு மாநிலத்திலும் அதற்கு எதிராக ஸ்பெக்ட்ரம் ஊழல் எதிர்க்கட்சிகளால் பெரிதுபடுத்தப்படுகிறது. தி.மு.கவைக் கழட்டி விட்டிருந்தால் இந்த பழியிலிருந்து தப்பித்திருக்கலாம் என்றே இளைஞர் காங்கிரசினர் நினைக்கிறார்கள். ஜெயலலிதா ஸ்பெக்ட்ரம் விவகாரம் தொடங்கியபோதே நீட்டிய ஆதரவுக்கரத்தை அப்போதே பற்றியிருக்கலாம் என்று நினைக்கும் காங்கிரசார் தேர்தலில் தங்கள் தொகுதிக்கு வெளியே தி.மு.கவுக்காக ஒரு துரும்பையும் கிள்ளிப் போடப் போவதில்லை.

கலைஞர் சரணாகதியின் சரணாகதியால் தி.மு.கவுக்கு ஏதாவது உடனடி லாபம் என்றால் அது ஒன்றே ஒன்றுதான். காங்கிரஸ் அ.தி.மு.கவுடன் கூட்டு சேர்ந்துவிடாமல் தடுக்க முடிந்திருக்கிறது. அப்படி ஒரு கூட்டு ஏற்பட்டிருந்தால், தேர்தலில் தி.மு.கவின் நிலை இன்னும் சிக்கலாகிவிடும்.

தி.மு.க, காங்கிரஸ் தொகுதி உடன்பாடு சிக்கல் இருவருக்கும் உணர்த்தும் முக்கியமான உண்மை ஒன்று பாக்கி இருக்கிறது. இரு கட்சிகளுக்கும் நீரா ராடியா போன்ற தரகர்கள் எவ்வளவு முக்கியமானவர்கள் என்பதுதான் அது ! நீரா ராடியா இருந்தவரையில் இருதரப்பு பேரங்களும் பரஸ்பரம் சுமுகமாகவே நடந்திருக்கின்றன. இந்த முறை ஒரு நீரா ராடியா இல்லாதது எவ்வளவு பேரிழப்பு தி.மு.கவுக்கு !

**இந்த வாரப் பூச்செண்டு**

முதல் ·முறையாக கூட்டணி அரசியலில் உறுதியாக செயல்பட்டிருக்கும் சோனியா காந்திக்கு.

**இந்த வாரக் கொடுமை**

"தாமஸ் மீது ஊழல் வழக்கு இருப்பது எனக்கு அவரை கண்காணிப்பு ஆணையராக நியமிக்கும் வரை தெரியாது" பிரதமர் மன்மோகன்சிங்.

*கல்கி 12.3.2011*

# நாங்க ரெடி. நீங்க ரெடியா?

“உங்கள் ஓட்டு எங்களுக்கு. எங்கள் ஓட்டு உங்களுக்கு. ஆனால், உங்கள் கொள்கை எங்களுக்கும் எங்கள் கொள்கை உங்களுக்கும் என்பதல்ல கூட்டணி” என்ற திருமாவளவனின் தாரக மந்திரத்தின் அடிப்படையில், எல்லா கட்சிகளும் ஒருவரோடொருவர் கெஞ்சினால் மிஞ்சுவது, மிஞ்சினால் கெஞ்சுவது என்ற தந்திரத்தைப் பயன்படுத்தி இரு பெரும் கூட்டணிகளை ஏற்படுத்திவிட்டார்கள்.

உண்மையில் இவர்கள் யாரிடமும் எந்த ஓட்டும் இல்லை. எல்லா ஓட்டுகளும் நம்மிடம்தான் இருக்கின்றன. நம்மை இவர்கள் வெவ்வேறு அடிப்படையில் தரம் பிரித்து, நாம் அவர்களுடைய கொத்தடிமைகள் என்ற நம்பிக்கையில், நம்மை ஓட்டு வங்கிகளாக உருவகித்து அவர்களுக்குள் பங்கு போட்டு, பேரங்களை நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

தேர்தலுக்கு முன்னால் ஒவ்வொரு வாக்காளரும் நினைக்கவேண்டிய அடிப்படை அம்சம் என் ஓட்டு என்னுடையது. இதை நான் என் விருப்பப்படிதான் போடுவேன். இன்னின்ன நெறிகளின் அடிப்படையில்தான் போடுவேன். ஆட்சியாளரிடம்/ மக்கள் பிரதிநிதியிடம் நேர்மை, சுயநலமின்மை, வெளிப்படைத் தன்மை, திறமை நான்கு தன்மைகளும் இருக்க வேண்டும். ஒன்றிருந்து இன்னொன்று இல்லாவிட்டாலும் சிக்கல்தான். எனவே நான்கும் எந்த அளவு உள்ளன என்பதைப் பரிசீலித்துத்தான் வாக்களிப்பேன் என்று நாம் முதலில் உறுதி கொள்ளவேண்டும்.

எனக்குத் தேர்தல் விதிகளை நிர்ணயிக்கும் அதிகாரம்

இருந்தால் மிகக் குறைந்தபட்சமாக உடனடியாக சிலவற்றை கட்டாயமாக்குவேன். 1. அறுபது வயதுக்கு மேல் யாரும் தேர்தலில் நிற்கக் கூடாது. 2. இரு முறை சட்டமன்ற உறுப்பினராக இருந்திருந்தால் மறுபடியும் நிற்கக்கூடாது. 3. அவர்களுடைய குடும்பத்திலிருந்தும் உடனடி உறவுகளும் நிற்கக் கூடாது. இது போல இன்னும் சில உண்டென்றாலும் இவற்றையெல்லாம் ஏற்படுத்தும் அதிகாரம் எனக்கு இல்லாததால், உடனடியாக நாம் செய்யக் கூடிய சிலவற்றைப் பார்ப்போம்.

முந்தைய 2006ம் வருட சட்டமன்றத் தேர்தல் தொடர்பான ஆய்வறிக்கையை அசோசியேஷன் ஃபார் டெமாக்ரடிக் ரிஃபார்ம்ஸ் என்ற அமைப்பு வெளியிட்டிருக்கிறது. அதில் சொல்லப்பட்டுள்ள முக்கியமான செய்திகளில் ஒன்று நம் எம்.எல்.ஏக்களின் குற்றப் பின்னணி பற்றியதாகும். மொத்தம் 234 எம்.எல்.ஏக்களில் 77 பேர் மீது மொத்தமாக 176 கிரிமினல் வழக்குகள் நிலுவையில் உள்ளன. இந்த 77ல் 39 பேர் தி.மு.க. 15 பேர் பா.ம.க. 9 பேர் காங்கிரஸ். ஒரு விடுதலைச் சிறுத்தை. அ.இ.அ.தி.மு.கவினர் எட்டு பேர். ம.தி.முக 2. கம்யூனிஸ்ட் 2. மார்க்சிஸ்ட் 1.

மொத்த 77 பேரிலும் மிகக் கடுமையான கிரிமினல் குற்றசாட்டுகளுக்கு உள்ளானவர்கள் 25 பேர். அதில் தி.மு.க 16. பா.ம.க. 4. காங்கிரஸ் 3. அ.இ.அ.தி.மு.க 1. கம்யூனிஸ்ட் 1. ஆள் கடத்தல், அடைத்து வைத்தல், மிரட்டல், பொய் வாக்குமூலம் அளித்தல், கொலை முயற்சி, திருட்டு, வழிப்பறி, கொடூர ஆயுதங்களால் தாக்குதல், ராஜதுரோகம், போன்ற இ.பி.கோ பிரிவுகளில் 52 வழக்குகளில் 35 வழக்குகள் தி.மு.க எம்.எல்.ஏக்கள் மீது உள்ளன. பா.ம..கவினர் மீது 9, காங்கிரசார் மீது 5, அ.இ.அ.தி.மு.கவினர் மீது ஒன்று7, கம்யூனிஸ்ட்டுகள் மீது 2 வழக்குகள் உள்ளன.

கொடும் குற்றச்சாட்டுகளுக்கான கிரிமினல்வழக்குகள் உள்ள 25 எம்.எல்.ஏக்கள் யார் யார் ? தி.மு.க: 1. வில்லிவாக்கம் ரங்கநாதன். 2. கண்டமங்கலம் புஷ்பராஜ் 3. திருவொற்றியூர் கே.பி.பி.சாமி 4.குறிஞ்சிப்பாடி எம்.ஆர்.கே பன்னீர்செல்வம். 5. மொரப்பூர் முல்லைவேந்தன். 6. பெண்ணகரம் பெரியண்ணன். 7. ராதாபுரம் அப்பாவு. 8. விழுப்புரம் பொன்முடி. 9. ஆண்டிமடம் சிவசங்கர். 10. சாத்தூர் கே.கே.எஸ்.எஸ்.ஆர் ராமச்சந்திரன் . 11. புரசைவாக்கம் வி.எஸ்.பாபு. 12. சத்தியமங்கலம் ஏ தர்மலிங்கம். 13. எழும்பூர் பரிதி இளம் வழுதி. 14. (மறைந்த) மதுரை மத்திய தொகுதி பழனிவேல்ராஜன். 15. ஆயிரம் விளக்கு மு.க ஸ்டாலின். 16. சேப்பாக்கம் மு.கருணாநிதி. பா.ம.க: 17. மேட்டூர் ஜி.கே மணி. 18.முகையூர் கலியவரதன். 19. பண்ருட்டி வேல்முருகன். 20. பவானி

ராமநாதன். காங்கிரஸ்: 21. போளூர் விஜயகுமார். 22. தொட்டியம் ராஜசேகரன். 23. அரியலூர் அமரமூர்த்தி. அ.இ.அ.தி.மு.க : 24. பர்கூர் தம்பிதுரை. கம்யூனிஸ்ட் : 25. சிவகங்கை குணசேகரன்

ஒவ்வொரு சொத்துக்குப் பின்னாலும் ஒரு குற்றம் இருக்கிறது என்று ஒரு பழமொழி உண்டு. குற்றத்துக்குப் பின்னால் சொத்து இருப்பதும் இயல்புதானே. தமிழ்நாட்டின் 234 எம்.எல்.ஏக்களில் அவர்களே அறிவித்த சொத்துக் கணக்கின்படி 57 பேர் கோடீஸ்வரர்கள். அதில் 31 பேர் தி.மு.க. 12 பேர் காங்கிரஸ். 9 பேர் அ.இ.அ.தி.மு.க. இருவர் ம.தி.மு.க. விடுதலை சிறுத்தைகள், பா.ம.க, தே.மு.தி.கவில் தலா ஒருவர். சொத்துக் கணக்கு காட்டியபோது பான் கார்டு எண்ணைக் குறிப்பிடாதவர்கள் 114 எம்.எல்.ஏக்கள்.

இட ஒதுக்கீடு இருந்தாலொழிய பெண்கள் வரும் வாய்ப்பே கிடையாது என்பதற்கு ஆதாரம்: சென்ற தமிழக சட்டமன்றத் தேர்தலில் நிறுத்திய மொத்த வேட்பாளர்களில் பெண் வேட்பாளர்கள் வெறும் ஆறு சதவிகிதம்தான். ஜெயித்து வந்த எம்.எல்.ஏக்களில் பெண்கள் ஒன்பது சதவிகிதம் !

இந்த விவரங்களையெல்லாம் நாம் இப்போது நினைவுபடுத்திக் கொள்ளவேண்டிய அவசியம் என்னவென்றால் இந்த முறை அரசியல் கட்சிகள் எத்தனை கிரிமினல் குற்றவாளிகளை, எத்தனை கோடீஸ்வரர்களை, எத்தனை பெண்களை நிறுத்துகின்றன என்று ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளத்தான்.

கடந்த சில வாரங்களாகப் பல வாசகர்கள் இந்தத் தேர்தலில் நாம் என்ன செய்யவேண்டும் என்று தெரிவிக்கும்படி என்னை தொலைபேசியிலும் மின்னஞ்சலிலும் கடிதங்களின் வாயிலாகவும் கேட்டுக் கொண்டு இருக்கிறார்கள். யாருக்கு ஓட்டு போடலாம் என்று நான் சொல்லப் போவதில்லை. ஏனென்றால் யார் ஆட்சிக்கு வரவேண்டும் என்று தேர்வு செய்வதானால், அதற்கான தகுதியுடன் ஒரு கட்சியும் களத்தில் இல்லை. யார் ஆட்சிக்கு நிச்சயம் வரக் கூடாது என்ற அடிப்படையில் மட்டுமே தேர்ந்தெடுக்கக்கூடிய மோசமான சூழ்நிலையில் நாம் இருக்கிறோம்.

குறைந்தபட்சம் வேட்பாளர்கள், கட்சிகள் எல்லாரும் வாக்காளர்களுக்கு எப்போதும் பதில் சொல்லக் கடமைப்பட்டவர்கள் என்பதையாவது இந்த தேர்தல் சமயத்தில் நாம் நிலை நிறுத்த வேண்டும். ஒவ்வொரு தொகுதியிலும் போட்டியிடும் எல்லா வேட்பாளர்களையும், ஒரே மேடைக்கு வந்து பொது மக்களின் கேள்விகளுக்கு பதில் கூறச் சொல்லவேண்டும். கட்சி சார்பற்ற சமூக அமைப்புகள் இதற்கு ஏற்பாடு செய்யலாம். நிகழ்ச்சிக்கு வர மறுக்கும் வேட்பாளரின் பெயர் எழுதிய காலி நாற்காலியை

அரங்கில் வைக்கலாம்.

முதலில் ஒவ்வொரு வேட்பாளரும் தன்னைப் பற்றிய தகவல்களை தெரிவித்துவிட்டு தனக்கும் தன் கட்சிக்கும் ஏன் வாக்களிக்க வேண்டும் என்பதைப் பற்றி சுருக்கமாக சொல்லவேண்டும். அதன் பின் பொது மக்களின் கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டும். கேள்விகள் கறாராகவும் கண்ணியமாகவும் இருக்க வேண்டும். இந்த நிகழ்ச்சியை உள்ளூர் கல்லூரி, பள்ளி அரங்குகளை ஏற்பாடு செய்து நடத்தலாம். லோக்கல் கேபிள் டி.வியுடன் பேசி, நேரடி ஒளிபரப்பு செய்யலாம்.

இன்னும் சொல்லப் போனால் இந்த நிகழ்ச்சிகளை தேர்தல் ஆணையமே ஏற்பாடு செய்யலாம். குறைந்தபட்சம், ஏற்பாடு செய்யும் அமைப்புக்கு ஒத்துழைக்கும்படி வேட்பாளர்களை அறிவுறுத்தலாம்.

நேருக்கு நேர் மக்களை சந்திக்க வருமாறு எல்லா வேட்பாளர்களையும் அழைக்கிறேன். நாடெங்கும் கிராம சபை கூட்டங்களை சுதந்திர தினத்தன்று நடத்துவது போல, முடியுமானால் எல்லா ஊர்களிலும் வருகிற ஏப்ரல் 1 வெள்ளிக்கிழமை மாலை 6 மணி முதல் 10 மணி வரை இந்த நிகழ்ச்சியை ஏற்பாடு செய்யும்படி ஆர்வலர்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறேன். ஏப்ரல் 1 முட்டாள்கள் தினம் என்பதற்காக அல்ல. அந்த நாளை நான் எப்போதும் விழிப்பு உணர்வு தினமாகவேக் கொண்டாடி வருகிறேன். ஏனென்றால் அன்றைய தினம் காலையிலிருந்தே நம்மை யாரும் ஏமாற்றிவிடக் கூடாது என்று விழிப்போடு இருக்கிறோம் அல்லவா. அதே விழிப்பு உணர்வுடன் வேட்பாளர் வாக்காளர் சந்திப்பை நடத்த முயற்சிப்போம்.

### இந்த வாரப் பூச்செண்டு

இந்திய, தமிழக வரலாற்றிலேயே முதல்முறையாக ஒரு மாநில முதலமைச்சரின் மனைவி, மகள் இருவரையும் அவர் கட்சி அலுவலகத்தின் மாடியிலேயே வைத்து விசாரித்த சாதனைக்காக சி.பி.ஐக்கு இ.வா.பூ

### இந்த வார எச்சரிக்கை

ஜப்பான் மாதிரி இந்தியாவில் ஆகாது என்று அணு உலைகளைப் பற்றி அலட்சியமாக இருக்க வேண்டாம். விரிவான எச்சரிக்கை அடுத்த வாரம்.

*கல்கி 19.3.2011*

# பிரும்மாண்டமான இலவசம் வருகிறது ! உஷார் !!

**எ**ந்தக் கட்சியும் எந்தத் தலைவரும் ஒரு போதும் அறிவிக்காத ஒரு பிரும்மாண்டமான இலவசம் வாக்காளர்களான நமக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. அதுதான் இலவசக் கதிர்வீச்சு. அதற்கு ஆணவம் மிகுந்த ஜெயலலிதாவா, தியாகதீபம் வைகோவா, சூழ்ச்சிக்காரக் கருணாநிதியா அப்பாவியான வாக்காளர்களா என்றெல்லாம் பாரபட்சமே கிடையாது. எல்லாரையும் அழித்துவிடும்.

தமிழ்நாட்டை அழிக்க வடக்கே கல்பாக்கத்திலும் தெற்கே கூடன்குளத்திலும் அமைந்துள்ள அணு உலைகளே போதுமானவை.

பெரும் விபத்துக்குள்ளான அணு உலையிலிருந்து 140 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள டோக்கியோவில் கதிரியக்க அளவு 20 மடங்கு அதிகமாகிவிட்டது. சென்னைக்கும் கல்பாக்கத்துக்கும் இடையில் வெறும் 80 கிலோமீட்டர்தான். சென்னையில் சுனாமி வந்தபோது கல்பாக்கம் உலையும் பாதிக்கப்பட்டது. பெரிய பாதிப்பு இல்லாததால் தப்பித்துக் கொண்டோம். ஜப்பான் உலைக்கு நேர்ந்தது போல இங்கே நேர்ந்தால் இப்போது இதை எழுத நானும் படிக்க நீங்களும் இருக்க மாட்டோம்.

உடனடியாக சில லட்சம் பேரும் மெல்ல மெல்ல புற்று நோயில் மேலும் பல லட்சம் பேரும் அழிவது இவற்றில் விபத்து ஏற்பட்டால் நிச்சயம். அணு உலையில் பெரும் விபத்து ஏற்பட்டால் அது பல தலைமுறைகளுக்கு நிலம்,

நீர், காற்று, மனிதர்களை நாசமாக்குகிறது. அணுக்கழிவுகளிலிருந்து கதிரியக்கம் ஏற்படாமலும் பரவாமலும் கட்டுப்படுத்தி வைக்க போதுமான தொழில்நுட்பம் உலகில் எங்கேயும் இன்னமும் நூறு சத விகித உத்தரவாதத்துடன் உருவாக்கப்படவே இல்லை. விபத்து ஏற்படாது என்பதற்கு எந்த உறுதியும் கிடையாது. ஏற்பட்டால் தீர்வுகள், நிவாரணங்கள் சாத்தியமும் இல்லை.

ஓர் எழுத்தாளனுக்கு மிகுந்த அலுப்பு தருவது ஒரே விஷயத்தை திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டியிருப்பதுதான். 1986லிருந்து அணுசக்திக்கு எதிராகப் பேசியும் எழுதியும் வருகிறேன். அதற்கு இது வெள்ளி விழா ! மின்சாரம் தயாரிக்க அணு உலைகளை விட்டால் இனி வேறு வழி கிடையாது என்ற விதண்டாவாதம் செய்பவர்கள் சில அடிப்படை உண்மைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். ஐம்பதுக்கு மேற்பட்ட அணு உலைகளை வைத்திருந்தும் ஜப்பானின் மொத்த மின்சாரத்தில் அது வெறும் 30 சதவிகிதம்தான். இந்தியாவில் இப்போது சூர்ய சக்தி, காற்றாலை போன்ற ஆபத்தற்ற மின் தயாரிப்பு முறைகளுக்கு அரசு வெறும் 600 கோடி ரூபாய்தான் செலவிடுகிறது. ஆனால் அவை 5 சதவிகிதம் மின்சாரத்தை தருகின்றன. அணுசக்திக்கோ 3897 கோடி ரூபாய் ஒதுக்கி வெறும் 3 சதவிகித மின்சாரம்தான் கிடைக்கிறது.

நில நடுக்கம், சுனாமி போன்றவற்றிலிருந்து தங்களை பாதுகாத்துக் கொள்ள உலகிலேயே மிகச் சிறப்பான ஏற்பாடுகளை செய்துவைத்திருக்கும் நாடு ஜப்பான். அங்கே நேர்மையும் ஒழுக்கமும் நம்மை விடப் பல மடங்கு அதிகம். அதனால்தான் நம் சுனாமியைப் போல பல மடங்கு பெரிய அழிவு அங்கே ஏற்பட்டும்கூட ஒப்பீட்டளவில் உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் நமது விகிதங்களில் அங்கே இல்லை. அழிவு ஏற்பட்ட எந்த ஊரிலும் ஒரு சிறு கடை கூட சூறையாடப்படவில்லை.கடும் பஞ் சத்துக்கு நடுவிலும் பாதிக்கப்பட்ட மக்கள் ஒழுங்காக கியூவில் நின்று கிடைத்ததை வாங்கிக் கொள்கிறார்கள்.

பள்ளிக்கூடத்திலேயே நில நடுக்கத் தற்காப்பு பயிற்சிகள், ஒத்திகைகள் மாதந்தோறும் குழந்தைகளுக்குத் தரப்படுகின்றன. அணு உலை விபத்து ஏற்பட்டதும் அருகிலிருக்கும் லட்சக்கணக்கானவர்களை இன்னொரு பகுதிக்கு ஒரே நாளில் குடி பெயரச் செய்யும் ஆற்றல் அவர்களுக்கு இருக்கிறது. அதுவே போதாதது என்று அங்கே விமர்சிக்கப்படுகிறது. நம்மால் கூவம் கரை குடிசைவாசிகளுக்கு மாற்று இடம் தருவதைக் கூட ஒழுங்காகச் செய்ய முடிவதில்லை. இலவச வேட்டி சேலை கொடுக்கும் இடத்தில் நெரிசல் தள்ளுமுள்ளுவில் சாகத் தயாராக இருக்கும் சமூகம் நம்முடையது. தலைவர் செத்தால்,

கடைகளை சூறையாடுவது நம் மரபு. தீர்வுள்ள சாயப்பட்டறைக் கழிவையே தீர்க்காமல் ஊரையும் ஆற்றையும் விவ்சாயத்தையும் நாசமாக்கியிருக்கிறோம்.

கல்பாக்கத்தில் விபத்து ஏற்பட்டால் அருகே உள்ள பகுதி மக்களை பாதுகாப்பாக வேறு இடத்துக்கு அழைத்துச் செல்வது பற்றிய ஒத்திகை சில வருடங்கள் முன்பு மாவட்ட ஆட்சியர் முன்னிலையில் நடத்தப்பட்டது. எந்த லட்சணத்தில் தெரியுமா? அழைத்து செல்ல வேண்டிய பஸ்கள் பிரேக் டவுன் ஆகிவிட்டன. காவல் அதிகாரிகளின் வயர்லெஸ் கருவிகள் வேலை செய்யவில்லை.

இந்திய அணு உலைகளில் முழு நேரத் தொழிலாளர்களும் அன்றாடக் கூலிகளும் கடுமையான கதிரிவீச்சுக்கு உட்படுத்தப்படுகின்றனர். எந்த அளவுக்கு கதிர் வீச்சு என்பதை முறையாக ஊழியர்களுக்குத் தெரியப்படுத்துவதில்லை. விபத்துகளில் தினக் கூலிகள் செத்திருக்கிறார்கள் கல்பாக்கத்தில் உள்ளே நடந்த பல கதிர் வீச்சு விபத்துகள் பற்றி அங்குள்ள தொழிற்சங்கம் பட்டியலிட்டு நிர்வாகத்திடம் பல வருடங்கள் முன்பே கொடுத்திருக்கிறது. ஆனால் எதற்கும் முறையான பதில்கள் இல்லை.

நம் அணு உலைகள் பலவும் அணுகுண்டு தயாரிக்கும் இடங்கள் என்பதால், அரசு அவற்றை ராணுவ இடங்களாகக் கருதி எல்லாவற்றையும் ரகசியமாக வைத்துக் கொள்கிறது. வேலை பார்ப்பவர்களுக்கும் சரி, பொது மக்களுக்கும் சரி எதையும் கேட்டு தெரிந்துகொள்ளும் உரிமை இல்லை. குற்றவாளியே நீதிபதியாக இருப்பது போல தவறுகளுக்குப் பொறுப்பான அரசாங்கமே எல்லாம் சரியாக இருப்பதாக முடிவையும் அறிவித்துவிடுகிறது.

அணு உலை வியாபாரத்தில் இருக்கும் அரசுகளும் சரி, தனியாரும் சரி தொடர்ந்து முழு உண்மைகளை சொல்லாமல் அரை உண்மைகளையும் முழுப்பொய்களையும்தான் சொல்லி வந்திருக்கிறார்கள் என்பதற்கு வரலாற்றில் நிறைய சம்பவங்கள் உள்ளன. ஜப்பானில் அணு உலை நடத்தும் ஒரு தனியர் கம்பெனியான டோக்கியோ எலெக்ட்ரிக் பவர் கம்பெனிக்கு அதற்கான கருவிகள் அனைத்தையும் அமெரிக்க ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி விற்றது. அப்படி விற்றபோது அந்தக் கருவிகளின் தொழில்நுட்ப சிக்கல்கள் பற்றி முழுமையான தகவல்களை ஜெனரல் எலெக்ட்ரிக் தரவில்லை என்று அதில் வேலை பார்த்த சுகோகா என்ற ஜப்பானியர் அம்பலப்படுத்தினார். அவருக்கு வேலை போயிற்று. ஆனால் தொழில்நுட்ப சிக்கல்களை ஜெனரல் எலெக்ட்ரிக், டோக்கியோ கம்பெனி இருவருமாக அரசின்

அணு உலைக் கண்காணிப்பாளர்களிடமிருந்து மறைத்தார்கள் என்று பின்னர் தெரியவந்தது.

இந்தியாவில் அமெரிக்கத் தனியார் கம்பெனிகள் அணு உலை விற்பதற்கு வழி செய்யும் ஒப்பந்தத்தைத்தான் மன்மோகன்சிங் இடது சாரிகள், பி.ஜே.பி ஆகியோரின் எதிர்ப்பை மீறி அமெரிக்காவுடன் செய்தார். அப்போது ஆட்சி கவிழாமல் இருப்பதற்கு எம்.பிகள் விலை கொடுத்து வாங்கப்பட்டார்கள் என்பது இப்போது விக்கிலீக்ஸ் அமபலப்படுத்தியிருக்கும் அமெரிக்க தூதர்களின் ரகசியச் செய்திகளால் நிரூபணமாகியிருக்கிறது.

ஊழலும் லஞ்சமும் ஒழுக்கக் கேடும் மலிந்து கிடக்கும் இந்தியச் சூழலில், எந்த அமைச்சருக்கு எந்த இலாகா, எந்த இலாகாவுக்கு யார் அமைச்சர் என்பதை தொழிலதிபர்களின் தரகர்கள் தீர்மானிக்கும் கேடு கெட்ட அரசியலில், மனித குலத்தாலேயே இதுவரை தீர்வு காணப்படாத ஆபத்தான அணு தொழில் நுட்பத்தை அமலாக்குவது மிக மிக ஆபத்தானது.

அணு உலைகளின் பாதுகாப்பை மறு பரிசீலனை செய்வோம் என்று மன்மோகன்சிங் அறிவித்திருப்பது போதாது. அந்த மறு பரிசீலனை நடவடிக்கையில் தன்னார்வக் குழுக்கள் முதல் உச்ச நீதி மன்றம் போன்ற அமைப்புகள் நியமிக்கும் சுயேச்சையான அறிஞர்கள் பங்கு பெறச் செய்ய வேண்டும். புதிதாக எந்த அணு உலையும் தேவையில்லை என்ற முடிவை எடுக்க வேண்டும். மூன்று சத தயாரிப்பில் இருக்கும் போதே முடிவெடுப்பது அவசியம். அணு உலைக்கு இறைக்கும் கோடிக்கணக்கான பணத்தை மாற்று முயற்சிகளுக்கு ஒதுக்க வேண்டும்.

வீட்டுக்கு வீடு இலவச டி.வி.பெட்டி, கிரைண்டர், மிக்சி, பிரிட்ஜ், வாஷிங் மெஷின் கிடைத்தால் போதும் என்று ஏங்கிக் கிடக்கும் முட்டாள்களாகிய நாம், சொல்லாமல் கொள்ளாமல் வரவிருக்கும் இலவசமான கதிர் வீச்சு பற்றி இப்போதே விழித்துக் கொள்ளாவிட்டால் பேரழிவுக்கு வழி வகுப்பது உறுதி. இன்னும் பிறக்காத கொள்ளுப் பேரன்களுக்கெல்லாம் இப்போதே சொத்து சேர்க்கும் தமிழின தலைவர்கலும் உடன்பிறப்புகளும் உடன்பிறவாத கொள்ளைக் கூட்டாளிகளும் ஒன்றை மறக்க வேண்டாம். ஒரு லட்சத்து 76 ஆயிரம் கோடி ரூபாய் சொத்தை ஒரே ஒரு பேரக் குழந்தைக்கு உருவாக்கி வைத்தாலும், அந்தப் பேரக் குழந்தையும், ஒற்றை தம்படி கூட இல்லாத தெருவோரக் குழந்தையும் கதிர் வீச்சுக்கு முன்னால் சமமாகவே நடத்தப்படுவார்கள்.

இந்தியாவின் எல்லா அணு உலை திட்டங்களையும் உடனடியாக நிறுத்திவைக்கவேண்டும், இருக்கும் அணு உலைகள்

பற்றிய பகிரங்கமான விசாரணைகள் வேண்டும் என்ற ஒற்றை கோரிக்கையை நாம் எல்லாரும் எழுப்பியாக வேண்டும்.

**இந்த வார நகைச்சுவை:**

மு.க.ஸ்டாலினின் சொத்து மதிப்பு ஒரு கோடியே 12 லட்சம். பல வருடங்கள் முன்பே தங்கை கனிமொழியின் (அறிவிக்கப்பட்ட) சொத்து மதிப்பு மூன்று கோடி !

**இந்த வார இரங்கல்**

விடுதலைப் புலிகள் தலைவர் பிரபாகரனின் தாயார் பார்வதி அம்மாளின் அஸ்தியை தமிழகம் எங்கும் சென்று தூவப் போவதாக வைகோ அறிவித்திருக்கிறார். அவர் அறிவிக்காமல் விட்டது, கூடவே அவர் தூவப் போகும் சாம்பல் தேர்தல் புறக்கணிப்பு என்ற தீயில் அவர் தகனம் செய்துவிட்ட ம.தி.மு.கவின் சாம்பல்.

**இந்த வாரத் திட்டு**

மீண்டும் ஆட்சிக்கு வந்தால் இலவச கிரைண்டர் அல்லது மிக்சி என்று அறிவித்தபோது கருணாநிதி, இது குடும்பத்துக்காக என்று சொல்லாமல் "இது பெண்களுக்காக" என்று அழுத்தமாக அறிவித்ததற்கு இ.வா.தி. சமையல்,அடுப்படி வேலை பெண்களுக்கானது என்ற ஆணாதிக்க மனப்பான்மையைத் தொடர்ந்து ஊக்குவிக்கும் அவரது அணுகுமுறை அருவெறுப்பானது.

***கல்கி 26.3.2011***

# கேள்விகள் இங்கே. பதில் எங்கே?

கலைஞர் கருணாநிதியிடமும் ஜெயலலிதாவிடமும் நீங்கள் கேட்க விரும்பும் ஐந்து கேள்விகளை எழுதி அனுப்புங்கள் என்று என் இணைய தள வாசகர்களைக் கேட்டிருந்தேன். நூற்றுக் கணக்கில் கேள்விகள் வந்து குவிந்துவிட்டன. அவற்றிலிருந்து தொகுத்து சில கேள்விகளை இங்கே நாகரிகமான மொழியில் தந்திருக்கிறேன். இப்போதைய ஆளும் கட்சி என்பதால் கருணாநிதிக்கு 20 கேள்விகள். ஜெயலலிதாவுக்கு 15 கேள்விகள். இருவருக்கும் பொதுவாக 8 கேள்விகள். பக்கம் பக்கமாக அறிக்கை வெளியிட சளைக்காத இருவரும், இந்தக் கேள்விகளுக்கு நேரடியாக பதில் தெரிவிக்கும்படி வேண்டுகிறேன்.

**ஜெயலலிதாவுக்கு:**

1. உங்களை விட்டால் கட்சியில் வேறு தலைவரே இல்லையே? இப்படி ஒரு கட்சி நடத்துவது சரியா?
2. சட்டமன்றக் கூட்டத்துக்கே நீங்கள் போகவில்லை. எதிர்க்கட்சித் தலைவராக ஒழுங்காக வேலை பார்க்காத உங்களை ஏன் ஆட்சிக்கு தேர்ந்தெடுக்க வேண்டும் ?
3. யாருமே நெருங்கமுடியாத தலைவராக உங்களை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். மனிதர்களை சந்திக்க உங்களுக்குப் பிடிக்காவிட்டால், அரசியலிலிருந்து ஓய்வு பெற்று நிம்மதியாக தனியே வாழவேண்டியதுதானே?
4. அ.தி.மு.கவை சசிகலா குடும்பம்தான் ஆக்ரமித்து நடத்திக் கொண்டிருக்கிறது. இதை மாற்ற ஏதாவது திட்டம் உண்டா?
5. கூட்டணிக் கட்சிகளை மதிக்காமல் இஷ்டப்படி

கூட்டணிகளை உடைப்பது உங்கள் வழக்கம். இந்த அணுகுமுறை மாறுமா?

6. இலவசங்கள் தவிர, உங்கள் பத்தாண்டு ஆட்சியில் சமூக, பொருளாதார, சுற்றுச் சூழல் தொடர்பாக ஏதாவது உருப்படியான நடவடிக்கைகள் செய்தது உண்டா?

7. கடந்த 5 ஆண்டுகால தி.மு.க. ஆட்சியின் முறைகேடுகளைக் கண்டித்து எத்தனை போராட்டங்களை நீங்கள் தலைமை ஏற்று நடத்தினீர்கள்?

8. ஒரு பெண்ணாக இருந்தும் ஏன் பெண்களுக்கு 35% சீட் தரவில்லை?

9. சகமனிதனை பெண்ணாக / ஆண்ணாக இருந்தாலும் காலில் விழச்செய்து புகைப்படம் எடுத்து வெளியிடும், அருவருப்பான கலாச்சாரத்தை / மனநிலையை எப்போது விடப் போகிறீர்கள்?

10. காஞ்சி சங்கராசாரியார் மீதான வழக்கு கடந்த தி.மு.க. ஆட்சியில் எவ்வாறு திசை திருப்பபட்டது ? அதை தடுக்க நீங்கள் என்ன செய்தீர்கள்?

11. மாதம் முழுவதும் கூலி வேலை செய்யும் வயதுவந்த பெண்களின் வலி உங்களுக்கு தெரியுமா? பள்ளி / ரேசன் கடை மூலம் வயதுவந்த ஏழைப் பெண்களுக்கு நாப்கின்களை இலவசமாக (அ) குறைந்த விலைக்கு வழங்கும் திட்டத்தை நீங்கள் செயல்படுத்த சிந்திக்காதது ஏன் ?

12. மக்களை பிச்சைகாரர்களாக ஆக்கும் இலவசங்களை தி.மு.க வுக்கு போட்டியாக நீங்களும் அறிவிப்பது ஏன்?

13. தமிழினம் ஈழத்தில் படுகொலை செய்யப்பட்டபோது மக்களை திரட்டி போராடி ஈழ பொதுமக்களை காப்பாற்ற முயலாதது ஏன்?

14. (மக்களின் உணர்வு அறிந்தும்) இனியாவது ஊழல்களற்ற ஆட்சி தருவேன் என்ற உறுதி மொழி உங்கள் தேர்தல் அறிக்கையில் இல்லாமல் போனது ஏன்?

15. கருணாநிதி குடும்ப அரசியலை இவ்வளவு வசைபாடும் நீங்கள் அ.தி.மு.க.ஆட்சிக்கு வந்தால் கட்சியிலும் ஆட்சியிலும் சசிகலா மற்றும் அவரது குடும்பத்திரின் தலையீடு இருக்காது என உறுதி கூற முடியுமா?

**கருணாநிதிக்கு:**

1. உங்கள் குடும்ப உறுப்பினர்கள் தவிர மற்றவர்களுக்கும்

சுயமரியாதை, வாழ்வுரிமை, தொழில் செய்யும் உரிமை, சொத்துரிமை எல்லாம் உண்டு என்பது உங்களுக்குத் தெரியுமா ?

2. பணத்துக்காகத்தான் மது விற்பனையை அரசின் மூலம் செய்கிறீர்கள் என்றால், நாளைக்கு பணம் வரும் என்பதற்காக விபசார விடுதிகளையும் உங்கள் அரசே நடத்துமா?

3. உங்கள் மனைவி திருநள்ளாறு பரிகார பூசைக்கு செல்வதாக செய்தி வருகிறது. மனசாட்சிப்படி சொல்லுங்கள்,. நிஜமாகவே நீங்கள் நாத்திகர்தானா?

4. முதல்வராக சிறப்பாக ஆட்சி புரிந்ததாக நம்பிக்கை இருந்தால், ஏன் உங்கள் கட்சியே தனித்து எல்லா தொகுதிகளிலும் போட்டி இட்டிருக்கக் கூடாது? அந்த நம்பிக்கை இல்லாதது ஏன் ?

5. பெயருக்கு ஒரு பட்டப் படிப்பு படித்துவிட்டு, சுய சம்பாத்தியம் இல்லாமல், கோடிக் கணக்கில் செலவு செய்து படம் எடுக்க உங்கள் பேரன்களுக்கு எங்கிருந்து பணம் வந்தது?

6. உங்கள் குடும்ப பிரச்சனையில் 3 பேரை தீயிட்டு கொளுத்தியதை நினைத்தபோதும், உங்கள் இதயம் இனிக்கிறதா?

7. தமிழக அரசிற்கு நீங்கள் ஏற்றி வைத்துள்ள பெரும் கடன் சுமையை எப்படி திருப்பிச் செலுத்தப் போகிறீர்கள் ? அதற்கு ஏதாவது குறிப்பான யோசனை உண்டா?

8. இலவச ஆயுள் காப்பீட்டு திட்டத்துக்கு ஒதுக்கிய நிதியை அதற்கு பதில் ஏற்கனவே இலவசமாக இருக்கும் அரசு மருத்துவமனைகளின் தரத்தை உயர்த்த செலவிடாதது ஏன் ? தனியாருக்கு லாபம் சேர்த்துத் தரவா ?

9. ஒரு மனைவி உயிருடன் இருக்கும்போதே இன்னொரு துணைவியுடனும் பகிரங்கமாகக் குடும்பம் நடத்தும் உங்கள் வாழ்க்கை முறை தமிழ்க் கலாசாரத்துக்கு விரோதமானது. தவறான முன்னுதாரணம் என்பதை உணர்ந்து எப்போதாவது வருத்தப்பட்டதுண்டா? என்னைப் பின்பற்றவேண்டாம் என்று இளைஞர்களிடம் வருத்தம் தெரிவிக்கும் நேர்மை உங்களுக்கு உண்டா?

10. கூவத்தை தூய்மையாக்குவேன் என்று 25 வருடம் முன்பே திட்டம் போட்டீர்கள். அந்த பணம் என்னவாயிற்று ? ஏன் இப்போது மறுபடியும் திட்டம் போடுகிறீர்கள்? இது கூவத்துக்காகவா? உங்கள் நலனுக்காகவா?

11. 25 வருடம் முன்பே பிச்சைக்காரர்களை ஒழித்துவிட்டேன்

என்று அறிவித்தீர்கள். இப்போது ஏன் எல்லா ஊர்களிலும் பிச்சைக்காரர்கள் திரிகிறார்கள் ? ஏன் ஆயிரக்கணக்கானவர்கள் தெருக்களில் வசிக்கிறார்கள் ? ஐந்து முறை நீங்கள் முதல்வராக இருந்து என்ன பயன்?

12. ஐந்தாண்டுகளாக வெளி நாட்டில் வாழ்கிறேன். ஒரு அரசு ஊழியருக்கோ ஒரு காவல் அதிகாரிக்கோ ஒரு தம்படிக் காசு கூட லஞ்சமாகக் கொடுத்ததில்லை. அவர்கள் கேட்டதும் இல்லை. இங்கே வந்த சில தினங்களிலேயே ஒவ்வொரு இடத்திலும் என்னிடம் லஞ்சம் கேட்கிறார்களே, இதற்கு நீங்கள்தானே பொறுப்பு ?.

13. மின் வெட்டை தடுக்க 5 ஆண்டுகளில் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன?

14. அரசியலில் இருந்து ஓய்வுபெறுவதாக சொன்னீர்களே ஏன் செய்யவில்லை?

15. தமிழினம் ஈழத்தில் படுகொலை செய்யப்பட்டபோது பதவிக்கு சண்டையிட்ட உங்கள் கட்சியை நம்பி எப்படி வாக்களிப்பது? 2008ல் நீங்கள் எதிர்க்கட்சியாக இருந்து மத்திய அரசிலும் பங்கு பெற்றிருக்கவில்லை எனில் ஈழப்பிரச்சினையை எப்படி கையாண்டிருப்பீலீ;கள்?

16. உங்கள் ஊழல் பற்றிய சர்க்காரியா கமிஷன் அறிக்கையை நூலகங்களில் இருந்து எடுத்தது ஏன்?

17. தொகுதிப் பங்கீடு மற்றும் அமைச்சர் பதவி தன் வாரிசுகளுக்கு வாங்குவதற்கு தவிர நீங்கள் டெல்லி சென்றது எத்தனை முறை? எதற்காக?

18. பாராட்டு விழாக்கள் , சினிமா கலை நிகழ்ச்சிகள், நடிகையின் திருமணம் போன்றவற்றிற்கு ஓடோடி செல்லும் நீங்கள் , எத்தனை முறை இறந்து போன மீனவர் குடும்பங்களுக்கு நேரில் சென்று பார்த்திருக்கிறீர்கள்?

19. பல வருடங்களாக கட்சியிலிருந்து உழைத்த தி.மு.க. தொண்டர்களை விட, தயாநிதி மாறனும் அழகிரியும், கனிமொழியும் மக்களவை உறுப்பினராகவும், மத்திய மந்திரியாகவும் ஆவதற்கு என்ன தகுதி ?

20. உங்கள் குடும்பத்தினருக்கும் ஸ்பெக்ட்ரம் ஊழல் , மணல் கொள்ளை, திரைப்படத்துறை முழுமையான ஆக்ரமிப்புக்கும் உள்ள தொடர்புகளை உங்கள் மனசாட்சியால் மறுக்க முடியுமா?

இருவருக்கும்:

1. விவசாயம் லாபமில்லா தொழிலாக போய்விட்டது. தனியார் தரிசு நிலங்கள் அதிகரித்து வருகின்றன. அவை சில காலம் கழித்து பிளாட்டுகளாக மாறி வருகின்றன. விவசாய கூலியும், இடுபொருட்கள் செலவும் அதிகரித்துவிட்டது. விவசாய விளைபொருட்களின் விலையை விவசாயி தீர்மானிக்க முடியவில்லை. பதுக்கல் வியாபாரிகளே அதிக லாபம் சம்பாதிக்கிறார்கள். இதற்கு என்ன தீர்வு வைத்திருக்கிறீர்கள்?

2. முன்பெல்லாம் உள்கட்டமைப்பு மூலதன செலவுகளுக்கு பட்ஜெட்டிலிருந்து பணம் ஒதுக்கீடு செய்யப்படும். தற்போது உலக வங்கியிலிருந்தும், நபார்டிலிருந்தும் கடன் வாங்கும் வழக்கம் வந்துவிட்டது. இது ஒரு நல்ல போக்கா?

3. பத்திர பதிவு துறை, போக்குவரத்து துறை, காவல் துறை, பொது பணித்துறை இந்த நான்கு துறைகளில்தான் அதிகம் லஞ்சம் புழங்குகிறது. இதை கனிசமாக குறைக்க என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறீர்கள்?

4. அரசு பள்ளிகளின் தரத்தை உயர்த்த என்ன திட்டம் வைத்துள்ளீர்கள் ?

5. சட்டமன்றத்தில் ஜால்ரா பேச்சுகளை அடியோடு ஒழித்துவிட்டு அசல் பிரச்சினைகளைப் பற்றி ஆழமான விவாதங்களை நடக்கச் செய்யாமல் உங்கள் கட்சியினரைக் கெடுத்து வைத்திருப்பதை எப்போது மாற்றுவீர்கள் /

6. தலைமையை வைத்துத்தான் தொண்டர்கள் இருப்பார்கள். அப்பழுக்கற்ற அரசியல்வாதி, கண்ணியமான அரசியல்வாதி என்ற நற்பெயரை சம்பாதிக்க ஏன் இதுவரை முயற்சிக்க வில்லை?

7. ஆயிரக்கணக்கான குடும்பங்களை அரசு மதுக்கடைகள் நாசமாக்கிக் கொண்டிருக்கின்றன. இதைப் பற்றி உங்களுக்கு அக்கறையே கிடையாதா?

8. இவ்வளவு தவறையும் பண்ணிட்டு மறுபடியும் மறுபடியும் மக்கள் முன்னாடி வந்து நிக்கிறதுக்கு உங்களுக்கு வெட்கமாவே இருக்காதா ?

### இந்த வாரப் பூச்செண்டு

108 அவசர உதவி ஆம்புலன்ஸ் சேவை பற்றிய டி.வி. விளம்பரங்களை ஆளுங்கட்சி டி.விகளான சன், கலைஞர் ஆகியவற்றுக்கு மட்டும் தி.மு.க அரசு அள்ளிக் கொடுத்திருப்பதை

தகவலறியும் உரிமை சட்டத்தைப் பயன்படுத்தி அம்பலப்படுத்திய குரோம்பேட்டை சமூக ஆர்வலர் சந்தானத்துக்கு இ.வா.பூ

**இந்த வாரக் கேள்வி**

ஆங்கில டி.வி.சேனல்களுக்கு அளித்த பேட்டியில் கருணாநிதியும் கனிமொழியும் நீரா ராடியாவுடன் கனிமொழி பேசினாரா, இல்லையா, டேப்பில் ராசாவுக்காக டெலிகாம் துறையைப் பெற்றுத்தர கெஞ்சிக் கூத்தாடியது அவரா இல்லையா என்பதைப் பற்றி மூச்சே விடாதது ஏன் ?

**இந்த வாரத் திட்டு**

நேர்மையாகவும் கறாராகவும்ன் செயல்பட்டு வரும் தேர்தல் ஆணையத்தை தரக் குறைவாகப் பேசி அவதூறு செய்திருக்கும் கலைஞர் கருணாநிதிக்கு இ.வா.தி.

*கல்கி 2.4.2011*

# யாருக்கு ஓட்டு போடுவது ?

நம் அரசியல் கட்சிகள் திருந்தவில்லை என்பதற்கு தொடர்ந்து பல அடையாளங்கள் இருந்துகொண்டே இருக்கின்றன. நாம்தான் அவற்றை சரியாக கவனிப்பதும் இல்லை. அழுத்தம் கொடுப்பதும் இல்லை.

சென்ற முறை ஜெயித்து வந்த 234 எம்.எல்.ஏக்களில் 77 பேர் மீது கிரிமினல் வழக்குகள் இருந்தன. இந்த முறை போட்டியிடும் வேட்பாளர்களில் 18 சத விகிதம் பேர் மீது கிரிமினல் வழக்குகள் உள்ளன. அதில் 66 பேர் மீது உள்ளவை கடும் குற்றச்சாட்டுகள். ஒவ்வொரு கட்சியின் வேட்பாளர்களிலும் கிரிமினல் வழக்குள்ளவர்கள் சத விகிதம் அதிர்ச்சியாக இருக்கிறது: தி.மு.க 22 சதவிகிதம், அ.தி.மு.க 30. பா.ம.க 52. விடுதலைச் சிறுத்தைகள் 50. தே.மு.தி.க 19. காங்கிரஸ் 11. பி.ஜே..பி 11.

சென்ற முறை ஜெயித்தவர்களில் 57 பேர் கோடீஸ்வரர்கள். இந்த முறை போட்டியிடுபவர்களில் 35 சதவிகிதம் பேர் கோடீஸ்வரர்கள். மீதி பெரும்பாலோர் லட்சாதிபதிகள். கோடீஸ்வர வேட்பாளர்கள் கட்சி வாரியாக: தி.மு.க 65.77 சதவிகிதம். அ.தி.மு.க 52.08. காங்கிரஸ் 61.11. பா.ம.க 40.74. விடுதலை சிறுத்தைகள் 33.33. தே.மு.தி.க 33.333. பி.ஜே.பி 14.79 .மார்க்சிஸ்ட் 8.33. கம்யூனிஸ்ட் 0.

சொத்துக் கணக்கை எடுத்துக் கொண்டால், ஐந்து வருடங்களில் இவர்கள் சொத்து எப்படிப் பெருகியிருக்கிறது என்பதே இவர்கள் மக்களுக்கு எப்படி சேவை செய்திருக்கிறார்கள் என்பதை காட்டிவிடும். தி.மு.க அமைச்சர் இ.வ.வேலுவின் சொத்து பல நூறு

மடங்கு அதிகரித்திருக்கிறது. ஆட்சியில் இருந்த அமைச்சர்களை விட அவர்களுடைய மனைவிகள், துணைவிகள் சொத்து அதிகரித்திருக்கிறது. முதல்மைச்சர்தான் இதில் வழிகாட்டி. பிறவி கம்யூனிஸ்ட் அல்லவா அவர்! 2006ல் அவர் சொத்து 26.52 கோடி. 2011ல் 44.14 கோடி இதில் கருணாநிதியின் சொத்து வெறும் சுமார் 5 கோடிதான். தயாளுவுடையது சுமார் 16 கோடி. ராஜாத்தியுடையது சுமார் 24 கோடி ! இன்னும் பல பேர் மனைவி துணைவி கணக்கு காட்டியிருக்கிறார்கள். வீரபாண்டி ஆறுமுகத்தின் சொத்து மதிப்பு வெறும் 75 லட்சம். மனைவி ரங்கநாயகியுடையதோ 93 லட்சம். துணைவி லீலாவுடையதோ 2.25 கோடி !

தேர்தல் ஆணையம் இந்த முறை தமிழ்நாட்டில் பிரதான பிரச்சினை பெரும் பணம் வாக்காளர்களுக்கு லஞ்சமாகக் கொடுக்கப்படுவதை தடுப்பதுதான் என்று அறிவித்து கடுமையாகச் செயல்பட்டிருக்கிறது. இதன் விளைவு டீக்கடைக்காரர் வீட்டில் சில லட்சங்களும் ஆம்னி பஸ் கூரையில் பல கோடிகளும் பிடிபட்டிருக்கின்றன. தமிழ்நாட்டில் எந்த அளவு கறுப்புப் பணம் சுழற்சியில் இருக்கிறது என்பதற்கு தேர்தல் ஆணையம் தரும் ஒரு புள்ளிவிவரமே சாட்சி. சென்ற வாரம் வரை பிடிபட்ட 22 கோடியே 40 லட்சம் ரூபாயில் முறையாக கணக்கு காட்டி தேர்தலுக்கு சம்பந்தம் இல்லாத நியாயமான சொந்தப் பணம் என்று நிரூபித்து திரும்பப் பெறப்பட்ட தொகை வெறும் 4 கோடியே 88 லட்சம்தான்.

பணபலம் இல்லாமல் தேர்தலில் போட்டியிடவே முடியாது என்பது தெளிவாகத் தெரிகிறது. ஒரு சில விதிவிலக்கான இடதுசாரி வேட்பாளர்கள் தவிர, எந்தப் பெரிய கட்சி வேட்பாளரும் ஆணையம் நிர்ணயித்த வரம்புக்குள் செலவு செய்வதே இல்லை என்பது உண்மை. பண பலம் இல்லாமலே ஜெயிக்க முடியும் என்று நம்பும் படித்த இளைஞர்களின் பிரதிநிதியாக தங்களை முன்னிறுத்தும் சுயேச்சை வேட்பாளர் சரத்பாபு போன்றோர் போடும் கணக்கு கூட தப்பாகவே இருக்கிறது. மொத்தம் 2 லட்சம் வாக்காளர்கள் உள்ள வேளச்சேரியில் தனக்கு 40 ஆயிரம வாக்குகள் கிடைத்தால் ஜெயித்துவிடலாம் என்று அவர் ஒரு கடிதம் அனுப்பியிருந்தார். 70 சத விகித வாக்குப்பதிவு என்றால் ஒரு லட்சத்து 40 ஆயிரம் வாக்குகள் விழும். அதில் 40 ஆயிரம் ஜெயிக்கப் போதும் என்றால் மீதி ஒரு லட்சம் வாக்குகளுக்கு அர்த்தம் என்ன? அவை பல வேட்பாளரிடையே பிரிவதால்தான் 40 ஆயிரத்துக்கு மதிப்பு வருகிறது.

இந்த தேர்தல் முறையே தவறு; விகிதாசாரப் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்பது பற்றிதான் படித்தவர்கள் பிரசாரம்

செய்து கருத்து திரட்ட வேண்டும். இருக்கும் தவறான முறைக்குள்ளேயே செயல்பட்டு ஜெயித்துவிடலாம் என்று கணக்கு போடுவது படித்த நல்லவர்களின் அப்பாவித்தனம் அல்லது சாமர்த்தியம். கரூரில் காங்கிரஸ் வேட்பாளராக போட்டியிடும் என் நண்பர் எழுத்தாளர் ஜோதிமணி எதிர் வேட்பாளர் மூன்று கோடி செலவு செய்தால், தான் ஒரு கோடி வரைக்குமாவது செலவிடும் கட்டாயத்துக்கு தள்ளப்படுவேன் என்கிறார். ஜோதிமணிக்கு மாத வருவாயே 15 ஆயிரத்துக்குள்தான். எப்படி ஒரு கோடி திரட்ட முடியும்? கொடுப்பவர்கள் நாளைக்கு பதிலுக்கு என்னென்வெல்லாம் பிரதி உபகாரம் கேட்பார்கள் என்பதை நினைத்தால் கலக்கமாக இருக்கிறது.

இப்படிப்பட்ட ஒட்டுமொத்த அருவெறுப்பான சூழ்நிலையில் ஒரே நம்பிக்கைக் கீற்று தேர்தல் ஆணையத்தின் கறாரான செயல்பாடு மட்டும்தான். ஆனால் அது போதாது. இன்னும் பல தேர்தல்களுக்கு இப்படிப்பட்ட கெடுபிடிகள் தொடர்ந்தால்தான் கட்சி அமைப்பு சீர்படும்.

இப்போதும் பணபலமும் , இலவச ஆசை காட்டி ஓட்டு வாங்கும் உத்தியும் ஆதிக்கம் செலுத்தவே செய்கின்றன.

இந்தச் சூழலில் எந்தக் கட்சிக்கு ஓட்டு போடுவது என்று பலரும் என்னைத் தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள்.

**நம் முன்னால் மூன்று வழிகள்தான் இருக்கின்றன.**

***வழி 1:*** *49* ஓ. எல்லா வேட்பாளரையும் நிராகரிக்கும் உரிமை. இப்போதைக்கு இது மின் வாக்குப்பதிவு இயந்திரத்தில் ரகசிய பட்டனாக இல்லை. எனவே பகிரங்கமாக சொல்லித்தான் இதை பதிவு செய்ய வேண்டும். எனவே பெருவாரியானவர்கள் இதைப் பயன்படுத்தும் வாய்ப்பு குறைவு. பெருவாரியாக 49 ஓ விழுந்தால்தான் கட்சிகளுக்கு கலக்கம் ஏற்படும். ஒரு சில நூறு 49 ஓக்கள் பயன் தராது. என் கொள்கையில் நான் உறுதியாக இருக்கிறேன் என்று நமக்கு நாமே வலியுறுத்திக் கொள்ள இது உதவும்.

வழி 2: தி.மு.க, அ.தி.மு.க என்ற இரு மட்டைகளுக்கும் இடையில் பெரும் வேறுபாடுகள் எதுவும் இல்லை. இருவரும் நிராகரிக்கப்படவேண்டியவர்கள்தான். (இது பற்றி நான் எழுதிய நையாண்டி நாடகம் ‘ ஆப்புக்கு ஆப்பு’ தேர்தலுக்கு சில தினங்கள் முன்னால் எங்கள் பரீக்ஷா குழுவால் நடிக்கப்பட இருக்கிறது.) கடந்த ஆட்சிக் காலங்களைப் பார்த்தீர்களானால், 1996-2001ல் தி.மு.க ஆட்சியும், 2001-2006ல் அ.தி.மு.க ஆட்சியும் சகிக்கக்கூடியனவாக இருந்தன. அதே போல 1991-96 அ.தி.மு.க ஆட்சியும் 2006-2011

தி.மு.க ஆட்சியும் சகிக்க முடியாதவை. மூன்றாவது அணியாக உருப்படியாக எதுவும் உருவாவதற்கு இன்னும் 15 வருடங்கள் ஆகலாம். அதுவரை எந்த ஒரு கழகத்தையும் தொடர்ந்து பத்தாண்டு ஆள விடாமல், 5 வருடங்களுக்கு ஒரு முறை கேரளா மாடலில் மாற்றி மாற்றி தேர்ந்தெடுத்து நம்மை நாமே கொஞ்சம் ஆறுதற்படுத்திக் கொள்ளலாம்.

*வழி 3:* வேட்பாளர் அடிப்படையில் பார்ப்போம். சரியான கட்சியில் இருக்கும் தப்பான ஆள் என்று சொல்ல எவருமில்லை. ஏனென்றால் சரியான கட்சிகளே இல்லை. தப்பான கட்சியில் இருக்கும் சரியான ஆட்களாக யாரேனும் இருக்கிறார்களா என்று தேடலாம். (சரியான ஆளாக இருந்தால் அவர் ஏன் தப்பான இடத்துக்குப் போகிறார் என்ற தர்க்க நியாயம் தனி.) இரு பிரதான அணிகளிலும் இருக்கும் வேட்பாளர்களில் இருப்பதில் சுமாரானவர் என்பவருக்கு ஓட்டு போடலாம். நல்ல சுயேச்சைகளுக்கு போட்டு பயனில்லை. எப்படியும் கட்சிகள்தான் ஆட்சிக்கு வரும். அவற்றில் பெருவாரியாக முழு அயோக்கியர்களுக்கு பதில் ஓரளவு நல்லவர்களையாவது ஜெயிக்க வைக்கலாம்.

மூன்றில் உங்களுக்கு எது பிடிக்கிறதோ செய்யுங்கள். ஆனால் ஓட்டு போடாமல் மட்டும் இருந்து விடாதீர்கள். மூன்றில் எப்படி ஓட்டு போட்டாலும் தொலை நோக்கில் மாற்றம் வர அது நிச்சயம் உதவும்.

**இந்த வார சந்தேகங்கள்:**

1. விஜய்காந்த் குடித்துவிட்டு வந்து பிரசாரத்தில் உளறுகிறார் என்று பிரசாரம் செய்யும் சன், கலைஞர் தொலைக்காட்சிகள், ஒரு முதலமைச்சர் மனைவி, துணைவி என்று இருவருடன் பகிரங்கமாக வாழ்க்கை நடத்துவதை குடிக்கு சமமான ஒழுக்கக்கேடாக ஏன் கருதவில்லை ?

2. வேட்பாளர்கள் , தலைவர்கள் மட்டும்தான் மது குடிக்காத ஒழுக்கம் உடையவர்களாக இருக்க வேண்டுமா? ஆட்சியை தேர்ந்தெடுக்கும் உரிமை படைத்த வாக்காளர்களுக்கும் அந்த ஒழுக்கம் வேண்டாமா? வருடத்தில் 14 ஆயிரம் கோடி ரூபாய்க்குக் குடிப்பவர்கள் தொகை குறைந்தபட்சக் கணக்குப்படி ஒரு கோடிக்கு மேல். குடிப் பழக்கம் உள்ள இந்த ஒரு கோடி வாக்காளர்கள் ஓட்டு போடும் தகுதி உடையவர்களா, இல்லையா?

3. உலக கோப்பை கிரிக்கெட்டில் கோப்பை என்னவோ 11 பேருக்கு மட்டும்தான் உரியது.ஆனால் தேசமே அதை தங்கள் வெற்றியாகக் கொண்டாடுவது போலத்தான் தி.மு.கவினரும் கூட்டணியினரும் கட்சியில் ஒரு சிலர் மட்டுமே தேர்தலில் வாய்ப்பு

பெற்று வெற்றியடைவதை கருதவேண்டும் என்று கருணாநிதி அறிவுறுத்தியிருக்கிறார். அதாவது கிரிக்கெட் 11 பேர் மாதிரி அவர் குடும்பத்தினர் 11 பேர் எல்லா லாபங்களையும் அடைவதை எல்லா தி.மு.கவினரும் கொண்டாடவேண்டும் என்று இதற்கு அர்த்தமா?

*4.* அமைச்சராக இருக்கையில் ராசா மீது கடும் குற்றச்சாட்டுகள் கூறப்பட்ட தருணத்தில் அவரைப் புகழ்ந்து தொழிலதிபர் ரத்தன் டாட்டா கருணாநிதிக்கு எழுதிய கடிதம் பற்றி கேட்டபோது அப்படி ஒரு கடிதமும் தனக்கு வரவில்லை என்றார் கருணாநிதி. இப்போது நாடாளுமன்றப் பொதுக் கணக்குக் குழு விசாரணையில் டாட்டா தன் கைப்பட கடிதம் எழுதியதாகவும், நீரா ராடியா தான் அதை நேரில் கருணாநிதியிடம் கொடுத்ததாகவும் சொல்லியிருக்கிறார்களே? கருணாநிதிக்கு செலக்டிவ் அம்னீஷியாவா? ராடியா வேறு ஏதாவது கருணாநிதிடம் கடிதத்தைக் கொடுத்துவிட்டாரா?

*5.* ஒரே மேடையில் ஜெயலலிதாவும் விஜய்காந்த்தும் பேசுவார்களா என்று சவால் விடும் தி.மு.கவினர், ஏன் ஒரே மேடையில் ராகுல் காந்தியும் கருணாநிதியும் தோன்றுவதில்லை என்பதை விளக்குவார்களா? ராகுல் காந்தி ஸ்டாலினோடு கூட ஒரே மேடையில் தோன்ற முன்வருவதில்லையே ஏன் ?

*6.* தேர்தல் நேரத்தில் ஆணையத்தின் கட்டுப்பாட்டின் கீழ் நிர்வாகம் இயங்குவதால் எல்லாம் ஒழுங்காக நடைபெறுவது பற்றி மக்களிடையே பெரும் மகிழ்ச்சி இருக்கிறது. இதே அதிகாரிகள்தானே நிர்வாகத்தை எப்போதும் கவனித்து வருகிறார்கள் ? ஏன் இதே போல சுதந்திரமாக சட்டப்படி எப்போதும் நடப்பதில்லை ? தடுப்பது யார் என்று அவர்கள் அடையாளம் காட்ட வேண்டாமா?

**இ.வா.பூச்செண்டு:**

தேர்தல் ஆணையத்துக்கு.

***கல்கி 9.4.2011***

# நான் ஆதரிக்கவில்லை !

முதலிலேயே சொல்லிவிடுகிறேன். அண்ணா ஹசாரேவின் போராட்டத்தை நான் ஆதரிக்கவில்லை. எனவே இது தொடர்பான என் கருத்துகளுக்காகப் பொங்கி எழுபவர்கள் எல்லாம் உணர்ச்சிவசப்படாமல் அறிவுப்பூர்வமாக விஷயத்தைப் பார்க்க வேண்டும்.

ஊழலைக் கடுமையாக எதிர்க்கிறேன் என்பதனாலேயே அண்ணாவின் போராட்டத்தை ஆதரிக்க வேண்டுமென்று அவசியமில்லை. அவர் போராட்டத்தை ஏற்கவில்லை என்பதாலேயே அவரை இழிவு படுத்துவதாகவோ அவதூறு செய்வதாகவும் அர்த்தமில்லை. சமூக சேவகர், சீர்திருத்தவாதி என்பதற்கு மேல் அவர் மீது எனக்குப் பெரிய பக்தியோ மரியாதையோ இல்லை. 1975லிருந்து தன் சொந்த கிராமமான ரெலகாவ்ன் சித்தியை தன்னிறைவு உடைய கிராமமாக ஆக்க அவர் செய்த தொண்டு நல்ல விஷயம்தான். ஆனால் அது பெரும் பிரமிப்புக்குரியதல்ல. இப்போது சுமார் 2500 பேர் ( சுமார் 400 குடும்பங்கள்) வாழும் ஊர் அது. 1975ல் இன்னும் குறைவான நபர்கள்தான் இருந்திருப்பார்கள். ஓடைகளுக்குக் குறுக்கே தடுப்பணைகள் தேக்கங்கள் அமைத்து நிலத்தடி நீரை மேம்படுத்தியதுதான் அண்ணா அங்கே செய்த சாதனை. அதையடுத்து சூரிய ஒளியில் மின் விளக்குகள் அமைத்தார்கள். இதெல்லாம் நல்ல விஷயம்தான்.

இங்கே கூட எம்.எல்.ஏ, எம்.பி தேர்தல்களில் சுயேச்சையாக நிற்கும் படித்த 'நல்ல' வேட்பாளர்கள் முதலில் அண்ணாவைப் போல அவரவர் கிராமத்தில் ஏதாவது உருப்படியாக செய்ய முயற்சிக்கலாம். ஆனால் இவையெல்லாம் அண்ணாவை இரண்டாவது காந்தி என்றோ, இரண்டாவது சுதந்திரப் போராட்டத்தந்தை

என்றோ புகழ்வதற்குரிய பெரும் சாதனைகள் அல்ல. இதே போன்ற சாதனைகளை சென்னை அருகே குத்தம்பாக்கத்திலும் அண்ணா போல தொண்டு நிறுவனம் மூலம் செய்யாமல், பஞ்சாயத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவராக இருந்து இளங்கோ செய்திருக்கிறார். இளங்கோவுக்கு பத்மஸ்ரீ கூட கிட்டவில்லை. அண்ணாவுக்கு பத்மபூஷன் வரை அவர் எதிர்க்கிற அரசியல்வாதிகள் கொடுத்து கௌரவித்திருக்கிறார்கள்.

ஒரு காந்தியவாதியாகவும், அண்ணா காந்தியத்தில் ஆழ்ந்த அறிவு இருப்பவராக எனக்குத் தெரியவில்லை. ஊழல் செய்பவர்களை, லஞ்சம் வாங்குபவர்களை தூக்கில் போட வேண்டும் என்று இந்த வாரம் கூட பேசியிருக்கிறார். அசல் காந்தி ஒருபோதும் மரண தண்டனையை ஆதரித்ததே இல்லை. அதற்கு எதிராகவே கருத்து தெரிவித்து வந்திருக்கிறார். பி.ஜே.பி முதலமைச்சர் மோடியை பாராட்டி அண்ணா பேசியிருக்கிறார். அந்த குஜராத்தில் மோடியின் அரசு ஏழு வருடமாக ஊழல் எதிர்ப்பு அமைப்பான லோகாயுக்த் பதவிக்கு யாரையும் நியமிக்கவில்லை என்பது பற்றிக் கூட அண்ணாவுக்குத் தெரிந்திருக்கவில்லை. குஜராத் முஸ்லிம் படுகொலைகள் பற்றியெல்லாம் அண்ணா பதறியதாக எந்த செய்தியும் நான் படித்ததில்லை. காந்தி இருந்திருந்தால் கலவர நேரத்தில் அங்கேதான் முகாமிட்டு தடுக்க முயற்சித்திருப்பார்.

அண்ணா ஹசாரேவின் உண்ணாவிரதத்தை ஆதரித்து அதனால் மனம் நெகிழ்ந்து என்னிடம் பேசியவர்கள் பலருக்கும் அவர் ஊழலுக்கு எதிராக ஏதோ கடுமையான சட்டம் வரவேண்டும் என்று கோருகிறார் என்பதற்கு மேல் விவரங்கள் கூட தெரிந்திருக்கவில்லை. பிரதமர் , அமைசர்கள், முதலமைச்சர், மாநில அமைச்சர்கள், எம்.பிகள், எம்.எல்.ஏக்கள் போன்றோருக்கு எதிரான ஊழல் குற்றச்சாட்டுகளை விசாரிக்க அதிகாரம் உள்ள லோக்பால், கோகாயுக்த் அமைப்பை ஏற்படுத்த ஒரு சட்டம் தேவை. அந்த சட்டத்தை வடிவமைக்க போடப்படும் குழுவில் யார் யார் இருக்க வேண்டும் என்பவை பற்றிதான் அண்ணாவின் உண்ணாவிரதம். சுமார் 42 வருடங்களாக இந்த மசோதா பார்லிமெண்ட்டில் நிறைவேறவில்லை என்பது இன்னொரு குற்றச்சாட்டு. மகளிர் இட ஒதுக்கீடு மசோதா கூடதான் நிறைவேறாமலே இருக்கிறது.

லோக்பால் மசோதா 1968ல் முதலில் மக்களவையில் கொண்டு வரப்பட்டு 1969ல் நிறைவேறிவிட்டது. ராஜ்யசபையான மாநிலங்களைவைக்கு ஒப்புதலுக்கு வரும் முன்பு அவை கலைக்கப்பட்டுவிட்டது. எனவே மறுபடியும் 1971, 1977, 1985, 1989, 1996, 1998, 2001, 2005, 2008 என்று பல முறை திரும்பத் திரும்ப

மக்களவையில் அந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதற்கெல்லாம் அண்ணா ஹசாரே காரணமல்ல. அவர் எதிர்க்கிற அரசியல்வாதிகளேதான் கொண்டு வந்தார்கள். ஒவ்வொரு முறையும் மசோதாவை மேம்படுத்த ஒரு கமிட்டியிடம் அது ஒப்படைக்கப்பட்டது. உண்மையில் இப்போது அண்ணா ஹசாரே உண்ணாவிரதம் இருந்ததும், இன்னொரு கமிட்டியிடம் அதை ஒப்படைக்கத்தான்.

மன்மோகன் அரசு இந்த மசோதாவை எழுதி முடிக்கும் பணியை ஓர் அமைச்சர் குழுவிடம் ஒப்படைத்தது. அந்தக் குழு மட்டும் போதாது. அதில் சம பலத்தில் பொதுமக்கள் சார்பில் அறிஞர் பிரதிநிதிகள் இருக்க வேண்டும் என்பதுதான் அண்ணாவின் கோரிக்கை. அதை அவர் பிரதமருக்கு பல முறை எழுதியிருக்கிறார். பதில் நடவடிக்கை இல்லாததால் உண்ணாவிரதம். தொண்டு நிறுவனங்கள் சிலவற்றின் சார்பில் இன்னொரு லோக்பால் மசோதா ஏற்கனவே எழுதப்பட்டிருக்கிறது. அதில் ஈடுபட்டவர்களை அரசுக் குழுவில் சேர்க்க வேண்டும் என்று அண்ணாவும் அவரது ஆதரவாளர்களும் வற்புறுத்தினார்கள். இது தவிர சோனியா காந்தி தலைமையில் தேசிய ஆலோசனைக் குழு என்று ஒன்று இருக்கிறது அதில் ஒரு உபகுழுவில் அண்ணாவின் ஆதரவாளரான சுவாமி அக்னிவேஷும் இருக்கிறார். தேசிய ஆலோசனைக் குழுவும் லோக்பால் மசோதாவுக்கு ஆதர்வாகக் கருத்து தெரிவித்திருக்கிறது.

அண்ணாவின் நான்கு நாள் உண்ணாவிரதத்தையடுத்து மத்திய அரசு லோக்பால் மசோதாவை இறுதி செய்யும் குழுவில் அண்ணா விரும்பிய சுயேச்சையான அறிஞர்களை சம பலத்தில் சேர்த்துக் கொள்வதாக அறிவித்துவிட்டது. உண்னாவிரதம் முடிந்தது.

இது ஊழலுக்கு எதிரான மக்கள் இயக்கத்துக்குக் கிடைத்த பெரிய வெற்றி என்று மீடியாக்கள் கொண்டாடுகின்றன.

இங்கேதான் என் சில கவலைகளை முன்வைக்க விரும்புகிறேன். இதே போல மற்றவர்கள் உண்ணாவிரதம் இருந்து ஒரு கோரிக்கையை அரசு முன்வைத்தால், அரசு ஏற்றுக் கொண்டு விடுமா?

நான்கு நாள் உன்னாவிரதத்துக்கு அடிபணிந்த இந்திய அரசு, பத்து வருடமாக மணிப்பூரில் ஐரம் ஷர்மிளா (இப்போதும்..) இருந்து வரும் உண்ணாவிரதத்தைப் பொருட்படுத்தாதது ஏன் ? நவம்பர் **2000**த்தில் அசாம் ரைபிள்ஸ் என்ற இந்திய ராணுவப் பிரிவு இம்பாலில் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்த பொதுமக்களை ஒரு கிழவி உட்பட, தீவிரவாதிகள் என்று சுட்டுக் கொன்றது. இதைக்

கண்டித்தும், மணிப்பூரில் அமலில் இருக்கும் ராணுவச் சட்டத்தை விலக்கக் கோரியும் ஷர்மிளா உண்ணாவிரதம் தொடங்கினார். தற்கொலை முயற்சி என்று அவரைக் கைது செய்து மூக்குக் குழாய் வழியே கட்டாய உணவு செலுத்தி வருகிறது அரசு. தற்கொலை முயற்சிக் குற்றத்துக்கு அதிகபட்ச தண்டனையே ஒரு வருடம்தான் என்பதால், ஒவ்வொரு வருடம் முடிவதற்கு சில நாட்கள் முன்பு ஷர்மிளாவை விடுதலை செய்துவிட்டு திரும்பக் கைது செய்யும் சடங்கை 10 வருடமாக அரசு செய்கிறது. 2004ல் ராணுவத்தால் கொடூரமாக மனோரமா என்ற பெண் கொல்லப்பட்டதும் நூற்றுககணக்கான மணிப்பூர் பெண்கள் ராணுவ அலுவலகம் முன்பு வந்து ஆர்ப்பாட்டம் செய்தனை. அதில் சிறுமிகள் முதல் முதியவர்கள் வரையிலான 40 பேர் முழு நிர்வாணமாக ராணுவ அலுவலகம் முன்பு நின்று ‘எங்களையும் பாலியல் வன்முறை செய்து கொல்” என்று முழக்கமிட்டனர்.

மணிப்பூரும் இந்தியாதான். ஷர்மிளாவும் இந்தியர்தான். ஆனால் ஒரு சட்ட மசோதா வை எழுதப் போகும் கமிட்டி பற்றிக் கொதித்துப் போகும் அறிவுஜீவிகளுக்கு, சொந்த நாட்டில் நடக்கும் ராணுவக் கொடுமையோ, கல்பாக்கம், கூடன்குளம் போன்ற அணு உலைகள் எவ்வளவு பாதுகாப்பானவை என்பது பற்றியோ ரத்தம் கொதிப்பதே இல்லை. லஞ்சம் ஊழலை திட்டுவதுதான் இருப்பதிலேயே எளிமையானது. அரசியல்வாதியை திட்டுவது அதை விட எளிமையானது.

உண்மையில் ஏற்கனவே ஊழலைத் தடுக்க, தண்டிக்க இருக்கும் சட்டங்கள் போதுமானவைதான். அசல் பிரச்சினை சட்டம் போதவில்லை என்பதே அல்ல. அவை நடைமுறைப்படுத்தப்படாமல் இருப்பதுதான். நடைமுறைப்படுத்தினால், நம்மிடம் உள்ள சட்டங்கள் எவ்வளவு சிறப்பானவை என்பதற்கு தேர்தல் நேரத்தில் தேர்தல் ஆணையம் எடுக்கும் செயல்களே சாட்சி. தேர்தல் ஆணையம் செயல்படுத்தும் எதுவும் புது சட்டம் அல்ல. செயல்படுத்துவோரும் பழைய அதிகாரிகளேதான். லோக்பால் மசோதா்வை சட்டமாக்கினால் போதாது. நிறைவேற்றும் பணி அதிகாரிகளிடம்தான் இருக்கிறது.

அவர்கள் யார்? படித்த வர்க்கத்தை சேர்ந்தவர்கள். ஊழலுக்கு நம் நாட்டில் படிக்காத அரசியல்வாதிக்கு, ரவுடிக்கு முழு துணை புரியும் ஆடிட்டர், வக்கீல், அதிகாரி எல்லாருமே படித்த வர்க்கத்தினர்தான். இவர்களைத் திருத்தாமல் எத்தனை சட்டம் போட்டும் பயனே இல்லை.

ஏன் ஷர்மிளாவின் உண்ணாவிரதம் கவனிக்கப்படுவதில்லை ? ஏன் அண்ணாவின் போராட்டம் கவனம் பெறுகிறது ? முழுக்க

முழுக்க மீடியாதான் காரணம். கிரிக்கெட் உலக கோப்பை முடிந்து ஐ.பி.எல் தொடங்குவதற்கு இடைப்பட்ட காலத்தில் மட்டும் அண்ணா ஹசாரே உண்ணாவிரதம் செய்யாமல் இருந்திருந்தால், அவரையும் மீடியா கவனித்திருக்காது. ஒரு பரபரப்பு முடிந்ததும் அடுத்த பரபரப்புக்காக தயார் செய்யும் ஆங்கில சேனல்கள் செயற்கையாக அண்ணாவின் போராட்டத்தை ஊதிப் பெரிதாக்கிக் காட்டின. அண்ணாவை தொழிலதிபர்கள், சினிமா நடிகர்கள் ஆதரிக்கிறார்கள் என்று முழங்கின. அவர்கள்தான் கறுப்புப் பணத்தை உற்பத்தி செய்பவர்கள்.

மீடியா அடிமைகளாக இருக்கும் நடுத்தர வர்க்கத்துக்கு ஊழலுக்கு எதிராக மெழுகுவர்த்தி ஊர்வலம் போவதுதான் சாத்தியம். லஞ்சம் கேட்கும் ரிஜிஸ்ட்ரார், தாசில்தார், ஆர்.டி.ஓ அலுவலகங்களில் எதிர்க்கவும், போராடவும் அவர்களுக்கு முதுகெலும்பு கிடையாது, ஊழல் எதிர்ப்பை திருவிழாவாக, கூட்டு பஜனையாக கொண்டாடுவது ஆபத்தில்லாதது.

எல்லாவற்றுக்கும் மேலாக மக்கள் சார்பாக அரசின் மசோதா கமிட்டியில் யார் இருக்க வேண்டும் என்பதை தீர்மானிக்க அண்ணா ஹசாரே யார் ? (அவரது நிர்ப்பந்தத்துக்கு பணிந்து அரசு ஏற்றிருக்கும் பெயர்களில் ஒரு பெண் கூட கிடையாது.கிரண் பேடி அவர் ஆதரவாளரானபோதும்.) இந்த முன்னுதாரணம் பின்பற்றப்பட்டால், எந்த அரசுக் குழுவிலும் தாங்கள் விரும்புவோரை வலிமையான மீடியா பலம் உள்ள ஒரு சிறு குழு புகுத்திவிட முடியும். ஒரு சிலர் கையில் துப்பாக்கியை வைத்துக் கொண்டு மிரட்டி காரியம் சாதித்தால் தீவிரவாதம் என்றால், வேறு ஒரு சிலர் மீடியா செல்வாக்கு ,உண்ணாவிரத மிரட்டலைக் கொண்டு காரியம் சாதிப்பது மட்டும் காந்தியமாகிவிடுமா?

ஜனநாயகத்தில் நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், தேர்தலில் மக்கள் தேர்ந்தெடுத்து அனுப்பும் பிரதிநிதிகளுக்கே சட்டம் இயற்றவும் நிர்வாகம் செய்யவும் அதிகாரம் உண்டு. அவர்களிடம் மற்றவர்கள் கோரிக்கை எழுப்பலாம். பரிந்துரைக்கலாம். இயற்றப்பட்ட சட்டம் தவறானதென்றால், நீதிமன்றம் சென்று போராடலாம். தடியெடுத்தவன் தண்டல்காரன் என்ற அணுகுமுறை அது காந்தியத் தடியாக இருந்தாலும், தவறு;தான்.

### இந்த வார அவமானம்

ராஜ்யசபை தேர்தலில் ஜெயிப்பதற்காக அசாமில் குடியிருப்பதாக பொய் சொல்லியவரான நமது பிரதமர் மன்மோகன்சிங், அசாம் வாக்காளர் பட்டியலில் அவர் பெயர் இருந்தும் 2006லும் ஓட்டு

போடவில்லை. இப்போதைய சட்டமன்ற தேர்தலிலும் ஓட்டு போடவில்லை. ஒரு பிரதமரே ஓட்டு போடாமல் இருப்பது எவ்வளவு பெரிய அவமானம் !

### இந்த வார ஆபத்து

தேர்தல் ஆணையத்தின் அதிகாரங்களைக் குறைத்து மாற்றியமைப்பது பற்றி மத்திய அரசு பரிசீலிக்க வேண்டும் என்று முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி கூறியிருப்பது மிக மிக ஆபத்தானது. இன்னும் அதிகாரங்களை அதிகரிக்க வேண்டும் என்று மக்கள் எதிர்க்குரல் எழுப்ப வேண்டும்.

***கல்கி 16.4.2011***

# இரண்டு கவலைகள்

**தே**ர்தல் பரபரப்பு ஓய்ந்து முடிவுகளுக்காக அலுப்புடன் காத்திருக்கும் வேளையில் , சில அடிப்படைக் கவலைகளை வாசகர்கள் முன் நினைவுபடுத்தலாம் என்று தோன்றுகிறது. உடனடி விஷயங்களில் ஆழ்ந்து போய் தொலை நோக்கில் நாம் கவனிக்க வேண்டியதை விட்டுவிட்டால், அது பெரும் நெருக்கடியாக மாறி உடனடி பிரச்சினையாக ஆனால்தான் கவனிப்போம் என்ற மன நிலை மிகவும் ஆபத்தானது.

**கவலை 1:**

ஒளிவு மறைவற்ற பகிரங்கமான நிர்வாகம் அமையாமல் நம்முடைய எந்தப் பிரச்சினைக்கும் நம்மால் தீர்வு காணவே முடியாது.

என்ன நடக்கிறது என்பதை முழுக்க முழுக்க மூடி மறைக்கும் அரசுத் துறைகளில் முதல் இடத்தில் இருப்பது நம்முடைய அணுசக்தித் துறைதான்.

இந்தியா இதுவரை தன் அணு உலைகளை சர்வதேச அணு உலைக் கண்காணிப்பு அமைப்பின் ஆய்வுக்கு உட்படுத்த மறுத்தே வந்திருக்கிறது. அதற்குக் காரணம், ரகசியமாக அணு ஆயுதங்களைத் தயாரித்துக் கொண்டிருந்ததுதான். இரண்டாம் பொக்ரான் குண்டு வெடிப்பில் பகிரங்கமாக நாங்களும் அணு குண்டர்கள்தான் என்று அறிவித்தபிறகு, அணு ஆயுத தயாரிப்பை தனியாகவும் அணுமின்சாரத் தயாரிப்பைத் தனியாகவும் பிரிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. காரணம் அணு மின்சாரத் தயாரிப்பில் அமெரிக்கா, ரஷ்யா முதலிய நாடுகளின் கம்பெனிகளிடமிருந்து உலைகளை வாங்கவும் இங்கே அதில் தனியார் முதலீட்டை ஊக்குவிக்கவும் மன்மோகன் அரசு முடிவு செய்ததுதான்.

அப்படி முடிவு செய்ததும் அணுமின்சார உலைகளை

சர்வதேச கண்காணிப்புக்கு உட்படுத்தியாக வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. எனவே 2000மாவது ஆண்டில், இந்திய அரசு அதுவரை தன்னுடைய அணு சக்தித்துறையைக் கண்காணிப்பதற்காக தானே ஏற்படுத்தி வைத்திருந்த கட்டுப்பாட்டு வாரியத்தின் கண்காணிப்பிலிருந்து அணு ஆயுத தயாரிப்பு ஆலைகளை நீக்கி உத்தரவிடுகிறது. இனி அவற்றைக் கண்காணிக்க தனியே உள் அமைப்பு ஏற்படுத்தப்படும் என்று அறிவிக்கிறது.

வாரியத்தின் முன்னாள் தலைவர் கோபாலகிருஷ்ணன் இது தொடர்பாக அண்மையில் தெரிவித்திருக்கும் தகவல்கள் மிகவும் அச்சமூட்டுபவையாக இருக்கின்றன. அணு ஆயுத ஆலைகளை வாரியக் கண்காணிப்பிலிருந்து பிரித்தபின்னர், என்ன உள் கண்காணிப்பு முறை ஏற்படுத்தப்பட்டதென்று தெரியவில்லை என்கிறார். பதினோரு வருடங்களாக அணு ஆயுத ஆலைகளின் பாதுகாப்பு நிலை பற்றி தன் வாரியத்துக்கு எதுவும் தெரியாது என்கிறார்.

இந்தியாவில் அணு ஆயுத தயாரிப்பு ஆராய்ச்சி ஆலைகள் பல இடத்தில் உள்ளன. பெரும் மக்கள் தொகை இருக்கும் மும்பைக்கும் சென்னைக்கும் அருகே அணு ஆயுத தயாரிப்பு ஆலைகள் உள்ளன. சென்னை அருகே உள்ள கல்பாக்கத்தில்தான் அணுகுண்டுக்கு தேவையான புளுட்டோனியத்தைப் பிரித்து எடுக்கும் ஆலையும் அணு நீர்மூழ்கிக் கப்பல் ஆய்வு ஆலையும் உள்ளன.

இவற்றை நடத்துபவர்களே கண்காணிப்பவர்களாகவும் இருப்பது எப்படி நியாயம் என்ற கேள்வியை கோபாலகிருஷ்ணன் எழுப்பியிருக்கிறார். சுயேச்சையான மேற்பார்வை அமைப்பு இல்லாதவரைக்கும் பாதுகாப்பு ஒழுங்காகத்தான் இருக்கிறதா என்பது உறுதிப்படுத்தமுடியாததாகவே இருக்கும்.

அமெரிக்காவில் இது இப்படி இல்லை என்று கோபாலகிருஷ்ணன் சுட்டிக் காட்டியிருக்கிறார். 1988ல் அங்கே இதற்கென்றே உருவாக்கப்பட்ட கண்காணிப்பு வாரியத்துக்கு அமெரிக்க ஜனாதிபதி செனட்டின் ஒப்புதலுடன் ஐந்து உறுப்பினர்களை, அரசு நிர்வாகத்துக்கு வெளியிலிருந்து பொது மக்களிலிருந்து நியமிக்க வேண்டும். ஐவரில் மூவருக்கு மேல் ஒரே அரசியல் சார்புடையவர்களாக இருக்கக்கூடாது. அவர்கள் அணுத் துறை அறிஞர்களாக இருக்க வேண்டும்.

அணுத்துறையின் ஏதேனும் ஒரு செயல்பாடு பொதுமக்களின் உடல் நலம், பாதுகாப்புக்கு அச்சுறுத்தலாக இருப்பதாக இந்த வாரியம் கருதினாலும அது தொடர்பாகக் கோரும் தகவல்களை

எல்லாம் அணுத்துறை செயலாளர் கொடுத்தே ஆகவேண்டும். அவை ரகசிய தகவல்களாக இருந்தாலும் கூட ! இவற்றை பரிசீலித்தபிறகு வாரியம் தெரிவிக்கும் பரிந்துரைகளைப் பொது மக்களின் பார்வைக்கு வைக்க வேண்டும். அதன் மீது அணுத் துறை செயலாளர் சொல்லும் கருத்துகளையும் பொதுமக்கள் முன்பு வைக்க வேண்டும். பொது மக்கள் கருத்து தெரிவிக்க 45 நாட்கள் அவகாசம் தரவேண்டும். அதன் பின்னர் வாரியம் மீண்டும் எல்லாவற்றையும் பரிசீலிக்கும்.

இந்தியாவில் இது போல ஒப்புக்கு கூட எதுவும் கிடையாது. அஃபிஷியல் சீக்ரெட்ஸ் ஆக்ட் எனப்படும் அதிகாரப்பூர்வமான ரகசியங்கள் சட்டத்தின் கீழ் அணு உலைகள் பற்றி எந்தத் தகவலையும் ஒரு குடிமகனும் தெரிந்துகொள்ள முடியாது.

தனியார்வசம் அணு மின்சாரம் தயாரிப்பது ஒப்படைக்கப்படுவதற்கு மன்மோகன் அரசு விரைந்து நடவடிக்கை எடுத்து வரும் சூழலில் உடனடியாக அணுத் துறை முழுவதும் பகிரங்கக் கண்காணிப்பின் கீழ் வருவது அவசியமாகிறது.

ஜப்பான் அணு உலை விபத்துக்குப் பின் இந்தியாவில் அணு உலை பாதுகாப்பு இன்னும் கடுமையாக்கப்படும் என்று ஒப்புக்கு மன்மோகன்சிங் அறிவித்ததுடன் சரி. எப்படி கடுமையாகும், யார் அதை பொறுப்பேற்று செய்வார்கள் என்பது பற்றியெல்லாம் எந்த விவரமும் இல்லை. கோபாலகிருஷ்ணன் சொல்வது போல, தவறு செய்யக்கூடிய அதே அணு உலை நிர்வாகமே கண்காணிக்கும் அதிகாரத்துடனும் இருக்கும் அவலநிலைதான்.

சுயேச்சையான ஓர் அணு சக்தி அறிஞர் குழுவை நாடாளுமன்ற சர்வகட்சி ஒப்புதலுடன் நியமித்து அதன் அறிக்கை வரும்வரை புதிய அணு உலைகள் தொடங்கமாட்டோம் என்று அறிவிப்பதுதான் நியாயம். ஆனால் மராட்டியத்தில் ஜெய்தாபூரில் அணு உலை தொடங்குவதை எதிர்க்கும் மக்கள் மீது துப்பாக்கி சூடு நடத்தி ஒருவரைக் கொன்றதுதான் இந்த வாரம் மன்மோகன் அரசு எடுத்த நடவடிக்கை.

மொத்த மின்சார தேவையில் வெறும் மூன்று சதவிகிதம் மட்டுமே தரும் அணு உலைகளை நிறுத்திவைத்து ஆய்வு செய்வதால் ஒன்றும் குடி முழுகிப் போய்விடாது. திட்டமிட்டபடி புது உலைகள் தொடங்கினாலும் மொத்த மின் உற்பத்தியில் அவை வெறும் ஐந்து சதவிகிதத்தை அடைவதற்கே ஐம்பது வருடங்கள் ஆகும். ஆனால் அந்த உலைகளில் விபத்து ஏற்பட்டால் விளைவுகள் பல தலைமுறைகளுக்கு நம்மை பாதித்துவிடும்.

தன் மொத்த மின் உற்பத்தியில் 25 சதவிகிதத்தை அணு

உலைகளிலிருந்து தயாரித்து வரும் ஜெர்மனி இப்போது எல்லா அணு உலைகளையும் படிப்படியாக மூடிவிட முடிவு செய்திருக்கிறது. இதில் ஆளும் கட்சி, எதிர்க்கட்சிகள் ஒரே கருத்தில் இருக்கின்றன. ஜப்பான் விபத்துக்குப் பின் ஜெர்மனி தன் மொத்த 17 உலைகளில் எட்டை 90 நாட்களுக்கு மூடிவைத்து ஆய்வு செய்து வருகிறது. மக்களிடையே கருத்து கணிப்பு எடுத்ததில் மொத்த 17 உலைகளையும் மூடிவிடலாம் என்று ஆதரவு தெரிவித்தவர்கள் 76 சதவிகிதம் பேர். இங்கே மக்களிடம் இதற்கெல்லாம் கருத்தே கேட்பதில்லை. கருத்து சொல்ல வருபவர்கள் மீது துப்பாக்கிச் சூடு.

ஊழலுக்கு எதிரான லோக்பால் மசோதாவை விட, இந்திய அணு உலைகளை ஆய்வுக்குட்படுத்த சுயேச்சையான ஒரு லோக்பாலை உருவாக்குவதுதான் என்னைப் பொறுத்த வரையில் இன்னும் அவசரமான பிரச்சினை. ஏனென்றால் உயிரோடு இருந்தால்தான் லஞ்சம் கொடுப்பது வாங்குவது அதை விசாரிப்பது பற்றியெல்லாம் பேசமுடியும்.

**கவலை 2:**

படித்த இளைஞர்கள் பலர் லஞ்சம் பற்றிக் கவலைப்படுகிறார்கள். நேர்மையான, திறமையான நிர்வாகம் வேண்டுமென்பதற்கான அக்கறையோடு இருக்கிறார்கள். அதனால்தான் எதற்காக அண்ணா ஹசாரே உண்ணாவிரதம் இருக்கிறார் என்ற விவரம் கூடத் தெரியாமல் பல இளைஞர்கள் உணர்ச்சிவசப்பட்டு அவர் பின்னால் குவிந்தார்கள். இதை நீங்கள் அலட்சியப்படுத்தலாமா என்று சில வாசகர்கள் என்னிடம் கேட்கிறார்கள்.

இல்லை. இந்த உணர்வுகளால் உந்தப்படுவதை நான் அலட்சியப்படுத்தவில்லை. ஆனால் வெறும் உணர்ச்சி போதாது. கூடவே அறிவு வேண்டும் என்பதுதான் நான் மீண்டும் மீண்டும் வலியுறுத்தும் விஷயம். ஊழல் ஒழியவேண்டும் என்பது உணர்ச்சி. அதற்கு லோக்பால் மசோதா போதுமானதா, இருக்கும் சட்டங்கள் ஏன் செயல்படுத்தப்படுவதில்லை என்று ஆராய்வது அறிவு. அறிவின் அடிப்படையில்தான் தீர்வுகளை அடையமுடியும்.

அறிவைப் பரப்புவதில் இருக்கும் தடைகள்தான் என் இந்த வார இரண்டாவது கவலை. திருச்சியில் இருக்கும் எஸ்.ஆர்.வி பள்ளியின் தலைமையாசிரியர் என் நண்பர் துளசிதாசனும் நானும் கடந்த சில ஆண்டுகளாக பள்ளியில் ப்ளஸ் ஒன் படிக்கும் மாணவர்களின் தலைமைப் பண்புகளை வளர்க்கவும் பாடப்புத்தகங்களுக்கு வெளியிலான அறிவை விசாலப்படுத்தவும் பயிற்சி முகாம்களை வடிவமைத்து செயல்படுத்தி வருகிறோம்.

பள்ளிப் பருவத்தில் மாணவர்களுக்கு பெரும்பாலும் பாடப் புத்தகத்துக்கு வெளியே படிக்கும் பழக்கம் இல்லை. முதலில் அதை உருவாக்க வேண்டியிருக்கிறது. அது எளிதில் ஒரு நாளில் உருவாக்கக்கூடியது அல்ல. குடும்பம், பள்ளி, கல்லூரி, நண்பர்கள் என்று பலரின் செல்வாக்கில் வளரக்கூடியது அல்லது கருகக்கூடியது. படிக்கும் பழக்கம் பலருக்கு எட்டாம் வகுப்பில் தொடங்கினாலும், அவர்களுக்கேற்ற பல துறைப் புத்தகங்களெழுத தமிழில் மிக சிலரே இருக்கிறார்கள். அவர்களில் பலர் மேம்போக்காக எழுதுகிறார்கள். எளிமையாக, ஆழமாக எழுதுபவர்கள் பெருமளவில் தேவைப்படுகிறார்கள்.

எனவே சிறுவர்களிடம் இப்போதைக்கு உரையாடல் மூலம்தான் பல விஷயங்களைப் பகிர வேண்டியிருக்கிறது. 1975-76 எமர்ஜென்சி, தலித் இயக்கங்கள், காந்திய இயக்கம், பொதுவுடமை இயக்கம், திராவிட இயக்கம், சுற்றுச் சூழல், சுதேசி இயக்கம், மகளிர் இயக்கம், இசை, ஓவியம், நாடகம், பாட்டு, கவிதை, அறிவியல், வேளாண்மை, தன் உடற்கூறு ஆரோக்கியம், என்று ஏராளமான விஷயங்களைப் பற்றி அரைகுறையாகக் கூட தெரியாமலேதான் பெரும்பாலோர் வளர்கிறார்கள். தெரிந்திருக்கும் சினிமா, டெலிவிஷன் பற்றிக் கூட முழுமையாக தெரியாது.

பல துறைகளிலும் அனுபவமும் அறிவும் உள்ள மூத்தவர்கள் நிறைய பேர் உள்ளனர். ஆனால் அதில் பெரும்பாலோருக்கு, ப்ளஸ் ஒன் படிக்கும் 15,16 வயதினருக்குப் புரியும் விதத்திலும் சுவையாகவும் தங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லத் தெரியவில்லை. ஒரு சப்ஜெக்டில் 40 மாணவர்களுக்கு ஒரு பயிற்றுநர் வீதம் குறைந்தது ஐந்து பேராவது தேவை. ஆனால் ஒவ்வொன்றிலும் ஒருவர் கிடைப்பதற்கே ஒவ்வோராண்டும் நானும் துளசிதாசனும் அல்லாட வேண்டியிருக்கிறது.

ஒவ்வொரு அமர்விலும் சிறப்பாக தங்களுடன் விஷயங்களைப் பகிர்வோரிடம் மாணவர்கள் உற்சாகமாக விவாதிப்பதைப் பார்க்கும்போதெல்லாம் மகிழ்ச்சியாக இருக்கிறது. அதே சமயம், தரமான,திறமையான,பயிற்றுநர்களுக்கு இருக்கும் பஞ்சம் பெரும் கவலை தருகிறது.

ஒரு பெரும் எண்ணிக்கையில் இளம் தலைமுறை காத்துக் கிடக்கிறது. அதனிடம் தன் அறிவையும் அனுபவத்தையும் பார்வையையும் பகிர்வதற்கு தன்னைத் தயாரித்துக் கொண்ட மூத்த தலைமுறையைக் காணோம். உணவுப் பஞ்சத்துக்கு நிகரான பெரும் பஞ்சம் இது.

**இந்த வாரப் பூச்செண்டு 1 :**

*தடைகளை மீறி 49 ஓவைப் பதிவு செய்த சுமார் 25 ஆயிரம் துணிச்சல்காரர்களுக்கு இ.வா.பூ.*

**இந்த வாரப் பூச்செண்டு 2:**

*அத்துமீறி நுழைந்த மீடியாவை பூத்திலிருந்து துரத்தியடித்துவிட்டு ரகசியமாக தன் ஓட்டை பதிவு செய்த கமல்ஹாசனுக்கு இ.வா.பூ. அப்படி செய்யத் தெரியாத ரஜினிக்கு இ.வா அனுதாபம்.*

***கல்கி 23.4.2011.***

# இரண்டு குற்றப்பத்திரிகைகள்

## குற்றப் பத்திரிகை 1 :

ஈழத் தமிழர்களின் மாபெரும் துயரங்களுக்கு ராஜபக்ஷே அரசும் விடுதலைப் புலிகளும் பொறுப்பு என்று நேர்மையான விமர்சகர்கள் இதுவரை சொல்லி வந்ததைத்தான் இப்போது ஐக்கிய நாடுகள் சபையின் நிபுணர்குழு அறிக்கையும் உறுதிப்படுத்தியிருக்கிறது.

கடைசியாக நடந்த உள்நாட்டு யுத்தத்தில் இரு தரப்பும் குற்றங்கள் இழைத்திருப்பதை ஐ.நா நிபுணர் அறிக்கை தெளிவாக சுட்டிக் காட்டியிருக்கிறது.

இந்த அறிக்கையின் விளைவாக ஏதேனும் உருப்படியாக நடக்குமா என்பது சந்தேகத்துக்குரியதுதான். ஏனென்றால் இதன் அடிப்படையில் சர்வதேச விசாரணை நடத்தப்படுமா என்பதையெல்லாம் ஐ.நாவின் பாதுகாப்பு கவுன்சில்தான் தீர்மானிக்குமே ஒழிய அதன் செயலாளர் முடிவு எடுத்துவிடமுடியாது. ஐ.நா என்பது உலகின் பல்வேறு வல்லரசு நாடுகளின் கைப்பாவையாக இருந்துவருகிறது என்பதுதான் கடந்த கால நிகழ்ச்சிகள் காட்டும் உண்மை. எனவே அது அதிகபட்சம் ஒரு பல் இல்லாத பாம்பாகவே இருக்கிறது.

இலங்கையில் நடந்த போர்க் குற்றங்களுக்காக, சாதாரணபொதுமக்களான ஈழத்தமிழர்களுக்கு செய்யப்பட்ட கொடுமைகளுக்காக சம்பந்தப்பட்டவர்கள் பொறுப்பாக்கப்படவேண்டுமென்று ஐ.நா அறிக்கை சொல்லியிருக்கிறது.

அதன்படி இலங்கை (ராஜபக்ஷே) அரசாங்கம் மீது அறிக்கை தெரிவிக்கும் முக்கியக் குற்றச்சாட்டுகள் ஐந்து :

1. மூன்று அமைதி வளையங்கள் உள்ளிட்ட பகுதிகளில் கணக்கற்ற ஏவுகணைத் தாக்குதல்கள் நடத்திப் பொது மக்களைக் கொன்றது. 2. மருத்துவமனைகள் போன்ற போருக்கு விலக்கப்பட்ட பகுதிகள் மீது ஏவுகணைத் தாக்குதல்கள் செய்தது. 3. மனிதாபிமான அடிப்படையில் செய்யப்படவேண்டிய உதவிகளை செய்யவும் அனுமதிக்கவும் மறுத்தது. 4. அகதிகளாக வந்த மக்களின் அடிப்படை உரிமைகளை மீறியது. புலிகள் என்று சந்தேகிக்கப்பட்டவர்களை சித்ரவதை செய்தது. 5. யுத்தம் நடந்த பகுதிகளுக்கு வெளியே ஊடகங்களை பல வழிகளில் ஒடுக்கியது. அங்கு மனித உரிமைகளை மீறியது.

இதில் விசித்திரம் என்னவென்றால் இலங்கை அரசு மீது நிபுணர் குழு தெரிவித்துள்ள முதல் இரு குற்றச்சாட்டுகளுக்கும் அரசு மட்டுமல்ல, விடுதலைப் புலிகளும் பொறுப்பேற்க வேண்டியிருக்கிறது என்று அடுத்ததாக புலிகள் மீது ஐ.நா குழு பட்டியலிட்டுள்ள குற்றச்சாட்டுகளைப் பார்க்கும்போது தெரிகிறது.

புலிகள் மீதான குற்றச்சாட்டுகள்: 1. பொது மக்களை மனிதக் கேடயமாகப் பயன்படுத்தியது. 2. புலிகளின் கட்டுப்பாட்டு பகுதிகளிலிருந்து தப்பிச் செல்ல முயன்ற பொதுமக்களைக் கொன்றது. 3. பொதுமக்கள் இருந்த பகுதிகளிலிருந்து ஆயுதங்களுடன் தாக்குதல்கள் நடத்தியது. 4. சிறுவர்களையும் பிறரையும் பலவந்தப்படுத்தித் தங்கள் படையில் சேர்த்தது. 5. பொது மக்களை ஊழியர்களைக் கட்டாயப்படுத்தி பதுங்குகுழிகள் வெட்டுவது போன்ற வேலை வாங்கியது. 6. தற்கொலைத் தாக்குதல்கள் செய்து பொதுமக்களைப் படுகொலை செய்தது.

மேற்படிக் குற்றங்களுக்காக இலங்கை அரசின் அரசியல் தலைவர்கள், அதிகாரிகள், ராணுவ தளபதிகள், ராணுவத்தினர், விடுதலைப்புலிகளின் அரசியல் தலைவர்கள், ராணுவத்தினர் ஆகியோர் பொறுப்பேற்கச் செய்யப்படவேண்டும் என்று ஐ.நா குழு அறிக்கை சொல்கிறது.

ராஜபக்ஷே, கோத்தபாயா, பொன்சேகா முதலானோர் இலங்கை அரசின் போர்க் குற்றங்களுக்குப் பொறுப்பானவர்கள். அவர்கள் மீது விசாரணை நடத்த வாய்ப்பு இருக்கிறது. புலிகளின் போர்க் குற்றங்களுக்காக யாரை இப்போது பொறுப்பாக்குவது ? வெளிநாடுகளில் இன்னமும் தங்களைப் புலிகளின் தலைவர்களாக அறிவித்துக் கொள்வோரையா ? இலங்கை அரசு வசம் இருக்கும் கே.பியையா ? அல்லது புலிகள் எந்தத் தவறும் செய்யவே இல்லை என்று அரசியல்தளத்தில் குரல் கொடுத்துக் கொண்டிருக்கும் நெடுமாறன், வைகோ, சீமான் போன்றவர்களையா ? யாரைப் பொறுப்பாக்குவது ?

ஐ.நா நிபுணர் குழு அறிக்கை உண்மையானது என்று வாதிட்டால் இலங்கை அரசு பற்றி சொல்லப்பட்டது மட்டும்தான் உண்மை என்றோ, புலிகள் பற்றி சொல்லப்பட்டது மட்டும்தான் உண்மை என்றோ யாரும் வாதிடமுடியாது. முழுவதும் உண்மை என்று ஏற்கப்பட்டால், இரு தரப்பிலிருந்தும் பொறுப்பானவர்கள் கண்டறியப்பட்டு போர்க் குற்றங்களுக்காக விசாரிக்கப்படவேண்டும் என்பதே நியாயமாக இருக்கமுடியும்.

ஐ.நாவைப் பொறுத்தமட்டில் நடைமுறையில் இவை எதுவும் சாத்தியம் இல்லை. இலங்கை அரசுடன் சீனா, ரஷ்யா, இந்தியா, ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா , பிரிட்டன் ஆகியவற்றுக்கு இருக்கும் இப்போதைய உறவு, அவற்றுக்கு இலங்கையில் இருக்கும் லாப நஷ்டங்கள் அடிப்படையிலேயே ஐ.நாவின் அடுத்த முடிவுகள் எடுக்கப்படும். நாம் எழுப்பும் குரல்களுக்கும் அதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது.

பெரும் கொடுமைகளுக்கு உள்ளாகி யுத்தத்தில் இறந்த ஈழத்தமிழர்களுக்கான உண்மையான நியாயம் என்பது இனி எஞ்சியிருக்கும் தமிழர்களுக்கு புனர் வாழ்வும், சம உரிமையும், சம அரசியல் அதிகாரமும் பெற்றுத் தருவதேயாகும். அதற்கான வழிகள் என்ன என்று ஆராய்ந்து நடவடிக்கைகள் எடுப்பதுதான் சரியான அடுத்த கட்ட அரசியலாக இருக்க முடியும்.

## குற்றப்பத்திரிகை 2

கனிமொழியை சதிகாரி என்று குற்றம்சாட்டியிருக்கிறது சி.பி.ஐ. ஸ்பெக்ட்ரம் ஊழலில் சதிகாரரான ஆ.ராசாவின் துணை சதிகாரர் அந்தஸ்து கனிமொழிக்குக் கிட்டியிருக்கிறது.

ஸ்பெக்ட்ரம் ஊழல் முன்கூட்டி திட்டமிடப்பட்ட ஊழல் என்பது அம்பலமான நிகழ்ச்சிகளை அடுத்தடுத்து வைத்துப் பார்த்தாலே சாதாரண மனிதர்களுக்குக் கூடப் புரிந்துவிடும். மன்மோகன் அமைச்சரவையை அமைக்கும்போதே யாருக்கு டெலிகாம் இலாகா என்பது பற்றி சதி செய்யப்படுகிறது. ராசா நிச்சயம் அமைச்சராக வேண்டும், அவருக்கே டெலிகாம் தரப்படவேண்டும். தயாநிதி மாறனுக்கு தரப்படக் கூடாது என்றெல்லாம் விவாதிக்கப்படுகிறது. இந்த விவாதத்தில் தரகர் நீரா ராடியா, கனிமொழி, ராசா மூவரும் பங்கேற்கிறார்கள். நீரா ராடியா வாக்களித்தபடியே ராசாவுக்கு டெலிகாம் கிடைக்கிறது. நீரா ராடியா டாட்டா நிறுவனத்தின் தரகர். தவிர இன்னும் அம்பானி உள்ளிட்ட பல நிறுவனங்களுக்குத் தரகர். ராடியா தொடர்புள்ள நிறுவனங்கள் ஸ்பெக்ட்ரம் லைசன்சில் பயனடைகின்றன.

2ஜி ஸ்பெக்ட்ரம் லைசன்ஸ் வழங்கும்போது ராசாவுக்கு

எதிராகப் பெரும் விமர்சனம் எழும்போது தொழிலதிபர் டாட்டா ராசாவுக்கு ஆதரவாகக் குரல் எழுப்புகிறார். கருணாநிதிக்குக் கடிதமே எழுதுகிறார். அதை நீராவிடமே கொடுத்தனுப்புகிறார்.

அடுத்துக் கலைஞர் டி.வி சேனல் ஆரம்பிக்கப்படும்போது அதற்கு வருகிற சுமார் 214 கோடி ரூபாய் பணம் ஸ்பெக்ட்ரம் லைசன்ஸ் பெற்ற கம்பெனியிடமிருந்து பல கை மாற்றி வருகிறது. கலைஞர் சேனலை டாடாஸ்கை டிஷ்ஷில் இடம்பெறச் செய்ய சேனலின் இயக்குநரான கனிமொழி தீவிர முயற்சிகள் எடுக்கிறார். டாட்டா தொடர்பான அண்ணா சாலை கட்டட பேரத்தில் கனிமொழியின் தாயார் ராஜாத்தி அம்மாள் பெயர் சம்பந்தப்படுகிறது, அவருடைய ஆடிட்டர் ரத்னம் நீரா ராடியாவுடன் பேசியது பதிவாகியிருக்கிறது.

ராசாவின் தயவில் ஸ்பெக்ட்ரம் லைசன்ஸ் பெற்ற கம்பெனிகளுக்கெல்லாம் தமிழ்நாட்டில் கிராமியக் கலைகளை வளர்க்கும் சமூக அக்கறை வந்துவிடுகிறது. கனிமொழியும் கார்ப்பரேட் சாமியார் ஜகத் கஸ்பாரும் நடத்தும் தமிழ் மையத்துக்கு நன்கொடை வழங்குகிறார்கள்.

இப்படி மிகத்தெளிவாக கனிமொழியின் பங்கு, கருணாநிதியின் குடும்பத்தினரின் பங்கு நீரா ராடியா டேப் உரையாடல்களிலும் அடுத்தடுத்து அம்பலமான சில ஆவணங்களிலும் வெளிச்சமாகிவிட்டது. இவற்றையெல்லாம் மேலும் ஆவணங்களின் உதவியுடன் நீதி மன்றத்தில் நிரூபிக்க வேண்டியது மட்டும்தான் பாக்கி. இதுவரை சி.பி.ஐ சிறப்பாகவே செயல்பட்டிருக்கிறது. அதற்கு முக்கியக் காரணம் விசாரணையை நேரடியாக உச்ச நீதிமன்றம் மேற்பார்வையிடுவதுதான்.

அரசியல்ரீதியாக கனிமொழி மீதான குற்றப்பத்திரிகை என்ன விளைவுகளை ஏற்படுத்தும் என்று பார்க்கலாம். மே 13அன்று தமிழகத்தேர்தல் முடிவுகள் எப்படி அமைகின்றன என்பதுதான் விளைவை ஏற்படுத்துமே தவிர வேறு எதுவும் ஒன்றும் செய்யாது. சுரேஷ் கல்மாடியைக் கைது செய்தது போல அடுத்து கனிமொழியைக் கைது கூட செய்யலாம். ஆனாலும் மே 13 முடிவுகள்தான் தி.மு.கவின் எதிர்காலத்தை தீர்மானிக்கும். அதுவரை ஓரிரு மிரட்டல் அறிக்கைகள் தவிர வேறு எதுவும் தி.மு.கவுக்கு சாத்தியமில்லை.

தி.மு.க மீண்டும் ஆட்சியைப் பிடித்தால், நிச்சயம் கலைஞர் கருணாநிதி மகளுக்காக மத்திய அரசுடன் மோதத் தயாராகிவிடுவார். மன்மோகன் ஆட்சிக்கு ஆதரவைத்திரும்பப் பெற்று அமைச்சரவையிலிருந்து விலகி காங்கிரசுக்கு

நெருக்கடிகளை உருவாக்கலாம்.

தி.மு.க ஆட்சியை இழந்தால், என்னவானாலும் காங்கிரசுடன் உறவை முறிக்காமல் தொடர அரும்பாடுபடும். ஏனென்றால் தமிழக ஆட்சியில் இருக்கும் ஜெயலலிதாவும் காங்கிரஸ் மத்திய ஆட்சியும் ஒன்று சேர்ந்துவிட்டால் தி.மு.க நிலை கடினமானதாகிவிடும்.

கனிமொழியின் அரசியல் எதிர்காலம், இனி சகோதரர்களின் கருணையை மட்டுமே நம்பியிருக்கிறது. கருணை காட்ட வேண்டிய எந்த அவசியமும் அவர்களுக்கு இல்லை. அப்பாவுக்காக அவர்கள் சற்று நெகிழ்ந்து கொடுக்கலாம். முற்றிலும் அரசியலை விட்டு விலகிச் செல்வதென்ற நிபந்தனையை கனிமொழி ஏற்றுக் கொண்டால் மட்டுமே அவர்கள் கனிமொழியைக் காப்பாற்ற உதவ முன்வரக் கூடும்.

கனிமொழியின் நிமித்தம் தி.மு.கவின் எதிர்காலத்தை பணயம் வைக்க ஒருபோதும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். கட்சிக்கு ஸ்டாலினால், அழகிரியால், மாறன்களால் லாபம் என்ன நஷ்டம் என்ன என்று கணக்கு பார்த்தால் லாபங்களே அதிகம். ஆனால் கனிமொழியால் கட்சிக்கு எந்த லாபமும் இதுவரை இல்லை. நஷ்டமே அதிகம்.

கனிமொழியைக் காப்பாற்றும் பொறுப்பும் கடமையும் இனி தந்தையான கருணாநிதியுடையதே ஒழிய கட்சியுடையது அல்ல.

சர்க்காரியா கமிஷன் விசாரணையின் அடிப்படையில் எழுபதுகளின் இறுதியிலும் எண்பதுகளின் தொடக்கத்திலும் கருணாநிதி மீது போடப்பட்ட ஊழல் வழக்குகளிலிருந்து மத்திய அரசின் உதவியுடன் தப்பியது போன்ற சூழ்நிலை இப்போது இல்லை. மத்திய அரசே உதவினாலும், நீதிமன்றங்களிடமிருந்து தப்பமுடியாது என்ற நிலை அண்மைக்காலமாக ஏற்பட்டிருக்கிறது.

ஒரே வழி நீதிபதிகளை விலைபேச முடியுமா என்று முயற்சிப்பதுதான். நல்ல வேளையாக இப்போதைய உச்ச நீதி மன்றம் அப்படிப்பட்ட விலைகளுக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது.

தொடர்ந்து உச்ச நீதி மன்றம் இப்படியே இயங்கினால், இன்னும் பல பிரபலங்களை நாம் அவர்களுக்குரிய இடத்தில் (சிறையில்) வைத்துப் பார்க்கும் ஆச்சரியம் நிகழும்.

**இந்த வாரப் பூச்செண்டு:**

எண்டோசல்பான் பூச்சி மருந்தைத் தடை செய்யக் கோரி நடந்த உண்ணாவிரதப் போராட்டத்தில் கலந்துகொண்டதற்காக

கேரளா முதலமைச்சர் அச்சுதானந்தனுக்கு இ.வா.பூ

**இந்த வார சந்தேகம்:**

உயர் நீதி மன்றத்தால் விடுதலை செய்யப்பட்டபின் பத்தாண்டு காலம் எந்தக் குற்றச் செயலிலும் ஈடுபடாமல் நேரான வாழ்க்கையை வாழ்ந்திருக்கும் ஜான் டேவிடை, உச்ச நீதி மன்றம் மீண்டும் பழைய குற்றத்துக்காக சிறையில் அடைப்பது எப்படி சரியாகும் ? சிறை தண்டனை சீர்திருத்தவா? தண்டிக்கவா? பத்தாண்டு தாமதமாக தீர்ப்பு வழங்கியது யார் குற்றம் ?

***கல்கி 30.4.2011***

# இரண்டு கடிதங்கள்

அன்புள்ள முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி அவர்களுக்கு

வணக்கம்.

இன்னொரு முறை நீங்கள் முதலமைச்சராவீர்களா, மாட்டீர்களா என்பது இன்னும் சில தினங்களில் தெரிந்துபோய்விடும். முதலமைச்சராகும் வாய்ப்பு உங்களுக்குக் கிடைத்தால் நீங்கள் என்னவெல்லாம் செய்யவேண்டும் என்ற கோரிக்கைகளையே இப்போது உங்கள் முன்வைக்கிறேன்.

தி.மு.க அணி பெரும்பான்மை பெற்றாலும், நான் முதலமைச்சராக விரும்பவில்லை என்று தயவுசெய்து அறிவியுங்கள். மு.க.ஸ்டாலினை முதலமைச்சர் பதவிக்கு முன்மொழிந்து வரலாறு படையுங்கள். பத்தாண்டுகளுக்கு முன்பே நீங்கள் செய்திருக்க வேண்டியதை செய்யத் தவறியதற்கு இப்போதேனும் தீர்வு செய்யுங்கள். அழகிரியை மாநிலத்தில் ஸ்டாலினின் தலைமையை ஏற்றுக் கொண்டு ஒரு அமைச்சராகப் பணியாற்றச் சொல்லுங்கள். அதற்கு உடன்படாவிட்டால், அரசியலை விட்டு விலகியிருக்கச் சொல்லுங்கள். கனிமொழியை தான் ஸ்பெக்ட்ரம் ஊழலில் தொடர்பற்றவர் என்று நீதிமன்றத்தில் நிரூபிக்கும் வரையேனும் அரசியலிலிருந்து விலகியிருக்கச் செய்யுங்கள்.

ஸ்டாலின் அமைக்கக் கூடிய புதிய அமைச்சரவையில் ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் வட்டாரத் தலைவர்களின் குடும்ப வாரிசுகளை அமைச்சர்களாக்காமல், அப்படிப்பட்ட பின்னணி இல்லாமல் அரசியலுக்கு வந்திருக்கும் புதியவர்களை அமைச்சர்களாக்கச் சொல்லுங்கள்.

நீங்கள் கட்சித் தலைவராக இருந்து வழிகாட்டுவதோடு

நிறுத்திக் கொள்ளுங்கள். தயவுசெய்து ஒன்றை நினைவில் வையுங்கள். இன்னும் அதிகபட்சம் நீங்கள் 14 முதல் 20 ஆண்டுகள் வரை உயிர் வாழமுடியும், அதுதான் இயற்கை நமக்கெல்லாம் வகுத்திருக்கிற எல்லை. உங்கள் 14 வயதில் உங்கள் கண் முன்னாலேயே உருவாகி வளர்ந்து வலிவடைந்த திராவிட இயக்கம், குறிப்பாக தி.மு.க, அடுத்த 14 ஆண்டுகளில் உங்கள் கண் முன்னாலேயே சிதைந்து சிதறி வீணாய்ப் போவதையும் பார்க்கும் அவல நிலை ஏற்பட வேண்டாம்.

தி.மு.க பிரும்மாண்டமான லட்சியக் கனவுகளுடன் அன்றைய இளைஞர்களால் உருவாக்கப்பட்டது. அவர்கள் யாரும் ஆட்சி அதிகாரத்தைப் பிடித்தால், மணற் கொள்ளையில் தம் குடும்பத்துக்கு பங்கு கிடைக்குமென்ற நப்பாசையில் அரசியலில் ஈடுபட்டவர்கள் அல்ல. அந்தக் கனவுகள் உருவாகி துளிர்த்த காலத்தில் உடனிருந்து நேரில் பார்த்த சாட்சி நீங்கள்.

உங்கள் கண் முன்பாகவே தி.மு.க சிதைந்து அழிவதை தடுக்க மெய்யாகவே நீங்கள் விரும்பினால், இதுதான் கடைசி வாய்ப்பு. முடியுமானால், ஸ்டாலினைத் தவிர உங்கள் குடும்பத்தினர் அத்தனை பேரையும் கட்சியிலிருந்து விலக்கி வையுங்கள். அதனால் ஒன்றும் வானம் இடிந்து கீழே விழுந்துவிடாது. எந்த அரசியலறிவும், கொள்கைப் பிடிப்பும் இல்லாமல் உருவாகி வந்திருக்கும் புதிய தலைமுறை தமிழ் இளைஞர்களிடம் துடிப்பும் ஆற்றலும் இருக்கின்றன. அவர்களை மீண்டும் திரட்டினால் தி.மு.க எந்த லட்சியத்துக்காக, அண்ணாவால் தொடங்கப்பட்டதோ அதை மீட்டெடுக்க முடியும். அதை திசை மாற்றிய குற்றத்துக்கு நீங்களே பரிகாரம் செய்யும் கடைசி வாய்ப்பு இது.

ஒருவேளை தி.மு.க மீண்டும் ஆட்சியைப் பிடிக்கும் வாய்ப்பைத் பெறா விட்டால், அப்போதும் உங்களுக்குப் பெரும் கடமை காத்திருக்கிறது. இந்தத் தோல்வியால் தி.மு.க அழியாமலிருக்க, ஏன் தோற்றோம் என்பதற்கான மெய்யான காரணங்களை நீங்கள் யோசிக்க வேண்டும். நிச்சயம் உங்கள் தோல்வி ஜெயலலிதா மீதான மக்களின் நம்பிக்கையால் வருவதல்ல. உங்கள் மீதான அவநம்பிக்கையாலேயே ஏற்படுவது. இலவசம் என்னும் லஞ்சம் கொடுத்து மக்களை ஒரு தடவை ஏமாற்றலாம், தொடர்ந்து ஏமாற்றமுடியாது என்பதை நீங்கள் உணரவைப்பதற்கான தோல்வியாக அது இருக்கும். கட்டற்ற ஊழல் எல்லா மட்டங்களிலும் தாண்டவமாடியதையும், உங்கள் குடும்பத்தினர் அதிகார முறைகேடுகளினால் பெரும் லாபம் அடைவதையும் மக்கள் சகிக்கவில்லை என்பதை உணர்த்தும் தோல்வி அது.

மறுபடியும் மக்கள் நம்பிக்கையை தி.மு.க பெற வேண்டுமானால்,

குடும்ப அரசியலைக் கைவிடுங்கள். குடும்பம்தான் உங்கள் பலம், பலவீனம் இரண்டும். பகுத்தறிவு, சமத்துவம் என்ற இரு பெரும் பெரியார் கொள்கைகளையும் எளிமை, நேர்மை என்ற இரு பெரியார் வாழ்க்கை நெறிகளையும் புதிய தலைமுறையிடம் கொண்டு செல்லும் பிரசாரகனாக உங்களை மாற்றிக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் உங்கள் வாழ்நாளில் உங்கள் கண் எதிரிலேயே கழகமும் அத்துடன் சேர்த்து உங்கள் குடும்ப நலன்களும் சிதைவதற்கு சாட்சியாக மாறிவிடுவீர்கள்.

ஆட்சிக்கு வந்தாலும் , வராவிட்டாலும் , திருந்துவதற்கான கடைசி வாய்ப்பு இது என்பதை உணருங்கள். இல்லையேல் காலம் உங்களை சரித்திரத்தின் குப்பைத்தொட்டியில் வீசிவிட்டுப் போய்விடும். நெஞ்சுக்கு நீதியை தரிசிக்கும் வாய்ப்பு உங்கள் முன்பு காத்துக் கொண்டிருக்கிறது.

**அன்புடன்**

**ஞாநி**

**அ**ன்புள்ள முன்னாள் முதலமைச்சர் செல்வி ஜெயலலிதா அவர்களுக்கு,

வணக்கம்.

உங்கள் பெயருக்கு முன்னாலிருக்கும் ‘முன்னாள்’ என்ற அடைமொழி தொடருமா, மாறுமா என்பது இன்னும் சில தினங்களில் தீர்மானமாகிவிடும்.

நீங்கள் மீண்டும் முதலமைச்சராகும் வாய்ப்பைப் பெற்றால், அது நிச்சயம் உங்கள் மீதான் நம்பிக்கையில் வந்த வாய்ப்பு அல்ல என்ற கசப்பான உண்மையை நினைவுபடுத்தக் கூடிய மிகச் சிலரில் நானும் ஒருவன்.

தேர்தல் சமயத்திலேயே மக்களுக்கு உங்கள் மீது பெரும் நம்பிக்கைகள் எதுவும் ஏற்பட்டுவிடவில்லை. வைகோவை நேரில் சென்று நீங்கள் சந்தித்து சமாதானப்படுத்தியிருந்தால், உங்கள் போக்கில் மாற்றம் வந்திருக்கிறது என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கும்.

எழுத்தாளர் வாஸந்தி எழுதியிருக்கும் உங்கள் வாழ்க்கை பற்றிய ஒரு நூலை அது வெளிவரும் முன்பே இடைக்காலத் தடையை நீதிமன்றத்தில் வாங்கியிருக்கிறீர்கள். உலகெங்கும் பிரபலமானவர்களின் வாழ்க்கை பற்றிய நூல்களைப் பலரும் எழுதுவது இயல்பானது. ஒரு சில நூல்களே பிரபலத்தின்

அங்கீகாரம் பெற்ற சரிதைகளாக இருக்கும். மீதி நூல்களுக்கு யாரும் தடை கோருவது இல்லை. சில ஆயிரம் பேர்களே படிக்கப் போகும் ஒரு புத்தகத்தை கூட சகிக்க முடியாமல் தடை வாங்கும் உங்கள் செயல், உங்கள் மனநிலை மாறவே இல்லை என்பதையே நிரூபிக்கிறது.

இப்படி எந்த விதத்திலும் யதேச்சாதிகார மனப்போக்கிலிருந்து மாறாமலே இருக்கும் நீங்கள் இந்த முறை ஆட்சியைப் பிடித்தால், அது உங்களுக்கான மக்கள் ஆதரவு அல்ல. கருணாநிதிக்கும் அவரது குடும்பம் சார்ந்த தி.மு.க ஆட்சிக்கும் எதிராக எழுந்த மக்கள் எழுச்சி மட்டுமே அது. அந்த எதிர்ப்புக்கு வடிவம் தர வேறொரு பெரும் கட்சியும் பெரும் தலைவரும் இல்லாததாலேயே, உங்களுக்கு அது வாய்ப்பாக மாறுகிறது.

அப்படியானால், கடந்த முறைகளில் நீங்கள் ஏன் வாய்ப்பை இழந்தீர்கள் என்பதை நினைத்துப் பார்ப்பது உங்களுக்கும் எங்களுக்கும் நல்லது.

கருணாநிதிக்கு குடும்பம்தான் பலம், பலவீனம்; உங்களுக்கென்று குடும்பம் இல்லாதிருப்பதுதான் உங்கள் பலம், பலவீனம் இரண்டுமே. குடும்பம் இல்லாததால், அதற்கென்று ஊழல் செய்யும் அவசியம் உங்களுக்கில்லை என்பது பலம். ஆனால் தனி வாழ்க்கையின் வெறுமையை அனுபவித்தாக வேண்டிய கட்டாயம் ஒரு வருத்தத்துக்குரிய நிலைமைதான்.

அன்றாட வாழ்க்கையில் இந்த வெறுமையை போக்கவும், உங்கள் தனி வாழ்க்கையை சீராக செலுத்தவும் உதவிட ஒரு நல்ல நண்பராக, உங்கள் வார்த்தைகளில் உடன்பிறவா சகோதரியாக ஒரு சசிகலா அமைந்தது உங்களுக்கு நல்ல விஷயம்தான். ஆனால் அதே சசிகலாவாலும், சசிகலாவுக்கும் அவரது ரத்த உறவுகளுக்கும் நீங்கள் காட்டி வந்த சலுகைகளாலும்தான் நீங்கள் கடந்த முறைகளிலெல்லாம் மக்களின் ஆதரவை பறி கொடுத்தீர்கள்.

எனவே இந்த முறை ஆட்சி அமைக்கும் வாய்ப்பு உங்களுக்குக் கிடைத்தால், என் வேண்டுகோள் இதுதான். தயவுசெய்து சசிகலாவை துணை முதலமைச்சராக்குங்கள். உங்களுக்கு அரசியலில் துணைபுரியும் அவரது சொந்தங்களை அமைச்சர்களாக்குங்கள். ஏனென்றால் அப்போதுதான் அவர்களுடைய செயல்களுக்கு அவர்களே நேரடியாக மக்களுக்கு பதில் சொல்லவேண்டிய கட்டாயம் ஏற்படும். இப்போது நீங்கள் அவர்களுடைய முகமூடியாக, கேடயமாக இருக்கும் சிக்கலில் சிக்கியிருக்கிறீர்கள்.

ஒரு ஸ்டாலினையோ, ஒரு அழகிரியையோ, ஒரு கனிமொழியையோ நாங்களும், ஏன் நீங்களும் விமர்சிக்கவும்

கேள்வி கேட்கவும் ஒரே அடிப்படை அவர்கள் பகிரங்கமாக அரசியலில் ஆட்சியில் இயங்கியதால்தான். சசிகலா குடும்பத்தினரும் அதே போல இயங்குவதுதான் சரியானது. சிறப்பாக இயங்கினால் பாராட்டவும் தவறுகள் செய்தால் தட்டிக் கேட்கவும் எங்களுக்கு மக்களுக்கு இருக்கும் உரிமையைப் பறிக்கும் திரை மறைவு அதிகாரத்தை அவர்களுக்கு நீங்கள் தரலாகாது. அப்படித் தருவது உங்களுக்கும் ஆபத்தானது என்பதே கடந்த கால வரலாறு. பகிரங்கமாக வரச் சொல்லுங்கள். இல்லையேல் அரசியல் அதிகாரத்திலிருந்து விலக்கி வையுங்கள்.

எத்தனையோ கோளாறுகள் இருந்தபோதும் கருணாநிதியின் பலம் என்பது அவர் மீடியாவை சந்திக்கவும் பதிலளிக்கவும் அது எத்தனை மழுப்பலானபோதும் தவறியதே இல்லை. இதை அவரிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும். மழுப்புவதை அல்ல. வாரா வாரம் மீடியாவை சந்தியுங்கள். உங்களை சுற்றிப் போட்டுக் கொண்டிருக்கும் இரும்புத்திரையால் இழப்பு உங்களுக்கு மட்டுமல்ல,மக்களுக்குத்தான்.

கருணாநிதிக்கு இல்லாத ஒரு பெரும் செல்வாக்கு கட்சிக்குள் எம்.ஜி.ஆருக்கும் உங்களுக்கும் எப்போதும் இருந்து வருகிறது. நீங்கள் யாரையும் வேட்பாளராக்கலாம், அமைச்சராக்கலாம். இந்த விசித்திர செல்வாக்கைப் பயன்படுத்தி தகுதியானவர்களை பொறுப்புகளுக்கு நியமியுங்கள். பகிரங்கமான நிர்வாகம், பகிரங்கமான அரசியல், பகிரங்கமான வாழ்க்கை முறை இவைதான் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படுத்தும்.

முக்கியமாக ஒரு வேண்டுகோள். கருணாநிதி ஆட்சியில் செய்யப்பட்டவை என்பதற்காக நல்ல திட்டங்களையெல்லாம் முடக்காதீர்கள். அவற்றை தொடர்ந்து நடத்துங்கள். மேம்படுத்துங்கள். அதிகபட்சம் பெயர் மாற்றிக் கொள்ளுங்கள்.

ஒருவேளை தி.முக.வே மறுபடியும் ஆட்சிக்கு வந்தால், அடுத்து நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பது முக்கியமானது. ரிப் வான் விங்கிள் போல அடுத்த ஐந்தாண்டுகள் தூங்கி எழுந்து தேர்தல் நேரத்தில் வந்தீர்களானால், கட்சியே காணாமல் போயிருக்கும். உண்மையில் 2011 தேர்தல் தி.மு.கவுக்கு மட்டும் வாழ்வா சாவா தேர்தல் அல்ல. உங்கள் கட்சிக்கும்தான். அடுத்த ஐந்தாண்டுகளில் நீங்கள் எழுபதை எட்டிப் பிடிப்பீர்கள். இதர கட்சிகளிலெல்லாம் இளைய தலைமுறைத் தலைவர்கள் அதிகமாகியிருப்பார்கள். எம்.ஜி.ஆருக்குப் பிறகு அ.தி.மு.க என்ன ஆகும் என்ற கேல்வி எழுந்தபோது நீங்கள் பதிலாகக் கிடைத்தீர்கள். உங்களுக்கு அடுத்து யார் என்றால் யாரும் இல்லை, சசிகலாதான் என்றால் அ.தி.மு.கவை வேகமாக அழிக்க அதை

விட சிறந்த வழி இல்லை.

எம்.ஜி.ஆர் அ.தி.மு.கவை உருவாக்கியபோது என்ன சூழல் இருந்தது என்பதை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். அண்ணா உருவாக்கிய லட்சியத்திலிருந்து தி.மு.க விலகிய சமயத்தில் காமராஜர் அதை அம்பலப்படுத்தினார். எம்.ஜி.ஆர் எச்சரிக்கை மணி அடித்தார். மீண்டும் தடமேறும் இயக்கம் என்ற நம்பிக்கையே அன்றைய இளைஞர்கள் பலரை எம்.ஜி ஆரை நோக்கி ஈர்த்தது. தொடர்ந்து அ.தி.மு.க அவர் தலைமையிலும் உங்கள் தலைமையிலும் தி.மு.கவைப் போலவே இன்னொரு தடம் புரண்ட இயக்கமாகவே இருந்து வருகிறது.

தமிழ்நாட்டின் இதர அரசியல் தலைவர்கள் யாரும் விரும்பாமல் அரசியலுக்குள் நுழைந்தவர்கள் அல்ல. நீங்கள் ஒருவர்தான் விருப்பமில்லாமல் இதற்குள் வர நேரிட்டவர். எனவே அரசியலில் எதிர்க்கட்சியாகவும் சரியாகப் பணியாற்ற விரும்பாவிட்டால் அந்த இடத்தை இன்னொருவரிடம் கொடுத்துவிட்டு நீங்கள் விரும்புகிறவற்றைச் செய்ய நீங்கள் போய்க் கொண்டே இருக்கலாம்.

வாழ்க்கை சிலருக்கு அவர்கள் விரும்புவதையே செய்ய தொடர்ந்து வாய்ப்புகள் அளித்து வருகிறது. அப்படிப்பட்டவர்களில் ஒருவர் கருணாநிதி. வேறு சிலருக்கு அவர்கள் விரும்பாவிட்டாலும் ஒன்றில் ஈடுபட்டாகவேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்துகிறது. அம்மாவின் கட்டாயத்தால் சினிமாவுக்கு வந்தீர்கள். எம்.ஜி.ஆரின் கட்டாயத்தால் அரசியலுக்கு வந்தீர்கள்.

இந்த முறை ஜெயித்தாலும் தோற்றாலும் ஒன்றை நீங்கள் நினைவில் வையுங்கள். இதுதான் உங்களுக்கும் கடைசி வாய்ப்பு. அரசியல் பெரிதாக மாறிக் கொண்டே இருக்கிறது. நீங்கள் விரும்புவதை வாழ்க்கையில் செய்யக் கிடைத்த வாய்ப்பாக இந்த முறையை பயன்படுத்துங்கள்.

**அன்புடன்**

**ஞாநி**

## இந்த வாரப் பூச்செண்டு

தாதா சாகிப் பால்கே விருது பெற்ற இரண்டாவது தமிழர் இயக்குநர் கே.பாலசந்தருக்கு இ.வா.பூ. சினிமா இயக்குநரின் மீடியம்தான், நட்சத்திர நடிகர்களின் மீடியம் அல்ல என்பதை தொடர்ந்து நிரூபித்த முன்னோடி கே.பி என்பதே அவரது சாதனை.

***கல்கி 7.5.2011***

**(அடைப்புக் குறிக்குள் இருக்கும் வரிகள் இதழில் வெளியிடப்படவில்லை.)**

# ப்ளஸ் டூ ப்ளஸ்
# சில க வலைகள்.

இந்த வருடமும் ப்ளஸ் டூ தேர்வுகளில் வழக்கம் போல மாணவிகளின் தேர்வு சதவிகிதம் அதிகமாக இருக்கிறது. மாணவிகளில் 89 சதவிகிதம் பேரும் மாணவன்களில் 82.3 சத விகிதம்பேரும் தேறியிருக்கிறார்கள்.

இது பற்றி எனக்கு ஒரு புறம் மகிழ்ச்சி; மறுபுறம் கவலை. ஏனென்றால் குறைவான மதிப்பெண் பெற்றிருந்தாலும் பையன்கள் மேற்படிப்புக்கு அனுப்பப்படுவதும், அதிக மதிப்பெண் வாங்கியிருந்தாலும் பெண்ணை ப்ளஸ் டூவுடன் நிறுத்திவிடுவதும் நலிவுற்ற பிரிவினர் மத்தியில் இன்னும் சகஜமாக இருக்கிறது.

செங்கல் சூளையில் வேலை பார்த்துக் கொண்டே நர்சிங்கில் மாநில முதலிடம் பெற்றிருக்கும் பழநி மாணவி இருளாயி, தீப்பெட்டி ஆலையில் வேலை பார்த்து படித்த சாத்தூர் மாணவி மாலதி, பொள்ளாச்சி சேரிப்பாளையம் விவசாயக் கூலியின் மகள் ஜீவா நந்தினி என்று நிறைய நலிவுற்ற குடும்பப் பெண்கள் தேர்வுகளில் சாதித்திருக்கிறார்கள். இவர்களில் எத்தனை பேர் மேற்படிப்புக்குச் செல்லும் வாய்ப்பைப் பெறுவார்களென்பது சந்தேகமாகவே இருக்கிறது. கல்விக் கடன் பெறுவது என்பது இன்னமும் நடுத்தரக் குடும்பங்களுக்கே சிக்கலாக இருக்கும்போது ஏழைக் குடும்பங்கள் ஆங்காங்கு மனசாட்சியுடன் இயங்கும் ஓரிரு ஐ.ஏ.எஸ் அதிகாரிகளையும் வங்கி மேலாளர்களையும் மட்டுமே நம்பியிருக்கிறது.

நலிவுற்ற பிரிவுகளைச் சேர்ந்த மாணவ மாணவிகள் பல தடைகளை மீறி சாதிக்கிறார்கள் என்பதற்கு இந்த வருட சென்னை மாநகராட்சி மாணவர்களே சான்று.

அந்தப் பள்ளி மாணவிகளில் 90.49 சதவிகிதம் பேர் தேர்வு பெற்றிருக்கிறார்கள். மாணவன்களில் 78.74 சதவிகிதம்.

மாநில அளவில் முதலிடம் பெற்றிருக்கும் ஒரு மாணவியின் தாய் தந்த பேட்டியைப் படித்ததும் எனக்கு மனம் வலித்தது. அந்த மாணவி தனியார் பள்ளியில் படித்தவர். தாயோ அரசுப் பள்ளியில் ஆசிரியை. அரசுப் பள்ளியில் கல்வியின் தரம் குறைவாக இருக்கும் என்று அவர் சொல்கிறார். ஏன் குறைவாக இருக்கிறது என்பதற்கான காரணங்களில் ஆசிரியர்களும் அடக்கம்.

என்னைப் பொறுத்த வரையில் 60 சதவிகிதத்துக்கு மேல் மார்க் வாங்குவோர் அனைவரின் புத்திசாலித்தனமும் ஒன்றுதான். மனப்பாடத் திறமைகள் மட்டுமே வேறுபட்டவை. குடும்பத்தில் படித்தவர்கள் இல்லாத சூழல், ஆசிரியர்களில் பலர் போதுமான அக்கறை காட்டாத நிலை என்பதையெல்லாம் மீறித்தான் அரசு பள்ளி மாணவர்கள் 90 சதவிகித மதிப்பெண்கள் வரை எடுக்கிறார்கள். அந்த மாணவரின் 60ம் தனியார் பள்ளி மாணவரின் 90ம் எனக்கு சமமானவைதான்.

ஏழை மாணவர்களுக்கு தரமான கல்வி கிடைக்க வழி செய்யும் கல்விக்கான உரிமைச்சட்டத்தின் கீழ் தனியார் பள்ளிகள் மொத்த மாணவர்களில் 25 சதவிகிதம் வரை ஏழை மாணவர்களுக்கு இடம் தரவேண்டுமென்று இப்போது விதிக்கப்பட்டிருக்கிறது. இதை எதிர்த்து சென்னையில் சில மேட்டுக்குடி பள்ளிகள் பெற்றோருக்கு அனுப்பிய சர்க்குலரைப் படித்ததும் எனக்கு ரத்தம் கொதிக்கிறது.

அந்த ஏழை மாணவர்களின் பெற்றோர்கள் கிரிமினல்களாக இருப்பார்களாம். சுத்தமில்லாமல் இருப்பார்களாம். அந்தக் குழந்தைகளுடன் உங்கள் குழந்தைகள் சேர்ந்து படித்தால் கெட்டுப் போய்விடுவார்கள். நோய்கள் வரும். பாதுகாப்புக்கு உத்தரவாதமில்லை, எனவே எங்களுடன் சேர்ந்து நீங்களும் சட்டத்தை எதிர்க்கவேண்டும் என்று சர்க்குலர்களில் விஷம் கக்கியிருக்கிறார்கள். எனக்கு அதிகாரம் கிடைத்தால் இந்த பள்ளி நிர்வாகங்களை சிறையில் தள்ளி அந்தப் பள்ளிகளை அரசுடைமையாக்கிவிடுவேன். இப்படிப்பட்ட சமூகவிரோத சிந்தனையுள்ளவர்கள் கல்வித்துறையில் இருக்கவே தகுதியற்றவர்கள்.

1978 வரை தமிழ்நாட்டிலும் இந்தியாவின் பல இடங்களிலும் ஏழைகளும் மிடில் க்ளாசும், பணக்காரர்களும் ஒரே பள்ளிகளில்தான் படித்தார்கள். சி.வி.ராமன், ராமானுஜம் முதல் அப்துல் கலாம் வரை இப்போது 50 வயதுக்கு மேற்பட்ட சகல

துறைப் பிரபலங்களும் அறிஞர்களும் அப்படித்தான் படித்தார்கள்.

எல்லாருக்கும் சமமான தரமான கல்வி என்பதுதான் அப்போதைய அணுகுமுறையாக இருந்தது. எண்பதுகளில்தான் இது மாறி காசுக்கேத்த கல்வி என்று திரிக்கப்பட்டது. கல்வி முறையே அறிவைப் பெறுவதற்கான வழி என்று இருந்தது போய், மதிப்பெண் வாங்குவது மட்டுமே நோக்கம் என்றாக்கப்பட்டது. குழந்தைகள் மார்க் வாங்கும் மெஷின்களாக ஆக்கப்பட்டார்கள். அதைத் தவிர வேறு எந்த பொது அறிவும் ரசனையும் இல்லாத அறிவிலிகளாக வார்க்கப்பட்டார்கள்.

மாநில முதல் மார்க் வாங்கிய மாணவியின் தாய் சொல்லியிருக்கிறார். நான்கு வருடங்களாக அவர்கள் வீட்டில் கேபிள் கனெக்ஷனே கிடையாதாம்.சின்னவள் அடுத்து ப்ளஸ் டூ செல்வதால் அடுத்த 4 வருடத்துக்கும் கிடையாதாம். என்ன மூடத்தனம்! டெலிவிஷனை எப்படிப் பயன்படுத்த வேண்டும், எத்தனைநேரம் பயன்படுத்த வேண்டும் என்று குழந்தைகளுக்கு சொல்லித் தரவேண்டுமே தவிர முழுமையாகத் தடை விதிப்பது குழந்தையின் ஆளுமையையும் உளவியலையும் பாதிக்கும். இந்த மாதிரி வீடுகளில் கலை, இலக்கியம் எதற்கும் இடம் இராமல் போய்விடும். குழந்தைகள் மார்க் தயாரிக்கும் மெஷினிலிருந்து பணம் தயாரிக்கும் மெஷினாக மாறுவது மட்டுமே நடக்கும்.

இப்படிப்பட்ட சிக்கலான சூழல்களில் நமது பெண் குழந்தைகளுக்குக் கூடுதல் ஆபத்தும் இருக்கிறது. அடுத்து அவர்கள் குழந்தை தயாரிக்கும் மெஷின்களாக ஆக்கப்படுகிறார்கள்.

இருபதிலிருந்து 24 வயதுக்குட்பட்ட பெண்களில் 18 வயதிலேயே திருமணமாகிவிட்டவர்களின் எண்ணிக்கை இந்தியாவில் 47 சத விகிதம் என்று ஆய்வு முடிவுகள் வந்திருக்கின்றன. நாம் எப்போதும் பழித்துக் கொண்டிருக்கும் பாகிஸ்தானில் இது 24 சதவிகிதம்தான். நாம் பரிதாபப்படுகிற ஆப்ரிக்காவில் கூட 38 சதவிகிதம்தான்.

திருமணம் பெண்ணின் எல்லா கனவுகளையும் முறித்துப் போடுகிறது. கல்யாணமாகிவிட்டால், மேலே படிப்பாயா, வேலைக்கு தொடர்ந்து போவாயா,விட்டுவிடுவாயா என்ற கேள்விகளை ஒருபோதும் ஆண்கள் சந்திக்க வேண்டிய அவசியமே இங்கு இல்லை. இந்தக் கேள்விகளுக்கு பதில் சொல்லாமல் ஒரு பெண்ணும் திருமண வாழ்க்கைக்குள் நுழையும் வாய்ப்பும் இல்லை.

சிங்கப்பூர், அமெரிக்கா, திருப்பூர், மதுரை, திருச்சி என்று நான் செல்லும் வெவ்வேறு இடங்களிலெல்லாம் திடீரென்று ஏதோ ஒரு பெண் வந்து , 'சார், என்னை நினைவிருக்கிறதா?' என்று

கேட்கும்போது அடுத்து தெரியவரும் தகவல்கள் என் அடிமனதில் வேதனையை ஏற்படுத்துகின்றன. உங்களிடம் இதழியல் படித்தேன். மொழிபெயர்ப்பு படித்தேன். நாடகப் பயிற்சி முகாமில் இருந்தேன். வாழ்க்கைக் கல்விப் பயிலரங்கில் இருந்தேன், கல்லூரிக் கருத்தரங்குக்கு நான்தான் உங்களை அழைத்துச் சென்றேன்... என்றெல்லாம் விதவிதமாக நினைவுபடுத்தும் பல பெண்களிடம் 'இப்போது என்னம்மா செய்கிறாய் ?' என்று நான் கேட்ட மறு நொடி, அவர்களில் பெரும்பாலோரின் கண்களில் ஒரு சோகம் மின்னி மறைவதைக் கண்டு நானும் துயரப்படுகிறேன்.

குழந்தை, கணவன், குடும்பம் என்று அவர்கள் வாழ்க்கை சிறு வட்டத்தில் சுருங்கிவிட்டதை நாசூக்கான வார்த்தைகளில் பகிர்ந்துகொள்கிறார்கள். தாய்ப்பால் தருவதைத் தவிர குழந்தை வளர்ப்பில் மீதி அத்தனையும் ஆணுக்கும் சாத்தியமானதே என்கிறபோது, அவன் வாழ்க்கையும் கனவுகளும் மட்டும் தொடர்ந்து விரிவடைவதாகவும் பெண்ணின் வாழ்க்கை மட்டும் சுருக்கப்படுவதாகவும் இருப்பது மிகப் பெரிய ஒரு மனித உரிமை மீறலன்றி வேறென்ன ?

மார்க், தேர்வு, வேலை , சம்பளம், திருமணம் இதெல்லாம் நம் வாழ்க்கையில் சில முக்கியமான தருணங்கள், மைல்கற்களே ஒழிய அவையே வாழ்க்கை அல்ல. சக மனிதர்களுடன் கூடி வாழ, நம் ஆற்றல்களை செழுமைப்படுத்தி சிந்திக்க, ரசிக்க, சந்தோஷப்பட, பகிர்ந்துகொள்ள, நம்மை முழுமையான மனிதராக்கிக் கொள்வதே நம் லட்சியமாக இருக்க வேண்டும். கல்வியும் மார்க்கும் அதற்கு உதவுவதற்கு பதில் எதிராக இருப்பதுதான் நம் சமூகத்தின் மிகப்பெரிய சோகம்.

**இந்த வார ஆறுதல்:**

சமூகத்தின் பிற்போக்கான பார்வையை மாற்றவேண்டிய பெரும் கடமை இருக்கும் சக்தி வாய்ந்த மீடியா சினிமா. அது மாற்றாவிடாலும் பரவாயில்லை. மேலும் கெடுப்பதாகவே பெரும்பாலும் இருக்கிறது. விதிவிலக்காக ஓரிரு படங்கள் வரும்போது பெரும் ஆறுதலாக இருக்கிறது. இந்த வாரம் அப்படி நான் பார்த்து மகிழ்ந்தது இயக்குநர் சுசீந்திரனால் படமாக்கப்பட்டிருக்கும் எழுத்தாளர் பாஸ்கர் சக்தியின் குறுநாவலான 'அழகர்சாமியின் குதிரை'. விரசம், கண்மூடித்தனமான வன்முறை இரண்டும் இன்னும் ஆதிக்கம் செலுத்தும் தமிழ் சினிமாவில் இவை இரண்டும் துளியும் இல்லாமல் அதே சமயம் ரசிக்கத் தகுந்ததாக உருவாக்கிய படக்குழுவுக்கு இ.வா பூச்செண்டு தரலாம். மெலிதான நகைச்சுவை, திருவிழாவும் சாமியும் கிராமத்தில் ஏற்படுத்தும் குதூகலத்தின் கூடவே இழையோடும்

பகுத்தறிவு, மிக எளிமையான முகங்களின் தேர்ந்த நடிப்பு என்று பல விதங்களில் இந்தப் படம் என்னை மகிழ்வித்தது. மதுரை, தேனி வட்டாரப் படங்கள் என்றாலே வெட்டு குத்து ரத்தக்களறி என்று புதிய இயக்குநர்கள் ஆக்கிவைத்திருப்பதை சுசீந்திரன் தகர்த்திருக்கிறார்.

**இந்த வாரப் பூச்செண்டு:**

பார்வைக் குறைபாடுள்ள மாற்றுத் திறனாளிகளும் செனை லிட்டில் பிள்வர் பள்ளி மாணவிகளுமான சங்கீதா, துர்காதேவி, வெண்ணிலா மூவரும் புவியியல் தேர்வில் பெரும் சாதனை செய்திருப்பதற்கு இ.வா.பூ. மதுரையில் இந்திய பார்வையற்றோர் சங்கம் நடத்தும் பள்ளியில் தொடர்ந்து எட்டு ஆண்டுகளாக நூறு சதவிகித தேர்ச்சி பெறுவதற்காக இ.வா.பூ.

**இந்த வார வேதனைக் கேள்வி:**

கனிமொழியின் வக்கீல் ராம்ஜெத்மலானி, ராசாவை வேண்டுமானால் ஸ்பெக்ட்ரம் சதிகாரர் என்று சொலல்லாமே தவிர தன் கட்சிக்காரருக்கு ஒரு தொடர்பும் இல்லை என்று நீதிமன்றத்தில் வாதிட்ட அதே நாளில் அதே மன்றத்தில் ராசா, கருணாநிதியின் மகள் கனிமொழியின் தாயார் ராசாத்தி அம்மாளின் காலைத் தொட்டு வணங்கிய செய்தி படிக்க வேதனையாக இருந்தது. ஸ்பெக்ட்ரம் விஷயத்தில் ஒரு முறைகேடும் நடக்கவில்லை என்று வாதிடும் தி.மு.க கட்சி சார்பில் கனிமொழி, ராசா இருவருக்காகவும் வாதாட ஒரே வக்கீலாக ராம்ஜெத்மலானியை நியமித்திருக்கலாமே? ஏன் செய்யவில்லை ?

***கல்கி 14.5.2011***

# மாற்றம் அடுத்தது ஏமாற்றமா ? ஏற்றமா?

ஆட்சி மாற்றத்தை தமிழக மக்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். தி.மு.கவின் குடும்ப ஆட்சி, ஊழல் ஆட்சி, அராஜக ஆட்சிக்கு எதிராக உள்ளுக்குள்ளேயே குமுறிக் கொண்டிருந்த தமிழக மக்கள் வெளியே எதையும் காட்டிக் கொள்ளமல், மௌனப் புரட்சியாக பெருமளவில் வாக்குச்சாவடிகளுக்குத் திரண்டு வந்து தங்கள் எதிர்ப்பைக் காட்டியிருக்கிறார்கள்.

அ.தி.மு.க ஆட்சியில் ஒரு குடும்பத்தின் ஆதிக்கம், ஊழல், அராஜகம் இதெல்லம எதுவும் இராது என்ற நம்பிக்கையில் ஒன்றும் மக்கள் இப்படி வாக்களித்துவிடவில்லை. இருக்கிற ஆட்சியை சகிக்க முடியாத நிலை வந்தபோது 1996ல் என்ன செய்தார்களோ அதே போலத்தான் இப்போதும் செய்திருக்கிறார்கள். அப்போதும் அது தி.முகவுக்கு ஆதரவான ஓட்டு அல்ல; இப்போதும் அ.தி.மு.கவுக்கு ஆதரவான ஓட்டு அல்ல. மூன்றாவதாக சிறந்த ஒரு மாற்று உருவாகாதவரையில் மக்கள் இப்படித்தான் வாக்களிக்க முடியும் என்பதுதான் யதார்த்தம்.

கருணாநிதியின் ஆரம்ப ஆண்டுகளில் அவர் தி.மு.கவின் உதயத்தையும் வளர்ச்சியையும் பார்த்தவர். அவரது அந்திம ஆண்டுகளில் அதே தி.மு.கவின் சிதைவுக்குக் காரணமாகவும் சாட்சியாகவும் அவர் இருக்கிறார். இதற்கு முழுக் காரணம் அவரது குடும்பமும் அவர்களுடைய சுயநலமும்தான்.

இனி எஞ்சியிருக்கும் தி.மு.கவைக் காப்பாற்ற வேண்டுமானால் அதைக் குடும்பத்தின் பிடியிலிருந்து புதிய தலைமுறை தி.மு.க இளைஞர்கள் மீடகவேண்டும்.

அல்லது குறைந்தபட்சம் வாரிசு அடிப்படையில் வராமல் கட்சிப்பணி அடிப்படையில் மேலே வந்த ஸ்டாலின், இதர குடும்பத்தினரை கட்சியிலிருந்து ஒதுக்கிவிட்டு கட்சிக்கு புது ரத்தம் பாய்ச்ச முயற்சித்து தந்தையின் பாவங்களுக்கு பரிகாரம் செய்ய முயலலாம்.

தி.மு.க மீண்டும் தழைக்க பேருதவி செய்யக் கூடிய யாரேனும் உண்டென்றால் அது ஜெயலலிதாதான். ஆட்சியில் அமர்ந்தவுடன் பழைய தவறுகளையும் தி.மு.கவிடமிருந்து கற்ற புதிய தவறுகளையும் அவர் செய்தால், அதுவே தி.மு.கவுக்கு உயிர் கொடுக்கும். 1996ல் அவர் ஆட்சியை இழந்ததற்கு முக்கியக் காரணம் சசிகலாதான். சசியின் குடும்பத்தை தன் குடும்பமாகக் கருதி வளர்ப்பு மகன் திருமணத்தை ஆடம்பரமாக நடத்தி மக்கள் வெறுப்பைட் சம்பாதித்தார். சசிகலாவின் பல்வேறு உறவினர்கள் திரை மறைவில் அதிகாரம் செலுத்தினார்கள்.. இப்போது மீண்டும் அதே தவறுகளை ஜெயலலிதா செய்தால் அதே விளைவுகள்தான் ஏற்படும் என்பதற்கு கருணாநிதிக்கு ஏற்பட்ட கதியே சாட்சி.

சசிகலாவை பகிரங்கமான அரசியலில் ஈடுபடுத்தி அவருக்கு துணை முதல்வர் பதவி கொடுத்தால் கூட நான் வரவேற்பேன். அரசியல் நிர்வாகத்தில் பொறுப்புகளை ஒருவர் பகிரங்கமாக ஏற்று செயல்பட்டால்தான் மக்களும் பகிரங்கமாக விமர்சிக்கவும் கேள்வி கேட்கவும் பொறுப்பேற்கச்செய்யவும் முடியும். அப்படி இருந்ததால்தான் அழகிரியை, கனிமொழியை தி.மு.க ஆட்சியில் கேள்வி கேட்டு பதில் சொல்லவைக்க முடிந்தது.

ஜெயலலிதா ஆட்சியில் நான் என்ன எதிர்பார்க்கிறேன் ? முதலமைச்சர் வாராவாரம் பத்திரிகைகளை மீடியாவை சந்திக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன். முந்தைய ஆட்சியில் நடந்த நல்வாழ்வுத்திட்டங்களை நிறுத்தாமல் தொடர வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன். ஒவ்வொரு அமைச்சர் பதவிக்கும் தகுதியானவர்களை நியமித்து அவர்களை சுதந்திரமாக செயல்படவிடவேண்டுமென்று எதிர்பார்க்கிறேன்.

கருணாநிதி அரசு செய்து வந்த அத்தனை ஊழல்களையும் தனக்கு வேண்டியவர்களுக்குக் கை மாற்றிவிட்டு அதே ஆட்சிமுறையைத் தொடரக் கூடாதென்று எதிர்பார்க்கிறேன்.

ஈழத்தமிழர்பிரச்சினையையும்தமிழகமீனவர்பிரச்சினையையும் தமிழ்நாட்டுப் பிரச்சினை மட்டுமல்ல, இந்தியாவின் பிரச்சினை என்று இந்தியாமுழுவதும் உள்ள எல்லா அரசியல் கட்சிகளுக்கும் புரியவைத்தால்தான் இந்திய அரசை இதில் ஒழுங்கான கவனம் சேலுத்த நிர்ப்பந்திக்கமுடியும் என்பதால், இதற்கு முன்பு

கருணாநிதி முதல் நெடுமாறன் வரை செய்த அதே தவறைச் செய்யாமல், அனைத்திந்திய கட்சித்தலைவர்களையும் திரட்டி ஆதரவு திரட்டும் முயற்சியில் ஜெயலலிதா ஈடுபடவேண்டுமென்று விரும்புகிறேன். இதுதான் தனக்கும் கடைசி வாய்ப்பு என்று கருதி கட்சியையும் ஆட்சியையும் தொடர்ந்து காப்பாற்ற சரியான அடுத்த வரிசை தலைவர்களை உருவாக்க முயற்சிக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன்.

அறிவித்த இலவசங்களையெல்லாம் நிறைவேற்றாவிட்டாலும் பரவாயில்லை; மதுவிலக்கை செயல்படுத்தி எல்லா மதுக்கடைகளையும் மூடி மக்கள் தங்களுக்கு தேவையானதை தாமே வாங்கிக்கொள்ளும் சக்தியை உருவாக்கித்தரவேண்டுமென்று விரும்புகிறேன்..

என் எதிர்பார்ப்புகள், விருப்பங்களுக்கெல்லாம் ஏதேனும் வாய்ப்பு இருக்கிறதா என்பது மூன்றிலிருந்து பதின்மூன்று வாரங்களுக்குள் தெரிந்துபோய்விடும்.

பொறுப்பான ஒரு எதிர்க்கட்சியாக செயல்படும் வாய்ப்பு விஜய்காந்த்துக்குக் கிட்டியிருக்கிறது. இடதுசாரிகளுடன் இணைந்து செயல்பட்டால் அதை அவர் ஓரளவு நிறைவேற்றமுடியும். இல்லாவிட்டால், அடுத்த தேர்தலில் பா.ம.க., விடுதலை சிறுத்தைகள் போல அவர் கட்சியும் கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாகிவிடும்.

இடிக்கவேண்டியதை மக்கள் சரியாகவே இடித்துத் தள்ளியிருக்கிறார்கள். அங்கே கட்டவேண்டியதைக் கட்டப் போகிறோமா என்பது இனிமேல்தான் தெரியும்.

பின்குறிப்பு: இந்தத் தேர்தலின் மிகப் பெரிய டிராஜெடி காமெடியன் வடிவேலுதான். 1996ல் மனோரமா. இப்போது வடிவேலு.

***சண்டே இந்தியன் 15.5.2011***

# பாதல் சர்க்கார்

என் நாடக உலக ஆசான்களில் ஒருவரான வங்க நாடகாசிரியர் இயக்குநர் பாதல் சர்க்கார் மே 13 அன்று கொல்கத்தாவில் தன் 87ம் வயதில் காலமானார். என் வாழ்க்கையின் முக்கியமான மைல் கற்களில் அவர் ஒருவர். 1980ல் நாங்கள் சென்னையில் வீதி நாடக இயக்கம் நடத்திக் கொண்டிருந்தபோது அதன் சார்பில் அழைக்கப்பட்டு அவர் சோழமண்டலில் அளித்த பயிற்சி முகாம் தமிழ் நாடக வரலாற்றில் முக்கிய இடத்துக்குரியது. அவரை சந்திப்பதற்கு முன்பே பரீக்ஷாவில் நாங்கள் அவருடைய ஏவம் இந்திரஜித் நாடகத்தை நிகழ்த்தியிருந்தோம். தமிழ் மேடையில் பாதல் சர்க்கார் நாடகங்களை முதலில் அறிமுகப்படுத்திய பெருமையும் மகிழ்ச்சியும் எங்களுக்குரியது. அதற்கு நான் அடிப்படையில் தமிழ் வாசகர்களுக்கு பாதல் சர்க்காரை அறிமுகம் செய்து அவர் நாடகங்களை மொழிபெயர்த்த கோ.ராஜாராமுக்கும் பிரக்ஞை இதழுக்கும் நன்றி சொல்ல வேண்டும். அடுத்து அவருடைய மிச்சில் (தேடுங்கள்), போமா (முனியன்), பாக்கி இதிஹாஸ் (பாலு ஏன் தற்கொலை செய்துகொண்டான் ?) நாடகங்களைத் தமிழில் நடத்தினோம். தமிழ் நாட்டில் நவீன நாடகத்துறையில் ஒரு நாடகாசிரியருக்கென்று தனி நாடக விழா முதன்முதலில் நடத்தப்பட்டது பாதல் சர்க்காருக்குத்தான். திருச்சி நண்பர்கள் அங்கே ஏற்பாடு செய்திருந்த விழா அது. 1983ல் என் திருமணத்தையொட்டி பாதல் சர்க்காரின் தேடுங்கள் நாடகத்தை நடத்தினோம். நாடக மேடையில் மாலை மாற்றி திருமணம் செய்தோம். இந்தியாவில் எனக்குப் பிடித்த நாடகாசிரியர்கள் இருவர்தான். இருவரும் இறந்துவிட்டார்கள் என்பது வருத்தமாக இருக்கிறது. இன்னொருவர் விஜய் டெண்டுல்கர். ஜூலையில் பாதல் சர்க்கார் பிறந்த

நாளையொட்டி அவர் நாடக விழாவை பரீக்ஷா நிகழ்த்த திட்டமிட்டுக் கொண்டிருக்கிறோம். ஐந்து வருடங்களுக்கு முன்பு கல்கத்தாவில் பாதல் சர்க்காரை வீட்டுக்கு சென்றுச் சந்தித்தேன். அவர் கவனம் நாடகத்தை விட்டு நீங்கி பயணங்களில் இருந்தது. கடும் முதுமையின் தனிமையில் இருந்தார். இறுதி நாட்களில் நிறைய நாடகம் எழுதுதல், வாசித்தலில் ஈடுபட்டார் என்று அறிகிறேன். அவர் உடலை மருத்துவ ஆராய்ச்சிக்கு தானம் செய்திருந்தார்.

அன்புள்ள பாதல், உங்களை எப்போதும் மறக்கமாட்டேன். எனக்கு நீங்கள் தந்தவை எப்போதும் என்னுடன் இருக்கும்.

***இணையத்தில் 15.5.2011***

குறிப்பு

ஜுலை நாடகவிழாவுக்கு பதில், பாதல் சர்க்காரின் இரு நாடகங்களை (முனியன், தேடுங்கள்) சென்னை, பெசண்ட் நகர் ஸ்பேசஸ் அரங்கில் மாதாமாதம் முதல் ஞாயிறன்று நான்கு மாதங்கள் நிகழ்த்தினோம்.




ஞாநி

பத்திரிகை, நாடகம், தொலைக்காட்சி, சினிமா, இளைஞர், பெண்கள், சிறுவர், மனித வள மேம்பாடு ஆகிய துறைகளில் ஈடுபட்டு வரும் ஞாநியைக் கடந்த 35 வருடங்களாக இயக்கி வருவது சக மனிதர்கள் மீது இருக்கும் அன்பும் மனித சமத்துவத்துக்கான ஆவலும்தான்.

*ஞாநி எழுதி இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்:*
*கட்டுரைகள்:* பழைய பேப்பர், மறுபடியும், கண்டதைச் சொல்லுகிறேன், மீடியா உறவுகள், சமூகப் பாலினம், மீடியாவும் கல்வியும், கேள்விகள், நெருப்பு மலர்கள், அயோக்கியர்களும் முட்டாள்களும், பேய் அரசு செய்தால், எதிர்காலத்தைக் கேள்விக்குறியாக்கும் இன்றைய அரசியல், அறிந்தும் அறியாமலும், ஓ பக்கங்கள் (ஆறு தொகுதிகள்). கேள்விகள், மனிதன் பதில்கள்.

*திரைக்கதை வடிவம்:* அய்யா. *நாவல்:* தவிப்பு.
*நாடகங்கள்:* பலூன், ஒரு விசாரணை, 'எண்'மகன், வட்டம், சண்டைக்காரிகள்.

*ஞாநி இயக்கியவை:* விண்ணிலிருந்து மண்ணுக்கு, பிக்னிக், பூக்குட்டி, காதலென்ன கத்தரிக்காயா, வேர்கள், அய்யா, ஆனந்தி *(தொலைக்காட்சித் தொடர்கள்).* பரீக்ஷாவுக்காக 30க்கு மேற்பட்ட நாடகங்கள், ஒற்றை ரீல் இயக்கத்துக்காக திருமதி ஜேம்ஸ் இப்போது என்ன செய்ய வேண்டும்?. உள்ளேன் அய்யா *(திரைப்படங்கள்).* கோலம் இயக்கத்துக்காக: விசாரணை *(முழுநீள வீடியோ படம்)*

ஞாநி (1954)



தொடர்புக்கு :
gnanisankaran@gmail.com. www.gnani.net